First Edition - 1998
Copies - 1000


---

Price : **Rs.60.00**

Copies can be had from:

**SRI ENTHUR SADAGOBA RAMANUJA DASAN,**
C/o. R. Perumal Ramanuja Dasan,
No.1, Kamaraj Street,
Indira Nagar, Mudaliarpet,
Pondicherry - 605 004.

**சீர்திருத்தச் செம்மல் ஸ்ரீராமாநுஜர் இயக்கம்**
**நெ.93, பெருமாள் கோவில் வீதி,**
**புதுச்சேரி – 605 001.**

---

Printed at:
*Vaigai Computer Printing*
139, Petit Canal St., Pondicherry-1.
Phone : 34119, 35174, 42492

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அலர்மேல் மங்கையந்தாதியும் அதன் சார்பு நூல்களும்

உரையுடன்

புதுவை ஸ்ரீஉலகளந்தான் ஸபை வெளியீடு – 5


நூலாசிரியர்:

ஏந்தூர் சடகோப ராமாநுஜதாஸர்

பதிப்பாசிரியர்:

R. பெருமாள்ராமாநுஜம்

(புதுவை உலகளந்தான் பொன்னடியார் ஸபை, செயலர்)



**This book is published with the Financial Assistance of Tirumala Tirupathi Devasthanam under their scheme "Aid to Publish Religious Books"**

**20.08.1998**

# பிழைத்திருத்தம்

**இப்பிழைகளை முன்னம் பக்கங்களில் திருத்திக் கொள்வதவசியம்.**

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 13 | 20 | எம்பெருமானோட | எம்பெருமானோடே |
| 15 | 26 | தொண்டுமொன்நே | தொண்டுமொன்றே |
| 24 | 20 | உகப்பிணைக்கண்டு | உகப்பினைக்கண்டு |
| 25 | 31 | அத்தினாபுரி | அத்திகிரி |
| 27 | 13 | செவிமடுத்தீர் கள் | செவிமெடுத்தீர் கள் |
| 27 | 15 | செவிமடுத்தீர் | செவிமெடுத்தீர் |
| 32 | 19 | யோகசாரங்க முனிவர் | லோகசாரங்க முனிவர் |
| 39 | 29 | ஆதராம்ருதம் | அதராம்ருதம் |
| 40 | 1 | வளட்டில் | வானாட்டில் |
| 40 | 15 | துயரமிகந்து | துயரமிகுந்து |
| 41 | 10 | நின்றவ | நின்றவர் |
| 41 | 30 | புணைந்து | புனைந்து |
| 42 | 18 | வெறுத்து | வெளுத்து |
| 44 | 22 | இழைத்துநின்ற | இழைத்துநின்றசிற்றிலை அழிக்க |
| 48 | 16 | திருத்துமாய் | திருத்துழாய் |
| 48 | 17 | கவிழ்கின்றது | கமழ்கின்றது |
| 48 | 18 | இவன் | இவள் |
| 49 | 25 | நலமருளி | நலமருளாது |
| 50 | 9 | 27-திருவாய்மொழிகள் | 17-திருவாய்மொழிகள் |
| 50 | 28 | கொண்டபோக | கொண்டுபோக |
| 51 | 3 | எய்வது | எய்துவது |
| 52 | 7 | நன்கழல் | நலன்கழல் |
| 53 | 28 | பிரித்து | புரிந்து |
| 54 | 35 | அடிமைகளோட | அடிமைகளோடே |
| 57 | 10 | பயன்படுவத | பயன்படுவது |
| 60 | 18 | கேட்டக் | கேட்ட |
| 62 | 8 | செல்லப்பட்டது | சொல்லப்பட்டது |
| 62 | 17 | சங்கமமாகம் | சங்கமமாகும் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 63 | 1 | தஞ்சமாத் | தஞ்சமாந் |
| 63 | 25 | ஊண | ஊன |
| 63 | 33 | பரமாக்களுக்கு | பரமாத்மாக்களுக்கு |
| 64 | 21 | பிடத்திலே | பீடத்திலே |
| 65 | 13 | கின்ற | கிறதோர் |
| 65 | 31 | எதிவரனார் | எதிவரனால் |
| 66 | 17 | பேரழைக்கண்டு | பேரழகைக்கண்டு |
| 66 | 22 | டேநீயீர் | டுநீயீர் |
| 67 | 6 | வளர் த்தனால் | வளர் த்ததனால் |
| 67 | 20 | எனக்குதவன் | எனக்குதவாதவன் |
| 67 | 33 | வணங்கினாலே | வணங்கினாளே |
| 68 | 15 | கொடாதிக்க | கொடாதிருக்க |
| 68 | 29 | உண்ணுர் | உண்ணுஞ் |
| 69 | 6 | தின்னமென்னிளமான் | திண்ணமென்னிளமான் |
| 70 | 15 | சோர் வர | சோர் வற |
| 71 | 14 | ரட்சனை | ரட்சணை |
| 77 | 12 | தனமுன் | தன்முன் |
| 78 | 22 | புகழாலரான | புகழாளரான |
| 82 | 19 | அரன் | அரண் |
| 93 | 15 | இன்றயிதை | இன்றயிந்தை |
| 94 | 2 | உபயாத்திரையும் | உபய யாத்திரையும் |
| 94 | 3 | திருவயிந்திபுரம் | திருவயிந்திரபுரம் |
| 94 | 8 | தொருபொருள் | தொருபொருளே? |
| 97 | 16 | இதுயொப்பதின் | இதுஒப்பதின்பம் |
| 103 | 21 | திருவடி-யினையே | திருவடியிணையே |
| 103 | 25 | தண்கழலே | தண்கடலே! |
| 107 | 11 | பொரந்தியதலாகும் | பொருந்தியதாலாகும் |
| 109 | 20 | ஏற்றரேல்நின் | ஏற்பனேல்நின் |
| 109 | 22 | கண்ட | தாள்கண்ட |
| 112 | 20 | வாழும் சீரீயா முநனென்-நிறைகுரவன் | வாழும்சீ யாமுநனென் வண்குரவன் |
| 112 | 21 | பிறைப்பொருளும் | மறைப்பொருளும் |

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## பாண்டி, மகா வித்வத்ரத்நம்
## ஸ்ரீமாந் ஏந்தூர் சடகோபராமாநுஜதாஸரின்
## நூல் படைப்பிற்கு ஒரு மங்களாஸாசனம்

# ஸ்ரீபெரும்புதூர், வரதயதிராஜ ஸ்வாமிகள்

தமிழ் கூறும் நல்லுலகில் குறிப்பாக எம்பெருமானார் தர்சன ப்ரவர்த்தகர்களில் நடுநாயகமாய் நவீறு, அற்புத கவிதா சக்தி படைத்த ஸ்ரீமாந் ஏந்தூர் சடகோபராமாநுஜதாஸரை ஸ்வாமி என்றே கற்றவர், நற்றவர், உற்றவர்கள் அறிவர். இப்பெரியார் தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல் பகவத் விஷய – ரஹஸ்யாதிகளை மணிக்கணக்கில் மணிப்ரவாளத்தில் அதிசரளமாக உபந்யாசங்களால் ச்ரோதாக்களை மகிழ்விக்கும் வல்லமை படைத்தவர். சில ஆண்டுகட்கு முன் இப்பெரியாருக்கு நம்மால் நமது மடத்தில் **"எம்மாழ்வார்"** என விருதிடப்பட்டு ஸ்வாமி எம்பெருமானாரின் இன்னருளுக்கு என்றுமிலக்காக சதிராக வாழ்ந்து வாழ்ந்துகொண்டு வாழப் போகிறவர்.

இந்நூலாசிரியரால் வெளியிடப்படும் நூல்கள் மந்த்ரத்ரயம், தத்வத்ரயம் போல் மூன்று நூல்கள். அவை முறையே பிராட்டியின் அலர்மேல் மங்கைஅந்தாதி, சடகோப நான்மணிமாலை மற்றும் ஸ்வாசார்யரான கச்சிக்கிடாம்பி வைகுண்டவாசி ஸ்ரீ.உ.வே. பாஷ்யமாசாரியர் ஸ்வாமி பரமான ஆசார்யநூற்றந்தாதிகளாகும். சுருங்கக் கூறின் இம்மூன்று நூல்களும் முத்தும் மணியும் நற்பொன்னும் வைரங்களால் இழைக்கப்பட்ட முக்கடல்கள் என்னும் அத்தனை. இந்நூல்கள் மூன்றும் ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும், கைத்தலம்பற்றி ஹஸ்தபூஷணமான அலப்யலாபம் என்று போற்ற வேண்டியதே என்பதில் அத்யுக்தி அதிசயங்கட்கு நிலமல்ல.

## முதல் நூல்:–

ஸர்வ வியாபியானவனும் ஜகத்காரணனுமான ஸ்ரீமந் நாராயணனே முதல் தனிவித்தாவான் என்பதை அறுதியிட்டு, பிராட்டி புருஷகார பூதையே தவிர அதாவது மோக்ஷத்தைப் பெற ஸ்ரீமந் நாராயணனிடத்தில் பரிந்துரைப்பவள் ஆதலால், **"அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பினனுக்கு அணிகலனேயாவாள்"** என்று பிராட்டியின் பெருமையைப் பற்றி 100 பாட்டுகளில் சுருக்க உரையுடன் விவரித்திருக்கும் பாங்கு வாசாமா கோசரம்.

## இரண்டாம் நூல்:—

**"எண்டிசையும் அறிய இயம்புகேன்"** என்றபடி மாறனடி பணிந்துய்ந்தவனின் கடாக்ஷத்தால் ஆசார்யஹ்ருதய சூக்திகளை வஜ்ர வைடூர்ய மாணிக்கங்கள்போல் மேற்கோள் காட்டி **"அருள் கொண்டாடும் அடியவர் இன்புற"** மாறனின் புகழ்பாடியுள்ளார். **"அகில புவநஸ்தேம பங்காதிலீலே"** என்றுமங்கள ச்லோகத்தில் எம்பெருமானைக் காட்டிலும் மாறனுக்கு உண்டான ஏற்றத்தை மனத்தில்கொண்டு வைணவத்தில் பக்தி ச்ரத்தையுடையோர் எவ்வர்ணமானாலும் அவர்களை தொழுமின்! கொடுமின்! கொள்மின்! என வலியுறுத்துகிறார் ஆசிரியர். ஆம். குறளாசிரியரும் **"குறுமுநிவன் முத்தமிழும் என்குறளும் நங்கைச் சிறுமுனிவனின் வாய்மொழியின் சேய்"** என்றாரே. **"மறையதனில் பொருள் அனைத்தும் வாய்மொழிந்தான் வாழியே"** என்று வேதம் தமிழ் செய்த மாறனின் தமிழ் **"மாறனுரை செய்தமிழ் மறைவளர்த் தோன்வாழியே"** எனப் பெரும்புதூர் மாமுநிவன் கொண்டாடுவதைப் புலப்படுத்தியிருக்கின்றார் ஆசிரியப் பெருமகன்.

## மூன்றாவது நூல்:—

ஸ்ரீராமாயணத்தில் **"சபரிகொடுத்த பழத்தை ஸ்வீகரித்த ஸ்ரீசக்ரவர்த்தித் திருமகன் குகப்பெருமானின் உணவைப் பெறவில்லையே"** என்பர் சிலர். சபரி ஸ்வாசாரியானுக்ரஹம் பெற்று அவரின் நியமனப்படியே ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனை வரவேற்கவே வைகுந்தம்புகாது உபசாரம் செய்வேன் என்பதால், அவர் ருசித்த கனிகளை ஸ்ரீராமன் பற்றினார். குகனுக்கு ஆசார்யஸம்பந்தமில்லாததால் ஏற்கவில்லை என்பது ஸ்ரீராமனையே ஆசார்யனாகப் பெற்றமையைக் கணிசியாதது என்பதனால் ஏற்காதது குற்றமாகாது என்பது வெள்ளிடைமலை.

இவ்வாசிரியர் ஸ்வாசார்ய பக்தி வெள்ளத்தில் ஸர்வாவய ஸுகஸம்பன்னராக **"ஆசார்யாநுக்ரஹமே உத்தாரகம்"** என்றபடி ஸ்வாசார்யாபிமானித்தை நற்பொன்னால் பதித்த தொட்டில்போல் ஸ்ரீரங்கத்தமுதனால் நூற்றந்தாதியில் எம்பெருமானாரை உருக்கியதுபோல் தன்னுடைய 108 தமிழ்ப்பாக்களால் சொல்மாலை சூட்டியிருக்கும் பாங்கு அதிவிலக்ஷண ஜகதுதயமாகும். இவ்வாசிரியர் எம்பெருமானார் போலே வீற்றிருந்து தொடர்சங்கிலியாய் இத்தகைய பல நூல்களை வெளியிட்டு வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே என்று மங்களாசாசனித்து நிறைவு பெறுத்துகிறோம்.

நித்யஸ்ரீ:

மங்களாஸாசனங்கள்,
**வரதயதிராஜ ஜீயர்,**
ஸ்ரீபெரும்புதூர்,
மடாதிபதி பரம்பரை தர்மகர்த்தா.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

அண்ணன் திருவடிகளே சரணம்.

வித்வான், ஸாஹித்ய ரத்னம், வைஷ்ணவ ரத்னம், வேதநெறி வித்தகர், ப்ரவசன மணி, சதுர கவி, பண்டித சிகாமணி, அருளிச்செயல் அருளமுதுச் செல்வர், பஞ்சமாம்னாய ரத்னம், ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாய பாஸ்கரர், கலைமலிந்த சீர் நம்பி, விஷ்ணுபரத்வ ஸ்தாபக தீர சிகாமணி, வைஷ்ணவ ஸம்ப்ரதாய ப்ரவர்த்தக ஸம்பந்தர், ஸத்ஸம் ப்ரதாய செங்கட்சீயம், ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரர் கோயில் தென்னாசார்ய ஸம்ரக்ஷண ஸபா வித்வான்

R. நரஸிம்மாசாரியர்

50, மேலஉத்திர வீதி, ஸ்ரீரங்கம், திருச்சி–620 006.

# அணிந்துரை

ஸ்ரீமான் ப்ரபன்ன வித்வான் ஏந்தூர் சடகோப ராமாநுஜதாசர் அவர்கள் அருளிய சில நூல்களை நன்கு வாசித்துப்பார்த்தேன். இன்ப மெய்தினேன். மாதா, பிதா, குரு, தெய்வம் என்ற முதுமொழிக்கேற்ப சிறப்பாக அமைந்துள்ளது இந்நூல். கமலையின் தரிசனம் மனக்கவலையை மாற்றவல்லது. கமலையின் கருணை நிறைபார்வை செடியார்வினைக்குத் தீயாயது. கமலையின் அருள் இறையருள் பெறத் தூண்டுகோலாம். ஆகவே அகலகில்லேனிறையுமென்று, அலர்மேல்மங்கை அந்தாதி சுவையாக அமைந்துள்ளது. செய்யுள் அடிதோறும் ஒரே மாதிரியான சொற்கள் வருமாறு அமைந்துள்ளது நூலுக்கு அணியாக அமைந்துள்ளது. ஆசார்யாபிமானம் இவ்வான்மாவுக்கு உத்தாரகம். **"தேவு மற்றறியேன் குருகூர் நம்பி"** என்பர் மதுரகவிகள். தானே வந்து தன் தனிப்பெருங்கருணையினால் பொருளல்லாத தன்னைப் பொருளாக்கி ஆன்ம ஞானத்தைத் தந்து உய்வித்த தன் ஆசார்யன் பெருமையும் தன்னை உய்வித்த ப்ரகாரத்தையும் நன்கு காட்டப்பட்டுள்ளது. சுவைமிக்க பாடல்கள். ஆசார்யாபிமான தீபம், ப்ரபந்ந குல இரவி எனக் கூறலாம். தஞ்சீரை ஞானியர் என்ற மாமுனிகளின் பாசுரத்தை நினைவுபடுத்தும் ஒரு பாசுரம் நெஞ்சைக் கவரும்படி அமைந்துள்ளது ஆசார்யநூற்றந்தாதி.

நான்மணிமாலை நூல் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருள்பெற்று விளங்குகிறது. ஆசார்ய ஹ்ருதயம் என்ற நூலின் கருத்தைத் தனக்குள் அடக்கிக் கொண்டுள்ளது. ஆசார்யஹ்ருதயமே நான்மணிமாலையாக அவதரித்ததோ எனக்கூறும்படி அமைந்துள்ளது. ஆங்காங்கு ஆசார்யஹ்ருதய சூத்திரங்களும் அதன் கருத்துக்களும் ஆட்சி செய்கின்றன; களி நடம்புரிகின்றன.

இம்மூன்று நூலும் ஸ்ரீவைஷ்ணவ உலகிற்கு தேவையான நூல்கள். முதலாழ்வார் அந்தாதிபோலே மூன்று நூல்களாக அமைந்து புருஷகார வைபவம் ஆசார்யாபிமானம். மகிழ்மாறனே தெய்வம் என்று மூன்று கருத்துக்களை வலியுறுத்துகின்றன. அனைவரும் படித்து யான் பெற்ற இன்பம் வையம் பெறவேணும் என்று கூறி முடிக்கிறேன்.

R. நரஸிம்ஹாசாரியர்

வித்வான்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

**"திருமால் நெறி நூற்காவலர்"**

**Sri S. Krishnaswamy Iyengar,** M.A., B.L., Advocate,
(SUDARSANAR)
3-B, Puthur Agraharam, Tiruchy - 620 017.

# முகவுரை

ஏந்தூர் சடகோப ராமாநுஜதாஸர் தமிழில் தலைசிறந்த புலமை மிக்கவர். அத்துடன் பகவத்விஷயத்தைக் காலக்ஷேபம் ஸாதிக்கும் அளவிற்கு ஸம்ப்ரதாயத்தில் தேர்ந்தவர். **"திருவாய்மொழிக் கலம்பகம்"** முதலான அவரது பல நூல்களும் அவருடைய இப்பெருமைகளை எடுத்துக் காட்டுகின்றன. திருவயிந்திரபுரம் கச்சிக்கிடாம்பி ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமியாகிய மஹாவித்வானை ஆச்ரயித்து ஸ்வரூபக்ரந்தங்களை அதிகரித்தவர் (நன்கு கற்றவர்.) பலருக்கு அவற்றைக் காலக்ஷேபம் ஸாதித்து வரும் மூதறிஞர்.

அவர் இயற்றிய மூன்று நூல்கள் இங்கு ஒன்றாக வெளியிடப்படுகின்றன. **"அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறைமார்பா"** (திருவாய் 6-10-10) என்று நம்மாழ்வாரால் மங்களாஸாசனம் செய்யப்பெற்ற புருஷகார பூதையின் பிராட்டியின் பெருமையைப் பேசுவது முதல் நூல். மூன்றாவது நூல் தமது ஆசார்யரான பாஷ்யாசார்யரின் பெருமையைப் பேசும் **"ஆசார்ய நூற்றந்தாதி"**. இரண்டாவது நூலான **"சடகோப நான்மணிமாலை"** ஆசார்ய ஹ்ருதயத்தை அழகாகப் பின்பற்றி நம்மாழ்வாரின் பெருமைகளைப் பேசுவது. இம்மூன்று கவிமலர்களும் பொழிப்புரையுடன் தரப்பெற்றுள்ளன.

ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவராலும் படித்துப் பயன் பெறத்தக்கப் பொக்கிஷம் போன்றது இந்நூல்.

இங்ஙனம்,

**(ஸுதர்சனர்) ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்**

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம

திருமிகு. R. **பெருமாள்ராமாநுஜம்**

நெ.1, காமராஜ் வீதி,
இந்திரா நகர்,
முதலியார்பேட்டை,
பாண்டி–605 004.

# மதிப்புரை

**'அலர்மேல் மங்கை அந்தாதியும் அதன் சார்பு நூலும்'** என்ற தலைப்பின் அமையப்பெற்ற நூல்களைக் கற்றுப் பேருவகையுற்றேன். இந்நூலை யாத்தவர், பழம்பெரும்புலவர் திருமிகு. ஏந்தூர், சடகோபராமாநுச சுவாமிகளாவர். இப்பெரியார், கற்றோர் உகக்கும் வண்ணம் தத்துவப் பொருளைப் பல சான்றுகளைக் காட்டி நயமிகுத்துப் பேசவும் வல்லவர் என்பது உலகறிந்ததே. இவர், இந்நூல் மட்டுமல்லாது "மணவாள மாமுனிகள் ஈடுபாடு, திருவாய்மொழிக்கலம்பகம், சுதர்சனர் நூறு, முதலாய கிளைவித்துறையில் அமைந்த இவருடைய நூற்களைக் காண்பார்க்கு இவரின் தமிழ்ப்புலமை மிளிரும் என்பது தேற்றம்.

## அலர்மேல்மங்கையந்தாதி

முதல் நூலான இந்நூல் கட்டளைக் கலித்துறையிலான பாயினத்தாலாயது. இஃது, நான்கு அடிகளையுடையதாய் அடிதோறும் ஐந்து சீர்களோடு கூடி. முதற்சீர் நான்கும் வெண்டளைபிறழாமல் இறுதிச்சீர் கூவிளங்காயும் கருவிளங்காயுமாக ஏதேனும் ஒன்றைப் பெற்று ஒவ்வொரடியும் முதற்சீர் நேரசையாயிருந்தால் ஒற்றெழுத்து நீங்கலாக பதினாறு எழுத்தும், நிரையசையாயிருந்தால் பதினேழ் எழுத்துக் கணக்கோடு ஈற்றடியின் இறுதிச்சீரின் ஈற்றசை ஏகாரம் பெற்று முடிதல் வேண்டும். உதாரணம்,

**"அடியடி தோறும் ஐஞ்சீ ராகி**
**முதற்சீர் நான்கும் வெண்டளை பிழையாக்**
**கடையொரு சீரும் விளங்கா யாகி**
**நேர்பதி னாறே நிரைபதி னேழென்று**
**ஓதினர் கலித்துறை ஓரடிக் கெழுத்தே."**

என்பது இலக்கண விதியாகும்.

இந்தக் கட்டளைக் கலித்துறை என்ற செய்யுள், கலிப்பாவின் இலக்கணத்துட் கலித்துறையிலான பாவாகும். இது, தொல்காப்பியர் காலத்தில் இயற்றப்படாமல் பத்தாம் நூற்றாண்டிற்குப் பிறகு சில புலவர்களால் பாடப்பட்டுள்ளது. அமிர்தசாகரர் இயற்றிய யாப்பருங்கலக்காரிகை இவ்வகைத்தே.

இங்ஙன் கட்டளைக் கலித்துறை என்ற நூறு பாக்களான் அமைந்த அலர்மேல்மங்கை அந்தாதியின் முதற்பா காப்புச் செய்யுள், நூல் தடையின்றி இனிது நிறைவேறும் பொருட்டு சுவாமி நம்மாழ்வாராகிற ஆசாரிய வணக்கமும் செயப்படுபொருளும் எய்த உரைக்கும் தற்சிறப்புப் பாயிரமாக அமைந்துள்ளது

இந்நூலிற், '**உலகொருங்காக**' என்று தொடங்கும் முதற்பாட்டில், எல்லாமக்களும் தன்னை வணங்குதற்காகவும், அவர்கள் இறைவனான திருமாலை அடைந்து பேரின்பம் துய்க்கும் பொருட்டும் இறைவனிடத்தில் (புருஷகாரம்) பரிந்துரை செய்து இன்னருள் புரிவதற்காக, இறைவனை ஒரு நொடிப் போதும் அகலாமலிருக்கும் பெரிய பிராட்டியரான அலர்மேல்மங்கைத் தேவியின் பேரழகுக்கு, இரண்டு வகைப்பட்ட உலகங்களும் அதைப் படைத்த இறைவனும் சேர்ந்தாலும், பதினாறு கலைகளில் ஒருகலைக்கும் இறைவன் பிராட்டியோடு ஒப்பாக மாட்டான்! அப்படிப்பட்ட பேரழகு வாய்ந்த தேவியை நெஞ்சே! '**நீ வணங்குவாயாக**' என நுவலப்பட்டுள்ளது.

மூன்றாம் பாடலான '**வாய்த்தவத் தாயவள்**' என்ற பாவில் உயர்வு நவிற்சியாகப் பிராட்டி எம்பெருமானைக் காட்டிலும் உயர்வாகப் பேசப்பட்டுள்ளது. இவைபோல் பல பாக்களில் பிராட்டியை உயர்த்தி உயர்வு நவிற்சியில் பேசப்பட்டுள்ளது. அறிஞர்கள் இவை கண்டு மயங்குதல் கூடாது. என்னை? அவளின் உண்மைத் தத்துவம் அணுவின் அளவேயாகும் என்பது வேதநூற் கொள்கை. அதனாற் அதனை நாம் மறத்தல் இயலாதன்றோ? மேலும், இஃது ஒரு துதி நூலாகும்; தத்துவ நூலன்று. பிராட்டியை, பெருமானைக் காட்டிலும் உயர்வாகப் பேசவேண்டுமென்று கற்பித்துக் கூறுதல் கவிகளின் மரபாகையாற், இவ்வாறு உயர்வு நவிற்சியில் ஆசிரியர் பேசியிருக்கிறார்.

இறுதியாக, இந்நூலிற் பிராட்டியின் அருள்நோக்காலேயே பிரமன், சிவன், இந்திரன், கலைமகள், பார்வதியான மலைமகள், காளி முதலான வானவரெல்லாம் தத்தம் பதவிகளிலிருந்து ஏவலைச் செய்கின்றனர் என்றும்,

*சீ*வான்மாக்களுடைய வீடுபேற்றில் திருமாலின் தேவியான பிராட்டி (புருஷகாரம் செய்பவளாகவும்) பரிந்துரை செய்பவளாகவும், திருமாலான இறைவன் (உபாயபூதனாகவும்)வீடுபேற்றை (மோட்சத்தை)அடையச் செய்பவனாகவுமிருக்கும் உண்மைப் பொருளைச் சிறப்புச் செய்தியாகவும், இவளை வழிபடுவதால் மக்கள் இம்மை மறுமை என்ற இருவித பயன்களும் பெற்று நலமடைவார்கள் என்று நவிலப்பட்டுள்ளது.

## சடகோபநான்மணிமாலை

இஃது, நான்கு பாவகையாலாகிய எழுத்துக்களாகிற மணிகளால் கோர்க்கப்பட்ட மாலைபோன்ற நான்மணிமாலை என்று விரியும். சடகோபரைப் பற்றிப் பேசவந்த நூலாகையாற் சடகோப நான்மணிமாலை என்று பெயர் பெறும்.

நான்கு பாவகையாவது,

"ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியெனா
நாலியற் றென்ப பாவகை விரியே."

– தொல். செய்–101.

என்றும்,

"வெண்பா அகவல் கலிப்பா அளவடி வஞ்சியென்றும்
ஒண்பா......"

– யாப்பருங்கலக்காரிகை – 22.

"வெண்பா ஆசிரியம் கலியே வஞ்சியெனப்
பண்பு ஆய்ந்து உரைத்த பாநான்கு ஆகும்"

– இலக்கண விளக்கம். 726.

என்று, வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என, பா நால்வகைத்து என்பர் புலவர்.

இதில், பாவகை நான்கென்றும் இப்பாவகையுள்ளும் அவ்வவற்றுக்கும் பல இனங்கள் உண்டென்றும் கூறுவர்.

சான்றாக, வெண்பாவில்: குறளடிவெண்பா, சிந்தியல் வெண்பா, நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா, பஃறொடை வெண்பா – என்றும், இன்னும் இதனுள்ளும் குறள்வெண்செந்துறை, குறள்தாழிசை, வெண்தாழிசை, வெண்டுறை, வெளிவிருத்தம் என்பன. இவற்றைப் போலவே ஆசிரியப்பாவினுள்ளும், கலிப்பாவினுள்ளும், வஞ்சிப்பாவினுள்ளும் பல உட்பிரிவினங்கள் உண்டு. அவையெல்லாம் இங்கு விரிப்பின் நூற்பெருகும் என அஞ்சிவிடுத்தோம்; அவற்றை யாப்பருங்கலக் காரிகை, இலக்கண விளக்கம் போன்ற நூற்களில் கண்டுகொள்க.

இங்ஙன் ஒவ்வொருபாவிற்கும் பாவினம் வகுத்தல் தொல்காப்பியனாருக்கு உடன்பாடன்று. பா இனம் வகுத்தல் பிற்பட்டகாலத்திலேயே ஏற்பட்டது. இப்பாவினங்களின் இலக்கணங்களை நோக்க இவற்றின் அமைப்பிற்கும் "வஞ்சிப்

பெயருக்கும் பொருத்தம் பெரும்பாலும் இல்லை என்பது தெளிவாகப் புலப்படும். எனினும் யாப்பருங்கலக்காரிகை முதலான நூற்களில் எடுத்தாளப்பட்டிருப்பதாலும் பல நூற்றாண்டுகளாகப் பழகிவிட்டபடியால், இவற்றை நாம் இப்போது கொள்ள வேண்டியவராயுள்ளோம்.

**'நான்மணிமாலை'** யென்னும் இந்நூலில் ஆசிரியர், வெண்பா, ஆசிரியப்பா, (அகவற்பா) ஆசிரிய விருத்தம், கலிப்பாவில் கலிநிலைத்துறை, கட்டளைக் கலித்துறை என்னும் பாக்களையே இயற்றியுள்ளார். வஞ்சிப்பாவை விடுத்தனர். என்னை?

வெண்பா–செப்பலோசையும், ஆசிரியப்பா–அகவலோசையும், கலிப்பா–துள்ளோசையும், வஞ்சிப்பா–தூங்கலோசையும் பெற்றுவரும் என்பர். தூங்கலோசையுடைய இவ்வஞ்சிப்பா, பெரும்பாலும் ஆசிரிய உரிச்சீரும் வெண்பா உரிச்சீரும் சிறுபான்மை கலிச்சீரும் பெற்று வருவதால் இதற்கென்று தனித்தன்மையின்மையாலும் ஆசிரியர், வஞ்சிப்பாலினை இயற்றாமல் விடுத்தனர் எனலாம்.

**"பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்**
**ஆசிரி யப்பா வெண்பா என்றாங்கு**
**ஆயிரு பாவினுள் அடங்கும் என்ப"**

–தொல். செய்யு–103.

என்று, ஆசிரியப்பா, வெண்பா ஆகிய பாவகையில் மூற்றைய வஞ்சிப்பாவும் கலிப்பாவும் அடங்கும் என்கிறார் தொல்காப்பியனார்.

**"ஆசிரிய நடைத்தே வஞ்சி ; ஏனை**
**வெண்பா நடைத்தே கலியென மொழிப"**

– தொல்–செய்.104.

என்ற, தொல்காப்பியத்திற்கு உரையெழுதிய இளம்பூர்ணர், ஆசிரியம் போன்ற நடையை உடைத்து வஞ்சி ; வெண்பாப் போன்ற நடையை உடைத்து கலி என்றுரைப்ப' என்றதனால் வஞ்சிப்பா ஆசிரியத்துள் அடங்கும் என்கிறார்.

**"வஞ்சி மருங்கின் எஞ்சிய உரிய"**

–தொல். செய்–21.

பாவினுள் ஒழிந்த சீர்கள் வரப்பெறும் என்றவாறு, "வஞ்சிமருங்கி னெஞ்சிய வுரிய" என்றோதியதனால் ஆசிரிய அடியோடும் வெண்பா அடியோடும் கலி அடியோடும் மயங்கி வருவன கொள்க" என்று இளம்பூரணர் உரையெழுதுகிறார். பேராசிரியரும், "வஞ்சியுரிச் சீர்பிறபாக்களை ஆக்காதவாறு போலாது, ஒழிந்த ஆசிரிய உரிச்சீரும் வெண்பா உரிச்சீரும் இவ்வஞ்சிப் பாவினை ஆக்கும்" என்பதால் ஆசிரிய உரிச்சீர் ஆறும், வெண்பா உரிச்சீர் நான்கும் வந்து வஞ்சிப் பாவினையாக்கும் என்று பேராசிரியரும் கூறுகிறார். இதையெல்லாம் திருவுள்ளத்தில் கொண்டே இவ்வாசிரியர் வஞ்சிப்பாவை இயற்றவில்லை எனலாம்.

இந்நூல், ஆசிரிய விருத்தங்கள் பலசீர்களை உடையனவாய்ச் சந்த இன்பம் தருவதனோடு திருவாய்மொழியின் சாற்றினைப் பிழிந்து யாக்கப் பெற்று இருத்தலை பல இடங்களிலும் காணலாம். 1–ஆம் பாடலிலிருந்து 9–ம் பாடல்வரை சிரீ சடகோபனாகிற சுவாமி நம்மாழ்வாரின் அவதாரச் சிறப்பு, அவர் இயற்றிய திருவாய்மொழியின் நூற்பெருமை எம்பெருமானுடைய குணநலன்கள் இவைகளை "ஆசாரிய இருதயம்" என்ற நூலின் துணைகொண்டு பேசப்பட்டுள்ளது. 10–ஆம் பாட்டு தொடங்கி அகப் பொருட்டுறையில் தலைவிக் கூற்று, தாய்க்கூற்று, தோழிக்கூற்றாக அமைந்து சிரீவைணவத்தின் சிறப்புவாய்ந்த தத்துவங்களை–யெல்லாம் பேசப்பட்டுள்ளது. 39, 40–ஆம் பாட்டில், பரம், வியூகம், விபவம், அந்தர் யாமித்துவம், அர்ச்சை என்ற ஐவகை நிலையால், இறைவன் இந்த உலகுக்காற்றும் அரும்பெரும் பயன்களைக் கூறுகிறது.

சிறப்புச் செய்தியாக இந்நூலில் கூறப்பட்ட செய்திச் சுருக்கம் வருமாறு : பெரிய பிரளய வெள்ளத்தில் ஆழ்ந்தழுந்திய பூமியையும், அதிலுள்ள மக்களையும் காப்பதற்கே திருமால், தாழ்ந்த வராக உருக்கொண்டார். அதுபோல் பிறப்பாம் வன்சேற்றள்ளல் பொய்நிலமான (சம்சாரத்தில்) இப்பூமியில் அழுந்திக் கிடக்கிற ஆன்மாக்களை–மக்களை எடுக்கவே–உய்விக்கவே, சுவாமி குருகூர்ச் சடகோபன் தோன்றினார் என விளம்புகிறது. இதனாற் பிறப்பால் உயர்வு தாழ்வில்லை; அவரவர்கள் செய்யும் செயலே உயர்வுக்குக் காரணம் என்று, நம்மாழ்வார் சிறப்புச் செய்தி பேசப்பட்டுள்ளது. மற்றும் "ஆசாரிய இருதயம்" என்ற நூலில் நுவலப்பட்ட செய்திகளும் இதிற் காட்டப்படுகின்றன.

## ஆசாரிய நூற்றந்தாதி

ஆசாரிய நூற்றந்தாதியான இந்நூல், அழகிய வெண்பாக்களினால் செப்பலோசை குன்றாமல் நூற்றெட்டுப் பாக்களால் அமைந்து மிளிருகிறது. இந்நூலாசிரியர், தம்மாசிரியரான திருமிகு. பாடியம் சுவாமிகளை "சேலேய்க்

கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாய்த் தாய்தந்தையும் அவரே இனிஆவார்" என்று, சுவாமி நம்மாழ்வார் இறைவனை எல்லாவுறவுமாகப் பற்றினமைப் போன்றே இவ்வாசிரியரும் தமது ஆசிரியரை எல்லாமாகப் பற்றி, அவர் தமக்கு ஆற்றிய அரும்பயன்களையெல்லாம் நூற்றெட்டு பாடல்களிலேயும் கொண்டாடுகிறார்.

இந்நூலாசிரியர், 'ஆசாரியனே ஆறும்பேறுமாவான்' என்று ஆசாரியனுக்கு **உபாயத்வமும்**–வீடுபேறடைய தானே வழியாகவும், **உபேயத்வமும்** – பெறக்கூடிய பயனாகவும் கூறியிருக்கிறார். இஃது, உள்ளது உரைத்தலன்று ; உயர்வு நவிற்சியே ஆகும். என்னை?

ஆசாரியனுக்குள்ளது **புருஷகாரமே**–பரிந்துரை செய்தலே அவருக்கு நிலை நின்ற இயல்பு; மோட்சமளிக்கும் தன்மை ஆசாரியனுக்கில்லை என்று சாத்திரங்களிலும் மற்றைய சான்றோர்களான நம்பூருவாசாரியர்களும் ஒருமிட்டாக எடுத்தோதியுள்ளனர். ஆசாரியன் தமக்கு ஆற்றிய பேறுதவிக்கு நன்றி பாராட்டுதல் காரணமாக இவ்வாசிரியப் பெருமான், அங்ஙனம் எம்பெருமானைக் காட்டிலும் உயர்வாக ஆசாரியனைப் பேசியுள்ளார். எனவே, இதுபோன்ற இடங்களில் அறிஞர் பெருமக்கள் மயக்கங்கொள்ளுதல் தகாது. தெளிவு வேண்டுவோர் நம்முடைய "ஸாரார்த்த விவாத விஜயம்" என்ற நூலில் கண்டு கொள்க.

இந்நூலாசிரியர், சுவாமி நம்மாழ்வார் மதுரகவிகளை அங்கீகரித்தாற் போன்றே தம்மை பாடியமாசாரியர் அங்கீகரித்தார் என்று ஆசாரிய பெருமானின் காரணமற்ற இன்னருளைப் பேசுகிறார். இராமாநுசர், கூரத்தாழ்வான், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளைலோகாசாரியர், திருவாய்மொழிப்பிள்ளை மணவாள மாமுனிகள் முதலானார் ஆற்றிய அருஞ்செயல்களையும், அவர்கள் தங்கள் மாணாக்கர்களுக்கு இன்னருள் செய்து அங்கீகரித்தது போன்றே தன்னையும் பாடியமாசாரியர் அங்கீகரித்தார் என, அவர் கருணையைப் பலவிடங்களிலும் கொண்டாடியிருக்கிறார். சிறப்புச் செய்தியாக ஆசாரிய அபிமானமே ஒருவனை உயர்கதிக்கு இட்டுச் செல்லும் வாசலாகும் என்னும் உயரிய தத்துவத்தை இந் நூலில் குறிப்பிட்டிருக்கிறார் ஆசிரியர்.

பொதுப்படையாக இம்மூன்று நூற்களிலும், பாடல்கள் சொல்லெச்சமும் குறிப்பெச்சமும் அமையப் பெற்றுள்ளமையின் கற்பார், பாடல்களின் பொருளைத் தெளிவாக உணர மிகவிரியாமலும் மிகச்சுருங்காமலும் பொழிப்புரை வரையப்பட்டுள்ளது. நூல்கள் பலவற்றைக் கொண்டு அறியத்தக்க நுண்ணிய செய்திகள் பலவும், இம்மூன்று நூற்களை உரையின் துணைகொண்டு பயில்வார் எளிதின் உணரும் வகையில் இப்பிரபந்தங்கள் அமைந்துள்ளது.

இந்நூலை வாங்கிக் கற்போர்க்குத் திருமகள் கேள்வனான சிரீநிவாசன் எல்லா நலன்களையும் அருள்வானென அவன் திருவடியிணையை இறைஞ்சுகிறேன். இந்நூலுக்கு மதிப்புரை எழுதும்படி ஆசிரியர் நியமித்த வாய்ப்பினை எண்ணி இறும்பூதெய்தினம்.

**ஆற்றலுடன் வேதத்தின் ஆழ்பொருளை கற்றவர்கள்**
**போற்றுசிரீ வைணவமாம் போதத்தை – ஏற்றமுடன்**
**ஆய்வுசெய்து இந்நூலில் ஆர்வமுடன் தேர்ந்துரைத்தார்**
**வாய்ந்தசாமி ஏந்துராரா் மாண்பு**

இங்ஙனம்,
அடியார்க்கடியன்,
**R. பெருமாள்ராமாநுசன்**
**26.4.98**

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ப்ரபந்தவித்வான், பெரும்புலவர், கம்பன்காவியகலைஞர், அருளிச் செயல்
ஆழ்பொருள் கலைமாமணி, உபன்யாஸ சூடாமணி, செஞ்சொல்
இலக்கியச்செல்வர், திருவாய்மொழியைக் காத்த குணவாளர், திருவாய் மொழி
வித்தகர், ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்த வாசஸ்பதி.

# நூலாசிரியரின் முன்னுரை

## அலர்மேல்மங்கையந்தாதி

மும்மூர்த்திகளின் தேவியரைக் குறிப்பிட வந்த நிகண்டு, மலைமகளின் பெயரைக் குறிப்பிடும் போது, "உமா, காத்யாயநீ, கௌரி, காளி, ஹேமவதி, ஈச்வரி, சிவா, பவாநி, ருத்ராணி, ஸர்வாணீ, ஸர்வமங்களா, அபர்ணா, பார்வதீ, துர்கா, ம்ருடாநீ, சண்டிகா, அம்பிகா, ஆர்யா, தாக்ஷாயணீ, கிரிஜா, மேனகாத்மஜா" என்று அமரகோஶம் கூறுகிறது.

கலைமகளின் பேரைக் குறிப்பிடும் போது, "ப்ராஹ்மீ, பாரதீ, பாஷா, வாக், வாணீ, ஸரஸ்வதீ" என்று கூறுகிறது.

அலர்மகள் தேவியைப் பற்றிக் கூறும்போது, "லக்ஷ்மீ, பத்மாலயா, பத்மா, கமலா, ஸ்ரீ:, ஹரிப்ரியா, இந்திரா, லோகமாதா, மா, ரமா, மங்களதேவதா, பார்கவீ, லோகஜநநீ, க்ஷீரஸாகரகந்யகா" இவை, லக்ஷ்மீ தேவியான மலர்மகளைக் குறிப்பிடுகிறது.

இதில், முன்னிரண்டு தேவதைகளின் பெயர்களைப் பல கருத்துப்பட சொல்ல வந்த நிகண்டானது, "லோகஜநநீ" என்றும், "லோகமாதா" என்று லக்ஷ்மீ தேவியைக்குறித்த நிகண்டு மலைமகளான பார்வதிக்கும், கலைமகளான சரஸ்வதிக்கும் இந்தச் சிறப்புப் பெயரான இவற்றை இவர்களுக்கிடாமல், லோகமாதாவாகிய ஸ்ரீலக்ஷ்மிதேவிக்குக்கிட்டிருப்பதால் அவர்களிருவரைக் காட்டிலும் மஹாலக்ஷ்மியே உயர்வற உயர்ந்த தேவியாகிறாள் என்பது குறிக் கொள்ளத் தக்கது.

இந்தப்பெயர்தானும், உலகை ஈன்றதால் வந்த பெயரன்று. இங்கே திருமகள் கேள்வன் ஆன நாராயணனுக்கு அகாரம் முதன்மை வாய்ந்த திருநாமம் ஆகையாலே இந்த அகாரம் ஸமஸ்த்த ஶப்தகாரணமாககையாலே தத் வாச்யனும் ஸமஸ்த்த சேதனங்களுக்கு இயல்பாகவே காரணமாகிறான். இதை அடியொற்றியே குருகூர்ச்சடகோபன் தஞ்சமாகிய தந்தை தாயொடுதானுமாய்யென்றும்

அருளியதாகும். இவ்வாற்றால், உலக காரணனான எம்பெருமானுக்கு ஒப்பற்ற திவ்ய மஹிஷியாகையாலே இங்ஙனே சொல்லப்பெறுகிறாள்.

உலக மாதாவான பிராட்டியைத் தாய் என்று இசையாமல் எவரெவர்களையோ தாய் என்று இசைந்திருத்தல், பெற்ற தாய் இருக்க மற்றவர்களைத் தாய் எனக்கொண்டாடுதல் நன்றி மறந்த செயலாகும் என்பர். இப்படிப் பட்ட தாயாலே குருகூர்ச் சடகோபன் முன்னிட்டே திருவேங்கடமுடையான் திருவடிகளிலே தஞ்சமென்று புகுந்தது நினைவுக்கு வர, ஏந்தூர்ச் சடகோபனான அடியேன் பெரிய முதலியாராகிய ஸ்ரீஆளவந்தார் நம்மாழ்வாரையே அன்னை முதற் கொண்டு அனைத்துமாகப் பற்றினாற் போலே அதே நிலையுடைய அடியேற்கு எல்லாமாகப் பற்றக் கூடிய குருகூர் நம்பியைப் பற்றிக் கட்டளைக் கலித்துறை யாப்பினால் சொற்பின் வரு விளக்க அணியாக அந்தாதி தொடையில் பாடிய நூலிதுவாகும்.

## சடகோப நான்மணிமாலை

அடியேனுக்கு வினாத் தெரிந்த காலத்திலிருந்தே பற்றற்றவர்கள் திறத்து இயல்பாகவே பெருமதிப்பும் பற்றுமுண்டு. அடியேன் வைணவ குடும்பத்தில் பிறந்தவனாகையாலே ஸ்ரீமத் ஆழ்வார் ஆசாரியர்கள் வரலாறுகளை அறியலானேன். சடகோபன் என்றாலே உள்ளங்கரையும். ஏன்? பற்றற்றவர்களில் பிறவி துறவியாகிய குருகூர் முனிவன் திறத்தும், சுக முனிவன் திறத்தும் மிக்க மதிப்புண்டு. இவர்கள் அருளிச் செய்த நூல்களைக் கசடறக் கற்க இச்சை உடைமையாலே வடமொழியும் தமிழ்மொழியும் பயில மிக்க பேரவா உண்டு. இந் நிலையில் அடியேனுடைய பெற்றோரும், உற்றோரும் தகுதியற்றவர்களாய் தடுத்துவிட்டனர். இப்படி இருக்க ஏதோ ஓரளவு பயின்றதைக் கொண்டு பித்தம் பிடித்தவன் போலிருந்தேன். ஒரு சிலர், 'நீர் ஒரு நூல் எழுத வேண்டும்' என்று தூண்டியும் எழுதவில்லை. ஒருநாள் காலை நான்கு மணிகட்கு கனவோட விழிப்பு உண்டாகத் திருவாய் மொழிக் கலம்பகம் என்ற நினைவோட இருந்தேன். சில சான்றோர்கள் துணைகொண்டு அந்நூலை எழுதினேன். திருவாய்மொழிக்கு உரையும் எழுத இறையருள் துணைநின்றது. இங்ஙனம் இருக்க, ஒருநாள் சிலர் சடகோபர் திறத்து விஷம வசைவுகளைப் பொழிய அதனால் ஆசாரிய ஹிருதயம் என்ற நூலை ஓரளவு பயின்று குருகூர் நம்பி விஷயமாக பல காரணங்களால் வாஞ்சைமிகுந்து, ஆசாரிய ஹிருதயத்தையே முதல் நூலாகக் கொண்டு நான்மணிமாலை என்ற பாமாலையை ஆழ்வாருக்கு சூட்டக்குறிக்கொண்டு சிற்றறிவினனேயாகிலும் பேரார்வமுடைமையாலே, "வெண்பா, கட்டளைக்கலித்துறை, ஆசிரியவிருத்தம், ஆசிரியப்பா" என்ற முறையில் அந்தாதித் தொடையில் ஆக்கப்பட்டது.

# ஆசார்ய நூற்றந்தாதி

அடியேன் பிறப்பிடமாகிய ஏந்தூரில் 12 வயதுடையவனாக இருக்கும் போது அடியேனுடைய ஆசாரியர் ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகள் சிஷ்ய யாத்திரையின் பொருட்டு ஏந்தூரில் மூன்று நாட்கள் தங்கி இருக்கும் போது, அடியேன் ஒருவனை மாத்திரம் அழைத்து மூன்று நாட்களில் முமுக்ஷுப்படி ஸாதித்தார். இது நிகழ்ந்து கொண்டு இருக்கும் போது ஆசாரியர் சில கேள்வி கேட்கிற முறையில், நாராயண பதத்திற்குப் பொருள் கூறும்போது, நாரங்களை அயனமாக உடையவன் என்று வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாக வருவதைப் பொது விதியில் விதி விலக்காக நாரஸப்தமான அவன் கல்யாண குணங்கள் நீங்கலாக மற்றவற்றில் வியாபித்து இருப்பதாகக் கொள்ள வேண்டும் என்றும் சொல்லி இது ஏன்? எனில், வியாபிப்பது திவ்யாத்மஸ்வரூபம். திவ்யாத்மஸ்வரூபத்தில் அந்தர்பவிக்கின்ற கல்யாண குணங்களில் ஸ்வரூபம் வியாபிக்க இயலாததாகையால், குணங்கள் நீங்களாக மற்றவற்றில் வியாபித்திருப்பதாகக் கொள்ள வேண்டும் என்று சொல்லி, 'இதுபுரிகிறதா?' என்று கேட்க, புரிகின்றதென்றேன். 'இதைச் சொல்லென்று' கேட்க, சொல்ல. ஸ்ரீமத்ஸ்வாமிகள் ரிடையர் ஜட்ஜியிவர்களுக்குச் சொல்ல புரியவில்லையே என்று சொன்னதாகச் சொல்லி, அடியேனை பேரபிமானமாகக் குறிக்கொண்டார். அந்த நிலையை நினைந்து கொண்டே இருந்த அடியேனை, ஸ்வாமிகள் திருப்பேரராகிய ஸ்ரீமத் கச்சிக் கிடாம்பி பக்திஸாரன் ஸ்வாமிகள், "தாதாவைப் பற்றி ஒன்றும் எழுதவில்லையா"? என்று கேட்க, அதுவே உபாதாநமாக வெண்பா யாப்பில் திருவரங்கத் தமுதனாரை அடியொற்றி 108 பாடல்களால் பாடப்பட்டப் பெற்ற நூலிதுவான வெண்பாவாகும்.

இந்நூலை அச்சேற்றுவதற்கு ஆர்வத்தையும் முழு நம்பிக்கையையும் அடியேனுக்களித்து, நூல் வெளியிடுவதற்கேற்ற காகிதத் தாள்களையும் அளித்து பேருதவி செய்த கச்சிக்கிடாம்பி ஸ்ரீமத். பக்தி ஸார ஸ்வாமிகளுக்கும், கச்சிக்கிடாம்பி ஸ்ரீமத். பரகால ஸ்வாமிகளுக்கும் அடியேன் ப்ரணாமப் பூர்வகமாக க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்கிறேன். மற்றும், இந்நூலுக்கு மங்களாஸாசனம், முகவுரை, அணிந்துரை, மதிப்புரை நல்கிய ஸ்வாமிகளுக்கும் அடியேனுடைய க்ருஜ்ஞதையைத் தெரிவித்துக் கொண்டு, இந்நூலில் அடியேனுடைய அயர்வால் ஏதேனும் பிழையிருப்பினும் அவற்றைப் பொறுத்தருளி வாசிக்கும்படி நேயர்களை ப்ராத்தித்துக் கொண்டு நிறைவு செய்கிறேன்.

இப்படிக்கு,

ஏந்தூர் சடகோபராமாநுஜதாஸன்

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அலர்மேல் மங்கையந்தாதி

## காப்புச் செய்யுள்

**இழைத்தா ரிலதா மறையின் பொருள்சீர்த்த இன்தமிழால்**
**இழைத்தா னிவனே சராசரம் முற்றும் நினைவகத்தே**
**இழைத்தான் சிரம்தான் குலுங்கவோர் ஆயிரம் பாவிழைத்தான்**
**இழைத்தான் அலர்மேல்மங் கையந்தா திக்கருள் முற்றுறவே!**

**இதன் உரை:**

எவராலும் செய்யாமல் இயல்பாக தோன்றிய வேதங்களின் பொருளை இனிய தமிழில் ஆயிரம் பாசுரங்களாகச் சொன்ன குருகூர் நம்பியே, அறிவுடை பொருள்கள் அறிவில் பொருள்கள் இவைகளை நினைவாற்றலாலேயே தோற்றுவித்த இறைவன், தன் சிரத்தை குலுக்கி கேட்கும்படியாகத் திருவாய்மொழி என்ற ஆயிரம் பாசுரங்கள் சொன்னவனே இந்த அலர்மேல்மங்கை அந்தாதிக்கு இடையூறின்றி நிறைவு பெறும்படி காப்பாக இருந்து தானே அடியேனுக்கு அருள் செய்தான்.

## நூல்

**1. உலகொருங் காக வணங்குதற் காக உடையவன்தான்**
**உலகொருங் காக உளப்படுத் தாகத் தகலகில்லாள்**
**உலகொருங் காக உடையவ னாகக் கலைக்குநில்லா**
**உலகொருங் காக உதவுவா ளாகத் தெழில்வணங்கே.**

நெஞ்சே! எல்லா உலகும் தன்னை வந்து வணங்குவதற்காக அவர்களுக்கு இறைவனிடத்தில் பரிந்துரை கூறுவதற்காக அனைத்து சராசரங்களையும் ஊழிக் காலத்தில் தன் வயிற்றில் கொள்ளும் இறைவனுடைய திருமார்பை விட்டு அகலாதவளான திருமகள், இறைவனையும் அவன் உடைமைகள் ஆன உபய விபூதிகளும் ஒருங்கு சேர்த்து பார்த்தாலும். பிராட்டியின் பேர் அழகு பதினாறு கலைகளில் ஒரு கலைக்கும் போதாத பேரழகு உடைய பிராட்டியை வணங்குவாயாக.

**2. வணங்குக நெஞ்சே! மதிமுகம் தீஞ்சொல் அமுதனையவ்**
**வணங்குக ளுத்தமை பங்கயத் தாள்தாள் பராபரர்நீர்**
**வணங்குக சென்னி மகரம் அகரம் சுதந்திரத்தை**
**வணங்குக நுஞ்சீர்ப் பெறஇரு வீர்க்கொரு வாய்ப்பெனுமே**

நெஞ்சே! முழுமதி போன்ற முகமும், இனிய சொற்களும், அமுதம் ஒத்த இனிமையும் உடைய தெய்வ பெண்களுள் மிகமேம்பட்ட பிராட்டியின் திருவடி தாமரைகளை வணங்குக! பிராட்டியின் தொடர்பால் அகாரத்தை பேராக உடைய மேலார்க்கும் மேலாலனாகிய எம்பெருமான் தன் சுதந்திரத்தை தளர்த்தி கொடுப்பானாக மகாரத்தை பேராக உடைய ஆன்மாக்கள் தங்கள் சென்னிகளை வணங்குவாராக. இவ்வாறு பிராட்டியின் இருப்பு பெருமானுக்கும், ஆன்மாக்களுக்கும் சிறப்புப் பெற உதவுவதாகும்.

**3. வாய்த்தவத் தாயவள் சேர்த்தியின் றேல்வேத வேத்தியன்தான்**
**வாய்த்தவத் தாவனே? காட்டியும் ஊட்டி மறைத்திடுமவ்**
**வாய்த்தவத் தாயவக் காரியம் சீரிய வாமதுவே**
**வாய்த்தவத் தாயவச் சேதநன் சேர்ந்துநல் வாழ்வுறுமே**

உலகங்களுக்குத் தாயாக வாய்ந்த பிராட்டியின் சேர்த்தி இல்லை—யென்றால், வேதங்களால் பரம் பொருளென்று போற்றப் பெறும் திருமாலும், மெய்ப்பொருள் ஆகமுடியுமா? அவனால் செய்யப்படும் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற செயல்களும் சிறப்புற நிகழுமா? அநாதியான சீவான் மாக்கள் எம்பெருமானைச் சேர்ந்து உய்வு பெறுமா?

**4. வாழ்வது மாகம னுந்திரி யம்பகனும் ககரன்**
**வாழ்வது மாகலை யாதிய மோன முனிக்கணமும்**
**வாழ்வது மாகமும் தாரணி பூவிவ ரத்துயிர்கள்**
**வாழ்வது மாக முதல்தனி வாய்த்த கருணையினே.**

எல்லா பொருள்களுக்கும், தாயாய் கருணையே வடிவெடுத்த பிராட்டி எம்பெருமான் திருமார்பில் வீற்றிருப்பதினாலேயே வானவர் மன்னனாகிய இந்திரனும், ககாரம் என்ற பெயருடைய பிரமனும், முக்கண்ணனாகிய உருத்திரனும், மேம்பட்ட கலைகள் முதலியனவும் இடையறாத தவத்திலேயே ஈடுபட்டு இருக்கும் முனிவர் குழுவும், பூமியும், வானுலகும், அவ்வுலகுகளில் உள்ள ஜீவன்மாக்களும் நல்வாழ்வு வாழ்கின்றன.

**5. கருணைத் திருவுரு காரணத் தோருரு காவலன்தன்**
**கருணைத் திருவுரு உள்ளங் கசிவரக் காகமொடு**
**கருணைத் திருவுரு தானே யரக்கியீர் காப்பெனென்ற**
**கருணைத் திருவுரு உள்ளமன் றோநமைக் காப்பதுவே.**

கருணையே வடிவு எடுத்தவனும், உலககாரணனும் பேரழகிய உருவினனும், உலகைக் காப்பவனும் அழகிய பெருமானுடைய திருவுள்ளம் பெருந்தவறு செய்த காக்கையின் திறத்துக் கருணையால் உருகி அதனை கொல்லாது விடுத்தற்கும், கருணையே வடிவெடுத்தவளாய், தன்னை ஓயாது நலிவுறுத்திய அரக்கியரையும், 'அனுமனால் ஏதம் வராது காப்பேன்' என்ற பிராட்டியின் கருணை வடிவான உள்ளம் அன்றோ? காரணமாகும். அந்தத் திருவுள்ளமே வாழ்க்கையில் பல தவறுகளையும் செய்யும் நம்மையும் பாதுகாப்பதாகும்.

**6. காப்பது நாம்தாங் கருமமே முன்னா எவருமென்னின்**
**காப்பது நாம்தாமென் காப்பதா வைதிகர் சொல்லதெவன்**
**காப்பது நாந்தாங் கருமமே முன்னா அடைந்திவரை**
**காப்பதுங் காசில் குணத்தா லருள்வ தடைந்தவர்க்கே.**

அவரவர் செய்த நல்வினை தீவினைகளுக்கு ஏற்ப நாம் அவர்களைக் காப்பாற்றுகிறோம் என்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றினால் நீர், பெருமானை நோக்கி உலகை காப்பதாக வேதம் வல்லார் கூறுவது பொருந்துமா? 'உங்களைச் சரணாக அடையாதாரை அவர்கள் வினைகளுக்கு ஏற்ப பயனளிப்பீர்; தன்னைச் சரணாக அடைந்தவர் திறத்து உம்முடைய வாத்சல்யாதி குணங்களால் அவர்களை வினைகளை நோக்காது அருள்செய்யக் கடவீர்" என்பாள்.

**7. அடைந்திடும் ஏதெதோ நுந்தான் அடையாத கல்வதுவே**
**அடைந்தில தாகா தெவரெவை தீவினை மாய்வதுவே**
**அடைந்தவை எவ்வெப் பயனும் அடையா திழக்குமதோ?**
**அடைந்திடு வாரும் அடைகிலா தாரும் உமதுசேயே.**

பிராட்டியே! உன்திருவடிகளை சரணாகப் பற்றுபவரும் பற்றாதவரும் உன் மக்களே. உன் திருவடிகளைச் சரணாகப் பற்றாததனால் பலவகை துன்பங்களும் வந்து சேரும்; திருவடிகளைச் சரணாக பற்றாமையால் எந்த தீவினையும் அழியமாட்டா; திருவடிகளைப் பற்றினவர்கள் தாம் கருதிய எவ்வெப் பயன்களையும் அடையாமல் இழப்பதில்லை. இவ்வாறாக தாயாகிய உன்னைச் சரணடையாமல் பலர் துன்பப்படுகிறார்கள் என்பது குறிப்பாகும்.

**8. உமதுசே யாவா ரலாதார் உளரே? கணிப்பதற்கும்**
**உமதுசே யாவ சராசரம் உள்ள அனைத்துமன்றோ!**
**உமதுசே யாவா னலாதவன் ஓர்பொருள் நாரணனே**
**உமதுசேய்க் கூட்டத் தடியவன் ஓர்பொருள் கைவிடவே**

உம்மக்களல்லாதார் என்று குறித்தறிவதற்கும் சிலர்உளரோ? எல்லா இங்கியற் பொருள்களும் உமது குழந்தைகளே. உனக்கு வசப்படாத ஸ்வதந்திரப் பொருள் எம்பெருமான் ஒருவனே. உம்முடைய மக்கள் குழாத்தில் அடியேனும் ஒருவன் ஆகலில் அடியேனைக் கைவிட்டு விடாதீர்.

**9. கைவிடாக் காப்ப தவனெனச் சான்றோர் பறையறைவர்**
**கைவிடாக் காப்பவர் நீரா அவனா எவரறிவார்?**
**கைவிடாக் கொள்கை யனுமனைக் கைவிடச் செய்தவர்யார்?**
**கைவிடாக் காவல் எழுநூ றரக்கியர் கண்டதன்றே?**

எல்லா உயிர்களையும் கைவிடாமல் காப்பவன் என்று சான்றோர் பரக்கக் கூறுவர். அப்படிக் கைவிடாமல் காப்பவர் நீரா? நும் கணவராகிய எம்பெருமானா? என்பதனை உண்மையாகவா அறிகிறார்கள்? அரக்கியரை அழிக்க வேண்டும் என்ற உறுதியான எண்ணத்தோடு வந்த அனுமனை, உம்மைவிடாமல் துன்புறுத்தி வந்த அரக்கியர் எழுநூற்றுவரைப் பாதுகாத்து, அனுமன் எண்ணத்தைக் கைவிடச் செய்த நும் செயலை நோக்க, எல்லா உயிர்களையும், கைவிடாது காக்கும் செயல் உம்முடையதே என்று புலப்படுகின்றதன்றோ?

**10. கண்ட அமுதம் திசைதிருப் புஞ்செயல் காப்பதற்கோ?**
**கண்ட அமுதம் உமைக்குறிக் கொண்டே கடல்கடைந்தான்**
**கண்ட அமுதச் செயலில் களவிதைக் கண்டறிந்தீர்**
**கண்ட அமுதென வையகம் காப்பதார்? எய்துவதே.**

தேவர்கள் உள்ளத்தைத் திசை திருப்பி அவர்கள் நலன் பெறுவதற்காகப் பாற்கடல் கடைந்து அமுதினைக் கொண்ட எம்பெருமானுடைய செயல் அவர்களை அமுதத்தால் காப்பதற்காகவோ நிகழ்ந்தது? ஆய்ந்து கண்டால் உண்மையான அமுதமாகிய உம்மைப் பெற்ற பின்னரே உம்பெருமானுடைய உலகங்காத்தல் தொழில் சிறப்புற நிகழ்ந்து வருகிறது எனலாம். ஆதலின் உலகினை உண்மையாகக் காப்பவர் நீரே என்பது தேற்றம்.

**11. எய்துவ துண்டே? அருளின்றி எம்மோய் எனைத்தையுமே**
**எய்துவ துண்டே? சிவனயன் இந்திரன் தம்பதங்கள்**
**எய்துவ துண்டே? அடியவன் என்றென் றிறைவனுமே**
**எய்துவ துண்டே? நுமநோக் கிலதெனின் முத்தியுமே.**

அலர்மேல் மங்கையீரே! தேவரீர் அருளின்றி எந்தப் பயன்களையும் உலகவர் எய்த இயலுமா? எம்பெருமானும் தனக்கு அடியவன் என்று எவனையும் எய்துதல் இயலுமா? பிரம்மன், சிவன், இந்திரன் முதலியோரும் தத்தம் பதவிகளை அடைதல் இயலுமோ? நும் அருள் நோக்கிலதெனின் வீடுபேற்றினையும் எய்த இயலுமா? என்றவாறு.

**12. முத்தி யுளதென் றளிப்பான் முகுந்தன் ஒருவனன்றே?**
**முத்தி யுளசுவைக் கீடில்லை என்பதே முற்றுமுண்மை**
**முத்தி யுளசுவைக் குற்றான் முகுந்தன் ஒருவனன்றே?**
**முத்தி யுளசுவை நீரின்றேல் முற்றும் பயனிலதே.**

முத்தியை ஆன்மாக்களுக்கு வழங்குபவன் முகுந்தனாகிய திருமாலே. முத்திப்பேரின்பத்துக்கு இணையான இன்பம் இல்லை என்பதே முழுமையான உண்மையாகும். அம்முத்திச்சுவையை ஆன்மா பெறத் திருமாலே காரணம் ஆவான் என்பதும், அம்முத்திப் பேரின்பம் நல்கும் என்பதும், தாயாகிய நீர் இல்லையென்றால் பயனிலவாகும்.

**13. பயனற் றிருப்பன் உபயவி பூதிமான் பண்ணவனேல்**
**பயனற் றிருப்பன் நிகரில் புகழ்சால் பரமனேலும்**
**பயனற் றிருப்பன் தனிமாப் புகழின் படைப்பனேலும்**
**பயனற் றிருப்பன் அலர்மேல மங்கைதன் பாலிலதே**

அலர்மேல் மங்கை தன்பக்கம் இல்லையாயின், மண் விண் என்ற ஈருலகங்களுக்கும் தலைவனாகத் தான் இருந்தாலும், ஒப்பற்ற புகழையுடைய பரம்பொருள் என்ற நிலை இருந்தாலும், ஒப்பற்ற மேம்பட்ட புகழுக்குரிய படைப்புச் செயல்களைச் செய்தாலும் எம்பெருமான் அவற்றால் பயனற்றவனாகவே இருப்பான்.

**14. பால தடைந்தனன் பாதகத் தாபமாழ் தூறதனின்**
**பால தடைந்தனன் பொய்ம்மதிப் பற்றும் ஒழுக்கமதின்**
**பால தடைந்தனன் தீவினைப் பாவிய காடதனின்**
**பால தடைதல் கழியநின் பங்கயத் தாளருளே.**

அடியேன் தீவினையாகிய வெப்பம் சூழ்ந்துள்ள புதர்களில் அகப்பட்டு அடைந்துள்ளேன். அதனால் பொய்யான அறிவைப் பின்பற்றி ஒழுகும் ஒழுக்கத்தை மேற்கொண்டேன். இதனால் தீவினை பரவிய காடாகிய உலக வாழ்க்கையில் ஈடுபட்டேன். அவ்வாழ்க்கையில் ஈடுபடும் அடியேனை மீட்டு பிறவித் துயர் சேர்வதில் நின்றும் நீங்குமாறு உன் தாமரைப் போன்ற திருவடிகளைச் சேர்ப்பாயாக !

**15. அருளால் நிறைந்தொளிர் கண்ணுடை அன்னைநீ, ஆதுலர்பால்,**
**அருளால் நிறைந்த அழகின் இனியைநீ எம்பிரான்பால்**
**அருளால் நிறைந்த அளியைநீ தேவர்தம் மாததம்பால்**
**அருளால் நிறைந்த அலர்மேல மங்கைநீ ஆளெமையே.**

அருளால் நிறைந்த அலர்மேல் மங்கையீர் ! நீர் பிறவிப் பிணியால் வருந்துவோர்பிணி தீர்க்க அருளால் நிறைந்து விளங்கும் அன்னையாய் உள்ளீர்; அருளால் நிறைந்த நீர் எம்பெருமான்பால் இனிய அழகிய உருவெடுத்து அமைந்துள்ளீர்; தேவமாதர் திறத்தில் அருளால் நிறைந்த இரக்கமே வடிவாக உள்ளீர்; அத்தகைய அருள் வடிவாகிய நீர் அடியேனையும் ஆட்கொண்டு அருள்வீராக !

**16. எமையாள வந்தே புணரி எழுந்தீர் அமுதுடனே**
**எமையாள வந்தே துழாய்கமழ் மார்பத் தினிதிருப்பீர்**
**எமையாள வந்தநீர் மங்கா புரத்தில் இருந்தருள்வீர்**
**எமையாள வந்தெம் மனத்தில் இருப்பதும் மாலுடனே.**

எம்மை ஆட்கொள்வதற்காகவே திருமகளாகிய நீர் அமுதத்தோடு அவதரித்தீர்; திருத்துழாய் மணம் கமழும் திருமாலின் திருமார்பில் மகிழ்ச்சியாக இருக்கிறீர்; அலர்மேல் மங்கா புரத்தை உகந்து அருளி வீற்றிருக்கின்றீர்; எம்மை ஆட்கொள்வதற்காக எம்பெருமானுடன் சேர்ந்து எங்கள் உள்ளத்தில் அமர்ந்துள்ளீர்.

17. மாலுநும் கூட்டும் மலமற்(று) அமானவன் பால்தருமே
மாலுநும் கூட்டும் மணிமண் டபத்துட் புகுந்திடவே
மாலுநும் கூட்டும் மணிமண் டபமேவி கேள்விகொள
மாலுநும் கூட்டும் மகிழ்ந்தணைந் துச்சி முகப்பதுவே !

எம்பெருமானுடன் கூடிய தாங்கள் சேர்ந்திருப்பது உலகம் மாசற்று வீட்டுலகிற்கு அழைத்துச் செல்லும் அமானவன் தொடர்பை உண்டாக்கும்; வைகுந்தத்திலிருக்கும் திருமாமணி மண்டபத்தில் புகும் வாய்ப்பினை ஆன்மாக்களுக்கு நல்கும்; எம்பெருமான் 'நீ யார்' என்ன? 'நான் பிரம்மமாகிறேன்' என்று ஜீவான்மா விடை கூறவும், அவ்வான்மாவை மகிழ்வோடு தழுவி தாயன்பால் உச்சி மோக்கும் உயர்நிலையும் தரும்.

18. முகந்தருள் நுந்தம் கருணையின் முன்னர் இணையெதுவே?
முகந்தருள் அண்ணல் கருணை பிறிதின் முனைந்ததுவே?
முகந்தருள் மாறன் அருள்நு மதருளின் முன்வருமே?
முகந்தருள் பூதூர் முனைவன் அருளும் இணையிலதே.

ஆன்மாக்களை விரும்பி தழுவும் எம்பெருமானுடைய கருணை இணையற்றதே? அத்தகைய செயலைச் செய்யும் மாறனுடைய கருணையும் இணையற்றதே? அதனை ஒத்த இராமாநுசர் கருணையும் ஈடு அற்றதே? என்பர். இவற்றுக்கு எல்லாம் காரணமாக அமையும் தாயாராக அன்பு காட்டும் உம் அருளுக்கு முன்னர் ஒப்பாகாது இவைகள் குறைவடையும்.

19. இணையிலை என்பது நித்த விபூதியி லெய்துமின்பம்
இணையிலை என்ப பிறவிக்கண் ஆழ்வதில் எய்துதுன்பம்
இணையிலை யென்ப திறைவன் உயிர்கள்பால் செய்யுமருள்
இணையிலை நும்மருட்(கு) இத்தனை சேரினும் ஒன்றினுக்கே?

நித்திய விபூதி என்னும் பரமபதத்தில் எய்தும் இன்பம் இணையற்றது; பிறவித்துயரில் ஆழும் துன்பமும் இணையற்றது; இறைவன் ஆன்மாக்கள் பக்கம் செலுத்தும் அன்பும் இணையற்றது; இவ்வளவும் ஒன்று சேரினும் தாயாராகிய நுமது அருளுக்கு நிகராகமாட்டா.

**20. ஒன்றினும் ஒன்றா உலகியல் பற்றைக் களைவதற்கே**
**ஒன்றினும் ஒன்றா உயர்பரன் பால்நின் றகலகிலீர்**
**ஒன்றிலும் ஒன்றாக் கயவன் சிறைநின் றுபகரித்தீர்!**
**ஒன்றினும் ஒன்றா உலைப்பும் அரக்கியர் நற்றமிதே.**

தாழ்வில்லாத தனக்கு பிரிதொன்று இணையாகாத இவ்வுலக பற்றினை எம்மிடத்தில் இருந்து போக்குவதற்காகவே, தன்னை ஒக்கும் பொருள் பிரிதொன்று இல்லாத மேம்பட்ட எம்பெருமான் மார்பினில் அகலாது தங்கி இருக்கின்றீர். இழிவில் தனக்கு ஒப்பவர் இல்லாத இராவணனுடைய சிறையில் இருந்து, அவனுக்கு உபதேசித்த நிலையிலும் அரக்கியர் ஈடு இணையில்லா தாழ்ந்த மொழிகளால் அலைத்த நிலையிலும் உம் ஈடில்லா உபதேசத்தால் அவர்களுக்கு நன்மையே புரிந்தீர்.

**21. நற்றமாம் நுந்தாள் சரணா நணுகுவ தோர்செயலே**
**நற்றமாம் நுந்தாள் நணுகி இறைதாள் நணுகுவதே**
**நற்றமாம் நுந்தாள் நணுகப் பிறர்தாள் நணுகுவதோ?**
**நற்றமாம் நுந்தாள் நணுகா திறைதாள் நணுகுவதோ?**

நன்மையே தரும் நும் திருவடிகளைத் தஞ்சமென்று பற்றுவதே மேம்பட்ட செயலாகும். உம் திருவடிகளை முதற்கண் பற்றிட்ட பின் எம்பெருமான் திருவடிகளைப் பற்றுவதற்குப் பிறருடைய பரிந்துரைக்கு முயல்வது தேவையற்ற செயலாகும். உம் திருவடிகளைப் பற்றாது எடுத்த எடுப்பிலேயே எம்பெருமான் திருவடிகளைப் பற்றுவது முறையல்லவே.

**22. நணுகுவ துண்டே? அகப்புறப் பற்றுசால் நாகரீகம்**
**நணுகுவ துண்டே? பிறவித் தொழுவினில் நாலுசெயல்**
**நணுகுவ துண்டே? நமன்தமர் சித்திர குத்தனாதி**
**நணுகுவ துண்டே? பரத்துவம் நக்கனைப் போல்பவர்க்கே.**

உம்மைச் சரணமடைந்தவர்களை யான் எனது என்ற அகப்புறப் பற்றுக்கள் கொண்ட பண்பாடு அடையுமோ? பிறவியாகிய தொழுக்கட்டையில் இயங்கும் செயல் அடையுமோ? இயமனுடைய ஏவலன் சித்திரகுத்தனும் நமனும் நலிவதற்கு அணுகுவார்களா? உம்மைச் சரணமடைவோருக்குச் சிவன் முதலான தேவர்களைப் பரம் பொருளாந் தன்மை உண்டென்ற நினைவு ஏற்படுமா?

**23. கேதங்கள் வாரா நமன்தமர் கேள்விகொள் தீயசொற்கள்**
**கேதங்கள் வாரா பராசத்தி போல்பவர் கீழ்ப்படிதல்**
**கேதங்கள் வாரா புறசம யத்துறு கேடுசெயல்**
**கேதங்கள் வாரா நுமதிரு தாள்மலர் கிட்டுவார்க்கே.**

உம்முடைய திருவடிகளிரண்டினையும் சரணாகப் பற்றுபவர்களுக்கு, யமனுடைய ஏவலர் பழித்துக் கூறும் தீயசெயல்களைக் கேட்கும் தீவினையாகிய துயரங்கள் வாரா. உமாதேவி முதலிய சிறுதெய்வங்களை வழிபாடு நிகழ்த்தும் குறைபாடுவாரா. வேற்றுச் சமயங்களைப் பின்பற்றுவதாகிய தீயசெயல்களும் ஏற்பட மாட்டாதென்பதாம்.

**24. கிட்டுவ துண்டே? நுமதடி யாரெனும் கேழில்பதம்**
**கிட்டுவ துண்டே? மிதுநநும் கீழிருந் தாற்றுதொண்டு**
**கிட்டுவ துண்டே? மிதுநநும் கேழில புன்முறுவல்**
**கிட்டுவ துண்டே? மிதுநறும் தாண்மலர்க் கீழிருப்பே**

நும்முடைய அடியவரெனும் ஒப்பிலாப் பதவி எல்லோருக்கும் கிட்டுமோ? பெருமானும் நீருமாக இருக்கும் இருவீர் திருவடிகளின் கீழிருந்தாற்றும் தொண்டு எல்லோருக்கும் கிட்டுமோ? நும்மிருவருடைய ஒப்பற்ற புன்முறுவலைக் காணும் வாய்ப்புகள் எல்லோருக்கும் கிட்டுமோ? இருவருடைய திருவடித்தாமரைகளின் கீழ் என்றும் இருக்கும் இருப்பு எல்லோருக்கும் கிட்டுமோ?

**25. தாள்மலர்க் கீழ்நின் றிரப்பர் தரணி புரப்பவரும்**
**தாள்மலர்க் கீழ்நின் றிரப்பர் தமதியல் பெய்துவாரும்**
**தாள்மலர்க் கீழ்நின் றெனைவரும் தாங்குவர் மெய்யுணர்வே**
**தாள்மலர்க் கீழ்த்தொண் டலர்மேல மங்கை! தனமெமதே.**

அலர்மேல் மங்கையாகிய அன்னையே! இவ்வுலகைக் காக்கும் அரசர்களும் உன் திருவடித்தாமரைகளின் கீழ் நின்று வேண்டிய செல்வத்தை இரப்பர். கைவல்ய இன்பம் வேண்டுவாரும், அந்தமில் பேரின்பம் வேண்டுவாரும் இவற்றின் காரணமாகிய மெய்யுணர்வு பெற விரும்புவாரும் உன் திருவடித்தாமரைகளைப் பற்றியே இருப்பர். உம் திருவடிக்கீழ் தொண்டே அடியேன் வேண்டும் செல்வமாகும்.

**26. தனத்தவர் தாய்நின கோட்டி தனிமுதல் கோட்டியையும்**
**தனத்தவர் நேர்மைத் தனிமனந் தன்னில் நிறுத்தெடுத்து**
**தனத்தவர் கௌரவத் தாய்நின கோட்டி லகுமிகுத்த**
**தனத்தவர் சாமிதன் கோட்டி எனுநிலை தந்தனரே.**

தாயே! ஸ்ரீய:பதி திருவடிகளில் தொண்டு செய்தலையே தமக்குச் செல்வம் என்று கருதும் அடியவர், உமது குழாத்தின் பெருமையையும், ஒப்பற்ற முதற்பொருளாகிய எம்பெருமானுடைய குழாத்தின் பெருமையையும், தங்கள் மனமாகிய தராசின் இருதட்டுகளிலும் நிறுத்துப்பார்த்து தாயாகிய உங்கள் குழாத்தின் பெருமையே மதிப்புடையது எனவும், எம்பெருமானுடைய குழாத்தின் பெருமை சற்று மதிப்பு குறைந்ததுவே எனவும் நிலைநாட்டியுள்ளனர்.

**27. தந்த மலைக்கும் வினையர் தகவிலர் என்னநிரை**
**தந்த மலைக்குடை யான்தள்ளு மென்றும் தருக்கியிகல்**
**தந்த மலைக்குமைத் தான்திருத் தாளிணைத் தஞ்சமென்று**
**தந்த மலையவர் மேல்மங்கை சற்றே தரிப்பதுண்டே.**

பசுக்களையும் ஆயர்களையும் காப்பதற்காக கோவர்த்தன மலையை குடையாக எடுத்தவனும், தன்மேல் செருக்குற்று போர் செய்யவந்த சாணூரன், முஷ்டிகன் என்ற மல்லர்களை அழித்தவனான எம்பெருமான், வினைகளால் துன்பத்தையடைந்த அடியார்கள் தன்னை நேராக தஞ்சமடைந்தால், இவர்கள் நெடுநாள் செய்த அபராதங்களைக் கணக்கிட்டுச் சீறுவான் என்று நினைத்து, தேவரீர் புருஷகாரமாகிய சிபாரிசு பண்ணி அடியார்களை எம்பெருமான் திருவடிகளை அடையத் தந்து, பெருமான் அவர்களை ஏற்கும்வரையில் ஆறியிராமல் அடியார்களுக்காகப் பதறுபவள் அன்றோ நீர்?

**28. உண்டே? திரிபோ டுணர்வின்மை ஐயம் முதலதீர்தல்**
**உண்டே? இவற்றின் ஒழிந்துப் பெறப்பெறு மெய்யுணர்வும்**
**உண்டே? பரனெனுந் தாரக மாதியாம் உச்சநிலை**
**உண்டே? உடையான் குறைதீர் வதின்றேல் உமதுநோக்கே.**

அன்னையீர்! நுமது கடைக்கண்பார்வை எங்கள் மேல் பொருந்தாவிடில் அறிவின்மை திரிபுணர்ச்சி, ஐயம் என்ற குறைபாடுகள் ஆன்மாக்களை விட்டு நீங்குமா? இவற்றின் நீங்கிப் பெறக்கூடிய மெய்யுணர்வு ஏற்படுமா? எம்பெருமானே தாரகம், போஷகம், போக்கியம் என்ற மனநிலை ஏற்படுமா? ஆன்மாக்கள் தன்னை கிட்டவில்லையே என்ற எம்பெருமானுடைய குறையும் தீருமா?

29. உமதுநோக் கன்றே? பலபல அண்டங்கள் உள்ளவாதல்
உமதுநோக் கிவ்வெலாம் பாலநும் செய்பொருள் உள்ளதுவும்
உம்மதுநோக் கின்றே? இவைதாம் நிரல்பட ஊர்வதுவே?
உமதுநோக் காமதின் ஒப்பின் றருளுமிவ் வின்பமிதே.

அம்மையீர்! உம் கடைக்கண் பார்வை செலுத்தப்படாவிடின் எம்பெருமான் பல அண்டங்களைப் படைப்பதுவும், அவனால் காக்கப்பட்ட இவ்வண்டங்கள் உளவாதலும், இவற்றின் செயல்கள் நிரல்பட நிகழ்வதுவும் ஒப்பற்ற வீட்டின்பத்தை இவ்வான்மாக்கள் எய்தி வாழ்வதுவும் நிகழற்பாலதா?

30. இன்பம் உளதா எவரும் மயங்கி விடமரத்தில்
இன்பம் உளதா எவரும் பறிப்பர் விடக்கனிகள்
இன்பக் கனிதான் மிதுநநும் பாலன் பிமையதின்றி
இன்பக் கனியாம் நுமதடி யாரோ டிணங்குமிதே.

இன்பம் உளதாகக் கருதி மனமயக்கங்கொண்டு சிலர், உலகியலாகிய விஷமேறிய மரத்தில் தோன்றும் விஷக்கனிகளைப் பறிப்பர். பிராட்டியும் பெருமானும் ஆகிய நும் இருவரிடம் அன்பு செய்வதன்றி இன்பமாகிய கனிதான் வேறுளதோ? உங்கள் அடியவரோடு இணங்கி வாழும் வாழ்வே உண்மையான இன்பச்சுவை தரும் பழமாகும்.

31. இணங்கிநும் தொண்டர்தம் கூட்டத் திருந்திட லென்பதென்னே!
இணங்கிநும் தொண்டர்தம் கூட்டத் திரானொரு தொண்டனாமே?
இணங்கிநும் தொண்டர்தம் கூட்டமே வானுல கின்பமாமே?
இணங்கிநும் தொண்டர்தம் கூட்டத் திருந்திடச் செய்கெனையே

நும்மடியார்தம் கூட்டத்தோடும் கலந்து வாழ்தலென்பது ஒரு சாதாரணச் செயலாகுமா? உங்கள் அடியார் கூட்டத்தின் இணக்கம் இல்லாதவனும் தொண்டருள் ஒருவனாவானா? நும் தொண்டரோடு இயைந்துவாழும் வாழ்வே வானுலகின்பமாகும். ஆதலின் அடியேனை நும் அடியார் நடுவின் இருந்திடச் செய்யும் அருளினைச் செய்வீராக!

**32. எனைப்போல் பிழைசெய்வார் யாரே? உலகினில்**
**இல்லையென்றும்**
**எனைப்போல் பிழைசெய்யார் யாரே? உலகினில்**
**இல்லையின்றும்**
**எனைப்போல் பிழையாமை செய்தொறும் யானென**
**தின்மையுண்டேல்**
**எனைப்போல் பிழையாமை உம்மரு ளாலல்ல தில்லையன்றே.**

என்னைப்போல் தவறான செயல்கள் புரிந்தவர்கள் உலகில் என்றுமில்லை, என்னைப்போல் மனமொத்து பிழைசெய்யாதவர் உலகில் யாருமில்லை. யானென்று அகப்பற்றும் புறப்பற்றும் கழிந்ததென்றால் செயலில் பிழையில்லையாம். அத்தகைய அகப்புறப் பற்றும் நீக்கிச் செயல்களைப் பிழையறச் செய்தல் உம்மருளாலல்லது ஏற்படாது.

**33. அன்றே மகரமும் ஆமையுங் கேழலுந் சிங்கமாவான்**
**அன்றே சறையினான் ஆன்மேய்க் கரைசால் துவருடையான்**
**அன்றே இரணியன் ஊனுண் டவனென அறிந்திலிரே?**
**அன்றே வனசத் தமுதின் அமுதுடன் தோன்றினீரே.**

ஒவ்வொரு காலத்தில் மீனாகவும், ஆமையாகவும், பன்றியாகவும், நரசிங்கமாகவும் அவதரித்த எம்பெருமானே மாட்டாங்கழியில் தோல்பை தொங்க அழுக்குப்படிந்த செந்நிற ஆடையை அணிந்த ஆயனாகிய கண்ணனாவான். அடியவனுக்கு தீங்கு செய்த இரணியனுடைய மார்பைப் பிளந்த அவன் உடலை உண்டவனும் அப்பெருமானே யன்றோ? அன்று பாற்கடலில் அமுதம் தோன்றியபொழுது தாமரை மலரில் தோன்றிய தாங்கள் அவன் மார்பில் இணைந்திருக்கின்றீர். அவனைத் தாங்கள் அறியவில்லையா?

**34. மறைதலும் தோன்றலும் உண்டே? உலகினில் மானிடர்க்கும்**
**மறைதலும் தோன்றலும் வாச வனாதியா தேவர்களும்**
**மறைதலும் தோன்றலும் உண்டே? மலரயன் சூலியொடும்**
**மறைதலும் தோன்றலும் மங்கைநும் ஆட்சிக் கிலைகறங்கே.**

அலர்மேல் மங்கையீர்! உம்முடைய ஆளுகை நன்றன்றே! மறைதலும் தோன்றலுமாகிய சுழற்சி இல்லை. ஆனால் உலகில் உள்ளமானிடர் முதலியோருக்கும் இந்திரன் முதலிய தேவர்களுக்கும் தாமரை மலரில் தோன்றிய பிரமனுக்கும் அவன் தனயனாகிய சிவனுக்கும் பிறப்பிறப்பாகிய தோன்றலும் மறைதலும் உண்டன்றோ?

35. கறங்குபு சக்கர கையன லதிலேன் காசினியில்
கறங்குபு செல்வக் கறையி னுறைந்திலேன் கல்விதனில்
கறங்குபு நெஞ்சின் இளந்துணுக் குற்றனென் காத்திலையே
கறங்குங் கரிசறத் தேற்றந் தருவித்தை நீயலையே?

சுழலும் சக்கரத்தை என்றும் கையிலேந்திய திருமாலைப் பற்றிய அடியேன் வேறு தெய்வங்களை அறியேன். மாறி, மாறி வரும் செல்வமாகிய மாசு என்பக்கல் வராதபடியானேன். கல்வியைப் பெற அற்பத்துணிவுடையேனாய் முற்றப்பெறாத வனானேன். நின்றவாநில்லா நெஞ்சின் கரிசைப் போக்கித்தெளிவைத்தரு வித்தை நீயாயிருந்தும் கல்வியை முற்றநீர் தந்திடவில்லையே.

36. நீயலை யேயணு வாயே விபுவின் நிமிர்ந்துறைவாய்
நீயலை யேநிதி யாளி பெறுவதும் நின்னிடமே
நீயலை யேயவன் பாலநம் நேருறச் செய்வதுவே?
நீயலை யேமுத்தி இன்பம் இணைந்திருந் தாக்குவிப்பே

அணுவளவாக இருந்தும் நீர், எங்கும் வியாபித்துள்ள விபுவான பெருமானைப்போல் சக்திவிசேஷத்தாலே கரந்தெங்கும் பரந்தெங்கும் உள்ளாய் நீரன்றோ? செல்வத்துக்கு உரிய தெய்வம் நீரல்லையோ? அனைவரும் எல்லாச் செல்வமும் பெறுதல் உம்மிடமிருந்தன்றோ? எம்பெருமானுடைய காத்தல் தொழிலை முறையாகச் செய்பவரும் நீயல்லையே? எம்பெருமானோட கூடியிருந்து புருஷகாரம் செய்து அடியார்கள் வீடு பேற்றின்பம் அடைவதற்காக முயற்சி செய்பவள் நீரன்றோ?

37. ஆக்கலுங் காத்தல் உமதுளத்து கப்பினுக் கெம்பெருமான்
ஆக்கலுங் காத்தலும் ஆவவே? உந்தங்கண் ணோக்கிலதேன்
ஆக்கலுங் காத்தல் அழிப்பதொன் றன்றி நுமக்காக
ஆக்கலுங் காத்தல் அழித்தல் ஆம்பயன் சேதநனே.

எம்பெருமான் படைத்தல் காத்தல் அழித்தல் தொழில்களைச் செய்வது உமக்கு இன்பத்தை அளிப்பதற்கே. உம் பார்வையின்றேல் பெருமானுடைய ஆக்கலுங்காத்தலு முறையாக நிகழா. எம்பெருமான் முத்தொழிலும் செய்வது உமக்காக. இம்முத் தொழில்களால் ஆகும் பயன் சேதநனைத் தம்மோடிணைத்துக் கொள்வதற்காகவே.

**38. உடனிருந் தன்பர்போல் ஊறுபல் லாற்றற் களவுமுண்டே?**
**உடனிருந் தாக்கம் அறிவொடு வீக்கும் உணக்குவமே**
**உடனிருந் தைம்பொறி ஊட்டும் புலநலத் தொன்றுவமே**
**உடனிருந் துந்தம் கடைக்கணின் நோக்குவீர் தீர்ந்திடவே**

ஐம்பொறிகள் இவ்வுடம்பில் ஆன்மாக்களோடு கூடியிருந்து ஆற்றும் பலவகை இடையூறுகளுக்கு எல்லையுண்டோ? அவை ஆன்மாவோடு தொடர்ந்திருந்தே பக்தி செல்வத்தையும் ஞானத்தையும் கெடுக்கிறது, அவை: போக்கும் திறத்தை நாங்கள் அறிவோமா? அவ்வாறு அறியாமல் ஐம்பொறிகள் உண்பிக்கும் புலனின்பத்தில் ஈடுபட்டுக் காலங்கழிக்கின்றோம். இத்தகைய அறியாமை எம்மைவிட்டு நீங்குமாறு தாயாகிய நீர் எம் பக்கம் இருந்து உமது கடைக்கண்ணால் நோக்கி எமக்கு அருள் செய்வீராக.

**39. தீர்ந்திடச் செய்தீர் துருவனைச் சிற்றனைச் செய்கொடுமை**
**தீர்ந்திடச் செய்தீர் இரணியற் கொன்றவன் சேய்கொலையை**
**தீர்ந்திடச் செய்தீர் சிறைப்படு மாதர் பிறர்துயரும்**
**தீர்ந்திடச் செய்வீர் அடியேன் படுங்கடுந் தீமைகளே.**

துருவன் என்ற அரசிளங்குமரனுக்கு அவன் சிற்றன்னையால் ஏற்பட்ட துயரங்கள் எம்பெருமானைக் கொண்டு நீங்குமாறு செய்தீர். இரணியனைக் கொன்று அவன் மகன் பிரகலாதன் கொலை செய்யப்படுதலை நீங்குமாறு செய்தீர்; இத்தகைய தாங்கள் அடியவனாகிற நான் படும் கடுந்தீவினைகளும் நீங்குமாறு செய்வீராக !

**40. தீமைகள் செய்வன ஐம்பொறி சேர்க்கும் புலனலங்கள்**
**தீமைகள் செய்வன பெண்ணெனும் ஆணெனும் ஈருடல்கள்**
**தீமைகள் செய்வன ஒன்றினோ டொன்றுடன் சேர்பிணக்காம்**
**தீமைகள் செய்வன மேல்நலம் சேரத் தடையிழைத்தே.**

ஐம்பொறிகளால் நுகரப்பெறும் புலனின்பங்கள் சேதநன் எம்பெருமானை அடையாதபடி தீமைகள் செய்கின்றன. பெண்ணுடல் எனவும், ஆணுடல் எனவும் பருத்து உலாவப்படும் இருவகை உடல்களும் தீமைகள் தருவனவேயாம். மேம்பட்ட வீட்டின்பம் அடைய முடியாதபடி தீமை செய்யும் இவற்றை அகற்றுவீராக.

**41. இழைப்ப துலகென காப்ப தழிப்ப திவைசெயல்கள்**
**இழைப்பதற் கோர்துணை இன்றித் தனதிடத் தாக்குமவன்**
**இழைப்பவன் மார்வத் திருந்துநீ ரீதின் இகந்தெவையும்**
**இழைப்பவற் கொண்டே இணையில்பே ரின்பத் திருத்துவீரே.**

உலகங்களைப் படைத்தலும், காத்தலும், அழித்தலும் என்ற முத்தொழில்களையும் பிறருதவியின்றி எம்பெருமான் தானே தனதிடத்தே நிகழ்த்தும் போது, தேவரீர் திருமார்பில் பிரியாமல் உறைந்து கொண்டு முத்தொழில்களிலும் தொடர்பின்றி, எல்லா உயிர்களும் எம்பெருமானைக் கொண்டே, இணையில்லாப் பேரின்ப உலகமாகிய பரம பதத்தில் சேர்வதற்கு ஆவன செய்கின்றீர்.

**42. இருத்துவீர் நான்முக னாதி எவரையும் தம்பதத்தே**
**இருத்துவீர்; தாளடையாரை அவர்தம் இருவினையில்**
**இருத்துவீர்; தத்தம் வரம்புடை யார்தம் இயல்பறிந்து**
**இருத்துவீர்; தஞ்சமா ஈரிணைத் தாள்களில் தொண்டுடனே.**

நான்முகன் முதலிய தேவர்களை அவரவர் பதவிகளில் நிலையாகப் பலகாலம் வரை இருக்கச் செய்கின்றீர். உம்மை வணங்காதவர்களை அவரவர் நல்வினை தீவினைகளுக்கேற்பப் பயன் தந்து நுகரும் வண்ணம் வாழ்க்கையிலிருக்கும்படி காலம் கழிக்க வைக்கின்றீர். ஆன்மாநந்தமே போதும் என்ற வரம்புடையவர்களை கைவல்யத்திருக்கச் செய்கின்றீர். உம்மையே தஞ்சமாக அடைந்த அடியார்களை நும்மிருவருடைய இணைந்துள்ள திருவடிகளில் செய்யும் திருத்தொண்டை நிலையாக ஈடுபடுத்துகின்றீர்.

**43. தொண்டினை யன்றிச் சுகமே? உலகொரு நாயகமே**
**தொண்டினை யன்றிச் சுவர்க மெனுமோர் தனிச்சுகமே?**
**தொண்டினை யன்றி உயிர்சுகத் தாழ்தல் ஒருசுகமே?**
**தொண்டினை யன்றிக் குழாத்தொடும் உந்தம்**
**தொண்டுமொன்றே?**

உமது திருவடிகளில் தொண்டு செய்வதால் ஏற்படும் இன்பம் உலகொரு நாயகமாக ஆளும் தலைமையாலும் கிட்டாது. இதனை ஒத்த இன்பம் சுவர்கம் முதலான எவ்வுலகத்திலும் இல்லை. இதனை ஒத்த இன்பம் ஆன்மாதன்னைத் தானே அநுபவிக்கிற கைவல்யத்திலும் இல்லை. தங்கள் திருவடிகளில் அடியார் குழாத்தொடும் ஒன்றிச் செய்யும் தொண்டே பேரின்பம் பயப்பது. தனித்துச் செய்யும் தொண்டு பேரின்பம் பயவாது.

**44. ஒன்றும் அறிந்திலன் ஒள்ளிய உந்தம் அருட்பெருக்கை**
**ஒன்றும் அறிந்திலன் எம்மான் பரத்துவத் துண்மைதனை**
**ஒன்றும் அறியேன் அணுவில் விபுத்தனை உட்படுத்தல்**
**ஒன்றும நிந்திலன்யான் எங்கும் அணுநீர் எனவொத்தே.**

மேம்பட்ட தாயாகிய உம்முடைய அருள்வெள்ளம் பற்றி ஒன்றும் அறியேன் அடியேன். அதுபோலவே எம்பெருமானுடைய மேலார்க்கும் மேலானாகிய, உண்மையும் அறியேன். எங்கும் பரந்திருக்கும் தனித்தன்மையை உடைய எம்பெருமான் அணுவளவினதாகிய ஆன்மாவுக்குள் மறைந்திருப்பதையும் அணு அளவு நுண்ணிய தாங்கள் எங்கும் பரவியிருக்கும் விபுவாகிய எம்பெருமான் அளவினை ஒத்திருப்பதனையும் அறியேன்.

**45. ஒத்திருப் பீர்நீர் உபேய நிலைதனக்கு எவ்வுயிர்க்கும்**
**ஒத்திருப் பீர்நீர் உபாய நிலையில் புருடகாரம்**
**ஒத்திருந் தேயுநீர் காக்கும் நிலையில் உடனருள்வீர்**
**ஒத்திருந் (து) அண்மையில் நீக்கும் தொழிலில் உடனிருப்பே**

எம்பெருமான் எல்லா உயிர்களுக்கும் சென்று சேரத்தக்க பயனாகிய நிலையில் இருக்கும்போது உயிர்களுக்கு இன்பம் அருளும் நிலையில் தாயாகிய நீங்கள் எம்பெருமானை ஒத்திருப்பீர். உயிர் எம்பெருமானை அடையும் உபாய நிலையில் பரிந்துரைக் கூறி, உயிர்களைப் பாதுகாக்கும் தொழிலில் எம்பெருமானோடு உடனிருந்து செயல்படுகின்றீர். அவன் பக்கலில் உடனிருந்தும் அவன் செய்யும் அழித்தல் தொழிலையும் ஆமோதிக்கிறீர்.

**46. ஒட்டிலிர் எம்பிராற் சேடம் உளதன்றிப் புன்மியொன்றும்**
**ஒட்டிலீர் ஒன்றும் சுதந்திரம் இன்றன்றிப் பண்பிலதில்**
**ஒட்டிலீர் இவ்விரு தன்மையும் இன்றி ஒருகுறையும்**
**ஒட்டிலீர் உம்பர்கோன் சேதநர் பற்றருள் மற்றவையே**

தாயாராகிய தாங்கள் எம்பெருமானுக்கே யடிமையாயுள்ளீர். மற்றவர் திறத்து அடிமையாம் கீழ்மை யன்றித் தலைவியாக உள்ளீர். தங்களுக்கு எம்பெருமானை விடுத்துச் சுதந்திரம் இல்லை. எம்பெருமானுக்கு அடிமை. மற்றவருக்குத் தலைமை. ஏனைய உயிர் பண்புகள் யாவுக்கும் நிபந்தனம் என்ற இரு தன்மை அன்றி நுமக்கு குறைதரும் பண்புகள் எதன் கண்ணும் தொடர்பில்லை. எம்பெருமான் திறத்துப் பற்றும் உயிரினங்கள் திறத்தருளுவதன்றி மற்றைய கீழான பண்புகளோடு தொடர்புடையீரல்லீர்.

**47. மற்றவை தாம்சுவை, யற்றவை மாயையை யாரறிவார்?**
**மற்றவை தாம்சுவை யுற்றவை யாமென மாலுமிதே**
**மற்றவை தாமற்ப சாரம் உயிர்ச்சுவை மாரணமே**
**மற்றவை தீர்ந்தும் தொண்டர் குழுவுடன் வாழ்சுவையே**

உம் திருத்தொண்டு தவிர ஏனையவை சுவையற்றவையாகவும், சேதனன் அவற்றை சுவையுடையனவாகக் கருதச் செய்யும் உமது மாயையின் ஆற்றலை அறியவல்லவர் யார்? மற்ற பொருள்கள் சுவையுள்ளன என்று சேதனன் கருதுதல் மாயையின் மயக்கமே. ஏனைய புலனின்பங்கள் மிகக்குறைவான சுவையுடையனவே. மரணமாகிய கைவல்ய முதலான இவற்றை விடுத்து நும் தொண்டர் குழாத்தொடும் வாழும் சுவையே மேம்பட்ட சுவையாகும்.

**48. வாழ்சுவை மிக்கசீர்த் தொண்டர்க் கமுதெனும் வாய்மொழியும்**
**வாழ்சுவைப் பேருரை ஐவர் வழங்கிய கோலமுடன்**
**வாழ்சுவை மிக்க கலியன்சொல் மாலையா றங்கமுடன்**
**வாழ்சுவை வேரிமா மாறாத பூமேல் இருப்பருளே.**

மேம்பட்டநறுமணம் மாறாத தாமரைமேல் இருக்கும் பெருமாட்டியே! நல்வாழ்வுக்கு உரிய சுவை மிக்க சிறப்பினையுடைய தொண்டருக்கு அமுதம் எனப்படும் திருவாய்மொழியும், இந்நூலுக்குத் திருக்குருகைப் பிரான் பிள்ளான், நஞ்சீயர், வாதிகேசரி, பெரியவாச்சான்பிள்ளை, நம்பிள்ளை சொன்னதை ஏடுபடுத்திய வடக்குத் திருவீதிப்பிள்ளை இவர்கள் வழங்கிய ஐந்து உரைகளும் ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி, இருபத்திநாலாயிரப்படி, முப்பதாறாயிரப்படி என்று போற்றப்படும் அழகிய ஐந்து உரைகளும், மேம்பட்ட திருமங்கை மன்னன் அருளிய பெரிய திருமொழி திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், சிறிய திருமடல், பெரிய திருமடல், திவெழுகூற்றிருக்கை என்ற பெயர்களையுடையதாய் அருளிய சொல் மாலைகளும் உன் அருளால் ஏற்பட்டனவாகும்.

**49. இருப்பதும் வந்தும் உறைவதும் ஏற்றசீர்த் தாமரையே**
**இருப்பதும் நாச்சியார் கோயிலும் வெள்ளறை ஏருறையூர்**
**இருப்பதும் எல்லா இதய கமலத்(து) இறைவனுடன்**
**இருப்பதும் நித்திய சூரிகள் வாழ்த்த இறையுடனே.**

அலர்மேல்

உனக்குப் பொருத்தமான சிறப்பையுடைய தாமரையே நீ காட்சி வழங்குமிடமும் தோன்றுமிடமும், நிலையாத் தங்கி இருக்குமிடமும், நீ கோயில் கொண்டிருக்கும் திருப்பதிகள் திருநறையூர், திருவெள்ளறை, திருஉறையூர், முதலியனவும். ஆன்மாக்களின் இதய தாமரைகளும் நித்திய சூரிகள் வாழ்த்தும்படி இறைவனுடன் வீற்றிருக்கும் பரமபதமும் உனக்கு நிலையான இருப்பிடங்களாகும்.

50. இறையுடன் எவ்வெப் பிறப்பினும் தோன்றல் இணக்குமுடன்
இறையுடன் சேர்ந்திருந் தெவ்வெவ் வளத்தினு முந்துகிறீர்
இறையுடன் சேர்ந்தே பரனெனும் ஏற்றம் விளைப்பதுவே
இறையுடன் சேர்க்கவும் இன்பநீர் சேதனர் ஏற்பதுவே.

எம்பெருமான் எடுக்கும் எவ்வெவ்வதாரத்திலும் அவன் திருவுளத்துக்கு ஏற்பவே தோன்றுதலும், எம்பெருமானுடன் சேர்ந்திருந்தே எல்லா அறங்களிலும் முற்பட்டு செயற்படுதலும், எம்பெருமானை நீர் சேர்ந்திருந்திருப்பதாலேயே அவனுக்கு 'எல்லாரிலும் மேம்பட்டவன்' என்று ஏற்றம் விளைவிப்பதும், எம்பெருமானுடன் ஆன்மாக்களைச் சேர்ப்பதும், அவற்றை அவன் ஏற்றுக் கோடலும் ஆகியவை அனைத்தும் தாயாராகிய உங்களுக்கு மதிப்புடைய செயல்களாகும்.

51. ஏற்பதும் எல்லா உலகும் இணையில் தனம்விரும்பி
ஏற்பதும் ஞாநிகள் எல்லாம் பரனிடம் சேர்ந்திடவே
ஏற்பதும் நித்தரும் முத்தரும் தந்தொண் டெழிலுறவே
ஏற்பதும் எம்மான் அகத்தெழில் நீர்தாம் முகத்தெளிவே.

எல்லா உலகத்திலுள்ளவர்களும், ஒப்பற்ற செல்வத்தை விடும் ஞாநிகள் எல்லோரும் தம்மை எம்பெருமானிடம் சேர்ப்பிப்பதை விரும்பியும், நித்தியசூரிகளும், முத்தி பெற்றுப் பரமபதத்திலுள்ளவர்களும், தங்கள் தொண்டுசிறக்க அவர்களால் வழிபடப்படுகின்ற தாங்கள் எம்பெருமான் உள்ளத்தெய்தும் உகப்பைக் கண்டு, அதனால் ஏற்படும் மகிழ்வால் முகத்தின் தெளிவான அழகைப் பெற்றுள்ளீர்கள்.

52. முகத்தெளி வுள்ள தறிவிலார்க் குத்தனம் முந்துதலால்
முகத்தெளி வுள்ளதாம் மூதறி ஞர்தமது மெய்யுணர்வால்
முகத்தெளி யுண்டாம் பரனுக்குத் தம்மை முகந்தளிப்பால்
முகத்தெளி வுண்டாம் முகம்பரன் சீர்தனைக் கண்டுமெக்கே.

மங்கையந்தாதி

அறிவில்லாதார்க்கு செல்வம் மிகுதலினாலே முகத்தெளி வேற்படுகிறது. உண்மையறிவுடையவர்களுக்குத் தத்துவ ஞானத்தால் முகத்தெளிவுண்டாகிறது. மெய்யடியார்கள் தம்மை முற்றவும் வழங்குதலால் அப்பரனுக்கு உள்ளத்துகப்பால் முகத் தெளிவுண்டாகிறது. எம்பெருமான் உகப்பைக் கண்டு உகத்தலால் தாயாராகிய உமக்கு முகத்தெளிவும் மகிழ்ச்சியுமேற்படுகிறது.

53. உமக்கொரு பாதப் பயனாம் உலகோர் செழிப்புறவே
உமக்கொரு பாதிப் பயனாம் சுவர்க துற்றிடுதல்
உமக்கொரு முக்கால் பயனாம் தமதியல்(பு) ஊர்புகுதல்
உமக்கொரு முற்றாம் அடியார் குழுவில் உடனிருப்பே

உலகவர் செழிப்புறும் செயல் எம்பெருமானுக்கும், தாயாராகிய உமக்கும் காற்பங்கு மகிழ்ச்சியாகிய பயனைத் தருகிறது; ஆன்மாக்கள் சுவர்க்க இன்பம் அடைதலால் உமக்கு அரைப்பங்கு மகிழ்ச்சியாகிய பயன் கிட்டுகிறது; ஆன்மாக்கள் விட்டுலகம் அடைந்து கைவல்லிய இன்பம் நுகர்தலைக் கண்டு உங்களுக்கு முக்காற் பங்கு மகிழ்ச்சிப் பயன் ஏற்படுகிறது; அடியார் குழாத்தில் நடுவில் நீவிர் இருவரும் இருப்பது உமக்கு நிறை மகிழ்ச்சியாகிய பயனை உண்டாக்குகிறது.

54. அடியார் குழாங்களைக் காணுதல் வாய்மென் றறிவளித்தீர்!
அடியார் குழாங்களைக் காணும் பெரும்பயன் ஆய்ந்தளித்தீர்!
அடியார் குழாத்தின் அகத்துறை பேரின்பம் ஈந்தநீரே
அடியார் அடிசூடும் பேரர சாள நினைப்பிரன்றே.

அடியார் குழாங்களைக் காணுதலே உண்மையான செயல் என்ற அறிவைத் தந்துள்ளீர். அதனால் ஏற்படும் பெரும் பயனை அடியேன் பெறுமாறு என் நிலையை ஆராய்ந்தருள் செய்தீர். அடியார் குழாத்துள் அடியேனும் ஒருவனாக அவருடனே இணைந்து தங்கும் வாய்ப்பினை நல்கிய தாங்களே, அடியேன் அடியார்களுடைய திருவடிகளைத் தலையில் சூடி மகிழ்தலாகிய பெரிய அரசாட்சியை அருளுமாறு திருவுள்ளம் பற்ற வேண்டும்.

55. நினைப்பதும் எல்லா உயிர்களும் உய்யுமா நீக்கமின்றி
நினைப்பதும் எம்பிரான் காப்பும் நிகில செயல்நலங்கள்
நினைப்பதும் தேவிகள் மற்றவர் நும்போல் நினைவுகொள்ள
நினைப்பதும் செவ்விதான் நீள உபய விபூதியுமே

எல்லா உயிர்களும் எம்பெருமானும் பிராட்டியுமாகிய நும்மை நீங்காமல் பற்றிப் பிறவித் துயரிலிருந்து பிழைத்து வீடு பேறுஅடையுமாறும், எம்பெருமானுடைய காத்தல் செயலோடு ஏனைய செயல்களும் முறையாக நிகழுமாறும், எம்பெருமானுடைய தேவியருள் ஏனையராகிய மண்மகளும், ஆயர் மடமகளும், நும்மைப் போன்ற நினைவினையே கொள்ளுமாறும், லீலா விபூதியும் நித்திய விபூதியையும் தொடர்ந்து எல்லா நலன்களும் பெறுமாறும் தாயாகிய நீங்களே திருவுள்ளம் பற்றியுள்ளீர்கள்.

56. விபூதி விபூதிமான் நும்நோக்கில் உள்ளதும் ஓர்பொருளே!
விபூதி விபூதிமான் உந்தம்சீர் சார்பன்றி உள்ளதாமே?
விபூதி விபூதிமான் சீரலர் மேல்மங்கை உம்மதாட்சி
விபூதி விபூதிமான் உந்தம தேர்கடைக் கண்ணதன்றே.

அலர்மேல் மங்கையீரே! ஈருலகமும் அவற்றையுடையானும் நும்பார்வை தம்மேல் பதிவதாலேயே ஒப்பற்ற பொருள்களாகின்றன. உம் தொடர்பின்றேல் உலகுகளுக்கும் அவற்றை உடையானுக்கும் நிறை நலம் ஏற்படுமா? உலகுகளும் உம் அன்பிற்குவசப்பட்ட உடையானும் உம் செல்வங்களாம். எல்லா உலகுகளும் உம் கடைக்கண் நோக்கினை எதிர்நோக்கி உள்ள பொருள்களே.

57. உந்தங் கடைக்கணின் பல்கூற்றில் ஒன்றயி ராணிதன்கண்
உந்தங் கடைக்கணின் பல்கூற்றில் ஒன்றே மலைமகள்கண்
உந்தங் கடைக்கணின் பல்கூற்றில் ஒன்றே கலைமகள்கண்
உந்தங் கடைக்கணின் பல்கூற்றில் ஒன்றதே தாமரையே

உம் கடைக்கண்ணின் அருள் நோக்கத்தின் பல கூறுகளில் ஒரு கூறு தம்மீது பொருந்தியதனால் இந்திராணியும், பார்வதியும், நாமகளும் சிறப்புறுகின்றனர். அங்ஙனமே பெருமானுடைய தாமரைக் கண்களும் வீறுபெற்று விளங்குகின்றன.

58. தாமரைக் கண்ணன் தகவிலை அன்றே கதிர்முழக்கே
தாமரைக் கையய பம்மேலும் வீடணர்த் தாழ்த்தியதே
தாமரைத் தாள்பிறப் பீர்பதாச் சொல்லுதல் சொல்லளவே
தாமரைத் தந்தநும் மொக்கும் உபய விபூதிவேந்தே !

எம்பெருமான் தாமரைக் கண்ணனாய் இருக்கும் செயல் உன்னீடில்லாக் கதிர் முழக்குப் போன்ற வெளி அழகு மாத்திரமே. எம்பெருமானுடைய தாமரைக்கை அபய முத்திரை உடையதேனும் அவனைத் தஞ்சமென்றடைந்த விபீஷணாழ்வானை ஐயுறச் செய்தது. எம்பெருமானுடைய தாமரைத் திருவடிகள் அடியாருடைய பிறவிப்பிணியைப் போக்குவன என்ற செய்தி அடியேங்கள் பக்கல் செயற்படுவதாகத் தெரியவில்லை. தாமரையில் தோன்றிய தாயாராகிய தங்களை ஈருலக வேந்தனாகிய எம்பெருமானும் ஒப்பானோ?

59. வேந்தர் தலைவன் தயரதன் மேலாம் மருகியானீர்
வேந்தர் தலைவன் சனகன் விரும்பும் திருமகள்நீர்
வேந்தர் தலைவன் இராமன் வியத்தகு தேவியானீர்
வேந்தர் தலைக்கடை வேசரி நாசமாக் கண்டீர் நீரே.

அரசர் தலைவர்களாகிய தயரதற்கும் சனகர்க்கும், இராமபிரானுக்கும் முறையே மருமகளும், விரும்பி வளர்த்த செல்வமகளும், வியத்தகு தேவியுமாகிய தாங்கள், அரசருள் கடைப்பட்ட கோவேறு கழுதை போன்ற இராவணனைப் பூண்டோடு அழியுமாறு செய்தீர்.

60. நீரே பரம புருடன் புருடனா நிர்ணயிப்பீர்
நீரே உயிர்கள் உடையான் அணையுமா நேர்ந்திடுவீர்
நீரே அடியான் பணியவன் உள்ளம் நிலைக்கவைப்பீர்
நீரே இவன்செயும் தொண்டை நினைத்து மகிழவைப்பீர்.

நீரே எம்பெருமானைக் கணவனாகத் தேர்ந்தெடுத்தீர். நீரே ஆன்மாக்களை எம்பெருமான் தன்னோடு பொருந்துமாறு ஏற்றுக் கொள்ளுதற்குரிய பரிவுரை கூறிச் சேர்த்து வைப்பீர். நீரே அடியவன் செய்யும் திருத் தொண்டினை எம்பெருமான் உகந்தருளுமாறு அவன் உள்ளத்தில் நிலைபெறச் செய்வீர். நீரே அடியவன் செய்யும் தொண்டுகளை நினைத்து எம்பெருமான் மகிழுமாறு செய்வீர்.

61. மகிழ்வீர் மணாளன் படைத்ததைக் காத்திவை யீர்ப்பிதனை
மகிழ்வீர் மணாளன் சராசரம் பந்தென ஆடுசெயல்
மகிழ்வீர் மணாளன் உலகம் முறையுடன் பாலடைதல்
மகிழ்வீர் மணாளன் வனமாலை சேர்திரு மார்பினையே!

நீரே உங்கள் மணாளனாகிய எம்பெருமான் உலகைப் படைத்துக் காத்து ஊழிக்காலத்தில் அவற்றை வயிற்றினிட்டு மறைப்பதனையும், இவ்வுலகத்து உயிர்களை அவன் பந்து போல ஆட்டுவித்தலையும், உலகத்துயிர்கள் தத்தம் பக்குவத்திற்கு ஏற்ப முன்னோ பின்னோ அவன்பால் அடைதலையும் கண்டு, மகிழ்தலோடு எம்பெருமானுடைய வனமாலை அணிந்துள்ள மார்பினை உங்கள் இருப்பிடமாகக் கொண்டு மகிழ்வீர்.

**62. மார்பினைத் தீர்ந்தூசல் மல்கிய வெண்மை முதலுகத்தும்**
**மார்பினைத் தீர்ந்தூசல் நீர்கொளும் செம்மை மறுயுகத்தும்**
**மார்பினைத் தீர்ந்தூசல் மல்கிய சாமளம் மூன்றினிலும்**
**மார்பினைத் தீர்ந்தூசல் கொள்ளுவான் மாநிறம் நான்கினிலே**

அலர்மேல் மங்கையீர்! நீர் எம்பெருமான் திருமார்பினை விடுத்துத் தனியே ஊஞ்சலில் ஆடும் போது கொள்ளும் வெண்ணிறத்தைக் கிருதயுகத்தும், பின் ஒருகால் செம்மை நிறத்தைத் திரேதா யுகத்தும், மீண்டும் ஒருகால் கொள்ளும் நீலநிறத்தைத் துவாபரயுகத்தும், மறுபடியும் ஊழியாகிய கலியுகத்தும் எம்பெருமான் கருநிறமும் முறையே தனக்குரிய நிறங்களாக் கொண்டுள்ளான்.

**63. நான்கெனும் வேதம் நவில்வநுங் கீர்த்தியே நானிலத்தே**
**நான்கெனுந் தோளால் நலனுற சார்வதே நாரணனாம்**
**நான்கெனுந் தாளால் நடையறம் பெற்ற நுமதுநோக்கின்**
**நான்கெனு மார்க்கம் நலமிகு மார்க்கம் செலுத்துவீரே.**

தாயீர்! நான்கு வேதங்களும் கூறுவன இறைவன் புகழே. நாரணனாகிய எம்பெருமான் தன் நான்கு தோள்களாலும் மகிழ்வுறத் தழுவவது உம்மையே, உம்பார்வையாலேயே அறம் என்னும் பசு நான்கு கால்களால் நடக்கிறது. கர்ப்பம், யாம்யம், தூமம், அர்ச்சிராதிகதி என்ற நான்கு கதிகளுள் நன்மை மிக்க அர்ச்சிராதிகதி மார்க்கத்தில் உம் அடியார்களை எம்பெருமானைக்கொண்டு செலுத்துவீராக.

**64. செலுத்தும் வினைகளைத் தீய்ந்திடச் செய்யும் உமதருளை**
**செலுத்தும் படைப்புப் பதம்பெறு வானுறும் சீரருளே**
**செலுத்தும் சதமகன் மூவுல காட்சி நும்சீரருளே**
**செலுத்துநும் நேர்மைசால் சீர்மை உபய விபூதிமனே.**

துயரத்தில் செலுத்தும் கருமபயன்களை உமது அருள் அழித்து ஒழிக்கும். பிரமன் படைப்புத்தொழில் செய்வதும், இந்திரன் மூவுலகம் ஆளுவதும், எம்பெருமான் தன் இருசெல்வங்களாகிய உலகங்களை ஆட்சி செய்வதும் நும் இச்சையின் பொருட்டே

65. விபூதி பெறுமே விலகிநும் பார்வை தனதனேலும்
விபூதிநும் கூட்டின்றி வில்வமே யாயின் விளைவதுண்டே?
விபூதிசால் இந்திர போகம் விளையுமே? வாசவற்கும்
விபூதி விளைக்கும் அருளன்றி உண்டே? எவர்தமக்கே.

நும் அருட்பார்வை விலகின் செல்வத்துக்கு உரிய குபேரனும் செல்வத்தைப்பெறுதல் இயலுமா? வில்வத்தினால் கூட உம் தொடர்பில்லையேல் செல்வம் விளைத்தல் இயலுமா? உம் அருளினாலேயே இந்திரனுக்கும் செல்வம் மிக்க தேவ இன்பம் விளைகிறது. செல்வத்தை நல்கும் உம் அருளன்றி ஒருவருக்கும் எவ்வகைச் செல்வமும் கிட்டாது.

66. தன்னலம் நீத்துப் பிறர்நலம் பேணுமித் தாயினம்யார்?
தன்னலத் தாழ்வில் தரிக்கிலர் மூவராந் தேவதேவர்
தன்னலத் தாழ்விலர் முப்பத்து முக்கோடி தேவர்தாமும்
தன்னலம் நீத்தல் உபய விபூதிக்கும் தாயதாலே.

மும்மூர்த்திகளும் தன்னலம் குறைந்தால் அமைதியுற மாட்டார்கள். முப்பத்து மூவருடைய வரிசையில் சேர்ந்த தேவர்களும், தன்னலம் தாழ்வதைப் பொறுக்க மாட்டார்கள். தன்னலத்தை விடுத்துப்பிறர் நலத்துக்காகவே வாழும் தாய்க்குலம் உம் அம்சமே. நீர் ஈருலகங்களுக்கும் தாயராக இருப்பதால் தன்னலம் நீத்துச் செயல் புரிகிறீர்.

67. தாயெனக் கோடல் சசியும் உமையும் கலைமகளும்
தாயெனச் சித்திதே வானை பிடாரி குறமகளும்
தாயெனப் பத்தினித் தெய்வமாச்சாற்றும் மகளிரெல்லாம்
தாயெனும் நீயெனும் பொருளன்றி மற்றைத் தகவுளதே.

உலகவர் தாய்மார் என்று போற்றும் இந்திராணியும், உமாதேவியும், கலைமகளும், சித்திதேவியும், தெய்வானை அம்மையாரும், பிடாரியும், வள்ளியும், தாயர் என்று போற்றப்படும் பத்தினிப் பெண்டிரும் உம்மைப் போன்ற தாயாவார்களா? ஈருலகிற்கும் தாயெனப்படும் உன்னுடைய அம்சமே என்று கூறுவதைத் தவிர வேறு பொருளுடைய சொற்றொடர் உள்ளதோ?

**68. உளதே? கருணைசால் சீலம் உமதிரு பாலதன்றி
உளதே? உலகவர் தாய்தந்தை மற்றுள உற்றசுற்றம்
உளதே? அணுவும் விபுவுமாய் ஒன்றிலும் நீக்கமின்மை
உளதே? உபாயமும் பேறாம் உயர்வுறு மிக்கபண்பே**

பெருமானும் நீருமாகிய இருவர் பக்கத்தலன்றி வேற்றுத் தெய்வங்கள் பால் கருணையும் அதற்கேற்ற செயலும் உளவோ? மற்ற தெய்வங்கள் உங்கள் இருவரைப் போல் உலக மக்களுக்குப் பெற்றோரும் சுற்றமும் ஆவாரோ? நீரும் எம்பெருமானும் அணுவும் விபுவுமாய் இருந்து உடல்மிசை உயிர் எனக்கலந்து பரந்திருக்கும் செயல், மற்ற தெய்வங்கள் பால் உண்டோ? வீட்டிற்கு நிமித்தப் பொருளான உபாயமும் உபயே யமுமாக இருக்கும் உயர்தன்மை உங்கள் இருவர்பால் அன்றி மற்ற தெய்வங்கள் பக்கம் உள்ளதோ?

**69. பண்பிவை நுந்தம் பரனுக் கடிமை பிறிதிலின்மை
பண்பிவை நுந்தம் பரனருட் சார்பன்றி சார்பிலதாம்
பண்பிவை நுந்தம் பரனுகப் பின்முகம் பூப்பதுவே
பண்பிவை நீழல் பரன்சார் புளதில தோர்வழக்கே.**

எம்பெருமானுக்கே அடிமையாயிருத்தலன்றிப் பிற தெய்வங்களுக்கு அடிமையாயிருக்கும் பண்பு நும்மிடம் இல்லை. எம்பெருமான் அருளைச் சார்தலன்றிப் பிற சாதனங்களைப் பின்பற்றாமை நும் பண்பாகும். எம்பெருமான் உகப்பிணைக்கண்டு உகத்தலே நும் பண்பு. எம்பெருமானுடைய நிழலாக அவனைப் பிரியாது இருப்பதும் நும் பண்பு. இப்பண்புகள் எம்பெருமான் சார்பு உளதேல் நும்பால் உண்டு. இலதேல் நும்பால் இல்லை. எனவே, நீர் என்றும் எம்பெருமானைப் பிரியாது இருக்கின்றீர்.

**70. வழக்கோநன் மக்கள்பால் தீர்ந்துபுன் மக்கள்பால் சார்வதுவே
வழக்கோ? சிறைக்கண்யாம் தேவ மகளிர் சிறைகழிப்பீர்
வழக்கோ? மண்மாதர் சிறைஎமைத் தீர்ப்பதைப் பார்த்திருப்பீர்
வழக்கோ? படுதுயர் யாம்கண்டு கத்தல் மணாளனோடே**

**தாயாராகிய தாங்கள் நன்மக்கள் பக்கலினின்று நீங்கிப் புன்மக்கள் பக்கல் சேர்வது முறையோ? அடியவராகிய நாங்கள் பிறவிச் சிறையில் கிடக்கவும், சிறைப்பட்டுத் தேவ மகளிரைத் தாங்கள் சிறைவீடு செய்தமை முறையோ? பூ மடந்தை கோதை நாச்சியராக அவதரித்து எமக்கு மெய்யுணர்வு அளித்து எம்மைப் பிறவிச்சிறையிலிருந்து விடுவிப்பதனை**

நீங்கள் பார்த்துள்ளீர்கள். நாங்கள் படுந்துயரைக்கண்டும் அதனைப் போக்க முயலாது தங்கள் மணாளனாகிய எம்பெருமானுடன் தாங்கள் உகந்திருப்பது முறையோ?.

**71. ஓடுங் கறங்கன்ன ஊழ்வினைச் சூழலில் ஒத்திருப்போம்**
**ஓடுங் கறங்கின் உலகியல் ஒன்றின்பின் ஒன்றுறுவ**
**ஓடுங் கறங்கின் இறைநெறி ஆம்பரி(சு) ஊர்ந்தலைப்ப**
**ஓடுங் கறங்கிவை வீடுசெய் யுந்தங்கண் நோக்கிலதே.**

உம்முடைய கடைக்கண் நோக்கம் எம்மேல் பதியாததால் முன்செய்த வினைகளால் காற்றாடிபோலச் சுழற்றப்படுகிறோம். உலகியல் வாழ்வும் ஒன்றன்பின் ஒன்றாக எங்களைச் சுழலச் செய்கின்றன. பல தெய்வங்களையும் வழிபடும் ஆராதனைகள், நெறிமுறைகள் போல்வன எம்மை அணுகி சுழல்விக்கின்றன. இச்சுழற்சி களிலிருந்து எங்களை விடுவிக்கத் தங்களாலேயே இயலும்.

**72. நோக்கில தாயிடின் உள்ளதோர் நுண்ணறி(வு) யார்க்குளதாம்?**
**நோக்கில தாயின் நுவலுமி யாவும் நிலைபெறுமே?**
**நோக்கில தாயின் நுவல்படைப் பீர்ப்பதும் ஆமதுவே?**
**நோக்கில தாயின் உகந்தருள் நோன்தலம் புல்லெழுமே.**

உங்களுடைய அருள்நோக்கு இல்லையேல் ஒருவருக்கும் மெய் உணர்வு ஏற்படாது. எம்பெருமானுடைய உடைமைகளாகிய இயங்கியற் பொருள்ளும் நிலையியற் பொருளும் நிலையாக இருக்கமாட்டா. எம்பெருமானுடைய படைத்தல், காத்தல், முதலிய செயல்களும் முறையாக நிகழா? எம்பெருமாள் உகந்தருகின்ற திருப்பதிகள் யாவும் தரிசிப்பார் இன்மையால் புல் தோன்றிவளரும் பாழிடங்கள் ஆகும்.

**73. புல்லெழும் நும்சார் பிலதென்ன புண்ணிய நோன்பிடங்கள்**
**புல்லெழும் புண்ணிய கேத்திரம் புண்ணிய தீர்த்தங்களும்**
**புல்லெழும் முத்தி தருமென போற்றுநும் ஏழ்தலமும்**
**புல்லெழும் வேங்கடம் சோலைநல் வான மலையதுவே**

நும் தொடர்பு இல்லையெனின் அறச்செயல்கள் செய்வதற்கு ஏற்றன என்று போற்றப்படும் புண்ணிய பூமிகளும், புண்ணிய திருத்தலங்களும், புண்ணிய தீர்த்தங்களும், முத்திதரும் திருப்பதிகளாகிய அவந்தி அத்தினாபுரி, துவாரகை முதலியனவும், எம்பெருமான் உகந்தருளியிருக்குப்

அலர்மேல்
வேங்கடமலை, வானமாமலை முதலியனவும், பயன் கொள்ளும் அடியவருடைய வருகை இன்மையால் பாழ்பட்டுவிடும்.

74. மலையுமால் நெஞ்சும் பொறியும் புலனொடு மாறிமாறி
மலையுமால் முன்முன் வினையும் சுவையொடு வாசனையும்
மலையுமால் தாபக் கனலும் மறித்து வருபிறப்பும்
மலையுமால் ஈங்கிதின் வைத்திருப் பான்றனைக் கேட்கிலிரே.

இவ்வுலக வாழ்க்கையில், நும் அடியார்களை நெஞ்சமும் அறிவும் பொறியும் புலன் நுகர்ச்சியும் செயற் பொறிகளும் தனித்தும் கிளர்ந்தும் நலியும். பண்டைய வினைகளும் அவற்றின் வழிவரும் சுவைகளும் அவற்றின் சுவடுகளும் நலிகின்றன. ஆதியாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்று கூறப்படும் இடுக்கண்தரும் மூவகைத் தீக்களும், மாறிமாறித் தோன்றும் பிறவிப் பிணியும் நலிவுறுத்துகின்றன. அடியார்கள் படும் இத்துயர்களை இம்மண்ணுலகில் அவர்களை வைத்து வருந்தச் செய்யும் செயல் பற்றித் தாங்கள் எம்பெருமான் பக்கல் வினவ மாட்டீர்களா?

75. கேட்கிலிர் ஆய்ப்பாடி வெண்ணை கவர்ந்துண்ணும் கேவலத்தை
கேட்கிலிர் முன்பகை வாய்வந்த கேட்டவன் மேனிகொண்டான்
கேட்கிலிர் பாஞ்சாலி மூர்க்கர் கிளரவைக் கூக்குரலைக்
கேட்கிலிர் நீருமே பல்லூழி யான்படுங் கேடிதையே.

எம்பெருமான் ஆயர்பாடியில் வெண்ணையைக் களவினால் உண்ணலாகிய இழிசெயல் செய்தான். தன் கண்முன் பகைவனாய் வந்து தன்னோடு பொருது உயிர்நீத்த சிசுபாலனுக்குத் தன் திருவடியில் இடம் அளித்தான். அரசவையில் பாஞ்சாலியைக் கௌரவரும் அவரைச் சேர்ந்தவர்களும் பழித்துப் பேசினர். இவற்றைக் குறித்து எந்த வினாவும் எழுப்பாத தாங்கள், பல ஊழிக்காலமாக அடியேன் அனுபவிக்கும் கேடுகளையும் பற்றி வினவாதிருப்பதில் வியப்பு ஒன்றும் இல்லை.

76. கேடில் விழுப்புகழ் நுந்தம் பிணைதலும் கேழிலதே
கேடில் விழுப்புகழ் நுந்தம் உளத்துக் கிளருமருள்
கேடில் விழுப்புகழ் நுந்தம் வடமறை நேருமொழி
கேடில் விழுப்புகழ் நுந்தம் உபதேசக் கேள்வியதே.

எம்பெருமானும் நீங்களும் சேர்ந்திருக்கும் சேர்த்தியும், உங்கள் உள்ளத்தில் மேன் மேலும் பெருகும் அருளும், வேதத்தை ஒத்து இனிய நும் மொழிகளும், இரக்கத்தால் நீங்கள் பிறருக்கு வழங்கும் நல்லுரைகளும் என்றும் அழிவில்லாத பெரும் புகழுக்கு உரியனவாம்.

77. கேள்விகொள் வீர்நும கேள்வி யவன்கொள வையமுய்யும்
கேள்விகொண் டானலன் கேடுவந் துற்றதால் கெட்டொழிந்தான்
கேள்விகொள் வீரே சிறைப்பட்ட ரக்கியர்கே ழில்நிந்தை
கேள்விகொள் வீர்பிற மாதர்தம் கேடு தவிர்ப்பதற்கே.

அடியார்களுடைய குறைகளைச் செவிமடுக்கும் தாங்கள் எம்பெருமானுக்குஅவற்றைத் தெரிவிப்பதனால் உலகவராம் அவர்கள் நன்மை அடைகிறார்கள். தங்கள் சொற்களைக் கேளாததனால் கேடுகளை அடைந்து இராவணன் அடியோடு அழிந்தான். சிறையிலிருந்து அரக்கியர் கூறிய கடுஞ்சொற்களைத் தாங்கள் செவிமடுத்தீர்கள். ஏனைய தேவமாதர்தம் சிறையைத் தவிர்ப்பதற்கே தாங்கள் அவ்வரக்கியர் கூற்றைப் பொறுமையோடு செவிமடுத்தீர்.

78. தவிர்ப்பதும் எம்பிரான் சேதநர்த் தள்ளும் சுதந்திரத்தைத்
தவிர்ப்பதும் சேதனர் தம்பிழைக் கண்டு நடுங்குமதைத்
தவிர்ப்பதும் தம்ம தியல்பின் முரண்பிறர் சொல்லுமதைத்
தவிர்ப்பதும் சார்வார் மிதுநத் திருப்பின் தமபிறப்பே.

பிராட்டியாரே! ஆன்மாக்களைப் புறக்கணிக்கும் எம்பெருமானுடைய சுதந்திரத்தைத் தாங்களே பரிந்துரை கூறி நீக்குகிறீர். ஆன்மாக்கள் தம் பிழைகளை நினைத்து நடுங்குவதைத் தாங்கள் கருணையால் போக்குகிறீர். ஆன்மாவின் இயல்புக்கு மாறாகப் பிறர் பேசுவதைப் போக்குவீரும் நீர். எம்பெருமானும் நீரும் இருக்கும் இருப்பினைச் சரணாகச் சார்பவர் தம் பிறவியைப் போக்குபவரும் நீரே.

79. பிறப்பதற் கோர்வினைக் கட்டில்லை என்றும் பிறந்தருள்வீர்
பிறப்பதற் கும்மொரு தாய்தந்தை யில்லை பிறந்தருள்வீர்
பிறப்பது தாமரையாம் பெற்றிக்கோ ருறுப்புமில்லை
பிறப்புத் தவிரா(து) அவன்பிறப் பொக்கப் பிறக்குமதே.

உலகில் பிறப்பதற்குரியதொரு வினையின் தொடர்பு இல்லாமலேயே நீங்கள் உலகில் பிறப்பெடுக்கிறீர்கள். தாய் தந்தையர் இல்லாமலே இயல்பாலேயே நீங்கள் பிறவி எடுக்கிறீர். தாங்கள் பிறப்பிடமாகிய தாமரைக்குத் தங்களைப் பிறக்கச் செய்யும் உறுப்பு எதுவும் இல்லை. எம்பெருமான் உலகில் பிறவி எடுக்குந் தோறும் அவனுக்கு ஏற்க நீங்களும் பிறவி எடுக்கின்றீர்.

80. பிறப்பதோ பெம்மான் சுரர்குலம் தாமும் சுரர்குலமே
பிறப்பதோ பெம்மான் மனிதனே தாமும் மனிதகுலம்
பிறப்பதோ பெம்மான் விலங்கது தாமும் விலங்கினமே
பிறப்பதோ பெம்மான்தான் தாவரம் தாமுமோர் தாவரமே !

பெருமான் தேவனாகப் பிறப்பின் நீங்களும் தேவியாகவும், மனிதனாகப் பிறப்பின் பெண்மகளாகவும், விலங்காகப் பிறப்பின் மறைந்துநின்று பெண் விலங்காகவும், தாவரமாகப் பிறப்பின் நீங்களும் மறைந்து நின்று தாவரமாகவும் பிறப்பெடுக்கின்றீர். நும் இணைபிரியாமை இருக்குமாறு என்னே? என்பது குறிப்பெச்சம்.

81. தாவி லருங்கலை நும்மருள் கூட்டின் தகவுடைத்தாம்
தாவி லருங்கலைக் கற்றோன் கதிரோன்முன் சாயிழந்தான்
தாவி லருங்கலைச் சாற்றற்(கு) அரியவன் நும்வயமே
தாவி லருங்கலைக் முற்றும் இயல்பி னறிவரிதே?

வருத்தமில்லாத அரிய கலைகள் நும் அருளொடு கூடியே பெருமை பெறுகின்றன. நீங்குதலில்லாத அரிய கலைகளைச் சூரியனை அடுத்துக் கற்ற அனுமனும் நும் சொற்களால் தன் எண்ணத்தைக் கைவிட்டு நும்மைச் சூழ்ந்த அரக்கியரை நலியாது விடுத்தான். நீங்குதலில்லாத பலகலைகளாலும் உள்ளவாறு அறிய முடியாத எம்பெருமானும் நுமக்கு வசப்பட்டவனே. நீங்குதலில்லாத அரிய கலைகளும் உம்மை உள்ளவாறு அறிதல் இயலாது.

82. அறிவரி தேயலர் மேல்மங்கை நுந்தரத் தாயிரத்தொன்(று)
அறிவரி தேயயன் நெற்றியில் அங்கணன் இந்திரனும்
அறிவரி தேஅயன் தேவி அயிராணி பார்வதியும்
அரிவரி தேயுடன் தேவியர் நீரும் அமலனுமே

அன்னையீர்! நும் தகுதியின் ஆயிரத்திலொரு கூறுகூட மற்றவர் அறிதல் இயலாது. பிரமன், சிவன், இந்திரன் என்ற பெருந்தேவரும் அவர் தேவியராகிய நாமகள், பார்வதி, இந்திராணி என்பவரும் கூட நும் தகுதியை உள்ளவாறு அறிதல் இயலாது. மற்றவரைக் கூறுதல் ஏன்? உம்முடன் இருக்கும் நிலமடந்தையும், ஆயர்குலமடந்தையும் நீரும் எம்பெருமானும்கூட நும் பெருமையை அறிதல் அருமையாகும்.

83. அமலன் அமுதங் கடைந்தான் பிறர்க்கென் றுலகமடந்தான்
அமலன் அனைத்தும் இயக்கற் குரியன் நினைவினாலே
அமலன் அனைத்தும் தனதா உடையான் இயல்புறவே
அமலன் உடையன் செயலன் உமதவன் மார்பிருப்பே

களங்கமற்ற எம்பெருமான் பிறருக்கு அமுதம் கடைந்து கொடுப்பதான பொய்க்காரணம் காட்டிக்கடல் கடைந்த செய்கை உலகத்துத் தாயாராகிய உம்மைப் பெறவே, எல்லா உலகப் பொருள்களையும் ஆட்டுவிக்கும் செயலையும் யாவற்றையும் தன்னை உடைமையாகப் பெற்றிருக்கும் சிறப்பினையும் உடையவனாய், அனைத்தையும் உடையவனாகவும் ஆள்பவனாகவும் சிறந்து விளங்குகிறான். இதற்குக் காரணம், நீர் அவன் மார்பிலிருந்து உற்சாகப்படுத்துவதனாலேயே.

84. இருப்ப திறையும் பிரிவிலை மேன்மை பிரிவிலையே
இருப்பதும் வில்வத் திரணியக் கூட்டினும் சேமமுற
இருப்பதும் ஐயந் திரிபறத் தேர்ந்த தெளிவுணர்வின்
இருப்பதும் மெய்யடி யார்தம் குழுவில் இறையுடனே.

ஒரு கணநேரமும் பிரிவினை மேற்கொள்ளாது எம்பெருமான் திருமார்பில் இருக்கும் மேம்பட்ட நிலையை உடைய நீர் பொற்குவியலிலும் வில்வத்திலும், ஐய உணர்வும் திரிபுணர்வும் நீங்குதலால் தெளிவுடைய அடியாருடைய மெய்யுணர்வில் வீற்றிருப்பதும், மெய்யடியார் குழுவில் எம்பெருமானோடு தங்கியிருப்பதும் ஆகிய உயரிய செயல்களைச் செய்கின்றீர்.

85. உடனுறை யானென தென்பதின் உற்ற கொடியதெது?
உடனுறை ஐம்பொறி கோட்புலன் சார்தலின் ஊனமுண்டே?
உடனுறை ஊழ்வினைக் கட்டில் வலிய பிரிப்புமுண்டே?
உடனுறைந் தெம்மான் உறுவன தீர்ப்புறும் வேண்டுகோளே!

ஆன்மாக்கள் உடலில் தங்கியிருந்து 'யான்' என்று அகங்கரிக்கும் அகங்காரத்தை விடக் கொடியது யாது உள்ளது? ஐம்பொறி புலன்களைச் சார்ந்த சிற்றின்ப நுகர்ச்சியின் குறைபாடுகளுடன் கூடியது வேறு உண்டே? முன் செய்த வினைகள் இப்பிறப்பில் நம்மைப் பிணித்து இன்பதுன்பங்களை நுகர்விக்கும் பிணைப்பை விட வலிய பிணைப்பு உளதோ? பெருமானுடன் இருந்து ஆன்மாக்களின் இத்தீமைகளைத் தீர்க்குமாறு வேண்டுவதனையே நும் பண்பாகக் கொண்டுள்ளீர்.

**86. வேண்டியார் பாலும் அரக்கியர் தீமையை விள்ளகிலீர்**
**வேண்டிப் பிறந்தகம் புக்ககம் விட்டோர் கணம்விரும்பீர்**
**வேண்டி முயலிர் சிறையிருள் தீயின் விடுதலையை**
**வேண்டிடில் எம்மான் அடைந்தவர் ஏற்குமா வேட்கையிதே.**

அசோக வனத்தில் அரக்கியர் நுமக்கு இழைத்த கொடுமைகளை நும் நெருங்கிய உறவினரிடத்தும் நீர் தெரிவிக்கவில்லை. புக்ககத்தை விடுத்துப் பிறந்தகம் சென்று வர ஒரு கணமும் நீர் விரும்பினீர் அல்லீர். தீயினும் கொடிய சிறையினின்றும் நும் முயற்சியால் விடுதலை பெற நீர் முயன்றீர் அல்லீர். எம்பெருமானைச் சரணம் அடைந்த அடியவர்களை ஏற்குமாறு கொள்ளும் விருப்பத்தையே நீர் வேண்டி நிற்கிறீர்.

**87. வேட்கை பரன்பால் அடியான் விரும்பி அடைந்திடவே**
**வேட்கை பிரியில் அடியார்க்(கு) அனர்த்தம் விளையுமென்றே**
**வேட்கை யிருளுமிஞ் ஞாலம் தெருளும் விசும்புறவே**
**வேட்கை திருமா மணிமண் டபமென்னும் வேங்கடமே**

அடியவன் எம்பெருமானை விரும்பிச் சரண்புகும் செயலொன்றே நும் வேட்கையாகும். அத்தகைய வேட்கையை நீர் நீத்துவிட்டால் அடியவருக்குத் தீங்கே விளையும். இவ்விருள் தருமாஞாலமாகிய நிலவுலகைப் பரமபதமொத்த துன்பக் கலப்பில்லா இன்பமயமாக்குவதே உம்முடைய ஆசை. நீர் உகந்தருளியிருக்க விரும்புமிடம் நிலவுலக வைகுந்தத் திருமாமணி மண்டபமாகிய திருவேங்கட – மலையே.

**88. வேங்கடம் வேங்கட மேவாய் வெருவி இருந்திடுவீர்**
**வேங்கடம் கீழிருந் தன்புப தேசம் விரித்துரைப்பீர்**
**வேங்கட மார்பகம் நீங்கா விழைந்தே அபயமீவீர்**
**வேங்கடற் குற்றதோர் தொண்டொன்று பத்தா விரிப்பதுவே**

மங்கையந்தாதி

நீர் பரகாலநாயகியை ஆவேசித்து! வேங்கடமே! வேங்கடமே! என்று விருப்பத்தோடு பலநாளும் தன்னை மறந்து கூப்பிடச் செய்தீர். வேங்கடமலையின் கீழிருந்தவாறே எம்பெருமானுக்குச் சேதனர் பக்கல் அன்பு காட்டுமாறு உபதேசிக்கின்றீர். வேங்கடத்தான் மார்பினைப் பிரியாமலிருந்தே அடியார்க்கு அஞ்சற்க! என்ற அருளுரை வழங்குகின்றீர். குறை காணாது அடியாரை ஏற்றுக் கொள்ளுமாறு எம்பெருமானிடம் பரிந்துரை கூறும் திருப்பணியை அடியவர் உய்வதற்கே விரிவாகச் செய்கின்றிர்.

89. விரியத் தமர்செய் வினைதான் கழிவ தவனருளால்
விரியு மியல்பாழ் வினைநீங்க ஓங்க நிகரில்சீர்
விரியத் தமர்பால் குறைகாணான் மேன்மேல் அருளுமவன்
விரியுஞ் செயலுகப் பீரலர் மேல்மங்கை உம்மியல்பே

அலர்மேல் மங்கையீர்! அடியார்கள் மிகுதியாகச் செய்யும் வினைகள் யாவும் எம்பெருமான் அருளால் நீங்கற்பாலன. அப்பெருமானிடத்தில் தவறு கண்டு புறக்கணிக்கும் சுதந்திர உணர்வு நீங்கவும், தவறுகளையும் உகக்கும் ஒப்பற்ற புகழுடைய தூயன்பு அவன்பால் தழைக்கவும், அவன் அடியார்களிடத்துக் குறை காணாது அவர்களுக்கு விரிவாக அருள்புரியும் மேம்பட்ட செயலுக்காக அடியவர் திறத்துப் பரிந்துரை கூறுவது உம் பண்பாகும்.

90. இயல்பீ திருவரைக் காணும் மறைப்பது மெய்யுணர்வை
இயல்பிது முக்குணத் தேய்ந்து மயக்கம் விளைக்குமதாம்
இயல்பீ திருவினை பாசப் பிணைக்கின் இயக்குமிதே
இயல்பீ திறையுடன் சார்ந்திவை முற்று மகற்றுவீரே.

எம்பெருமானும் நீருமாகிய இருவரையும் மனத்தால் காணும் உண்மையறிவை மறைப்பது இவ்வுடம்பின் இயல்பாகும். காமம், வெகுளி, மயக்கம் என்ற முப்பண்புகளுடன் பொருந்தி மெய்ப்பொருளை உள்ளவாறு அறியமுடியாதபடி மறைத்து மயங்கச் செய்வதும் இவ்வுடம்பின் இயல்பாம். நல்வினை தீவினைகளாகிய பற்றுக்களால் ஆன்மாவை ஆட்டுவிப்பதும் இவ்வுடம்பின் இயல்பாம். எம்பெருமானைச் சார்ந்து நீங்கள் உடல் குற்றங்கள் அனைத்தையும் நீக்குகின்றீர். இது உமக்கு இயல்பாக அமைந்த பண்பாகும்.

**91. வீராங் கனைநீர் விமலன் திறத்தாறு பண்புடையீர்**
**வீராங் கனைகள் உமைப்போல் விரதியர் யாவரேனும்**
**வீராங் கனைகள் விழுமத் தொழுதெழு மூவியலார்**
**வீராங் கனைகளைநீர் தத்த மியலால் விளைப்பீரே.**

வீரம் சான்ற பெண்மகளாராகிய தாங்கள் எம்பெருமான் ஞானம், சக்திபலம், ஐச்வரியம், வீரியம், தேசு என்ற ஆறு பண்புடையனாதல் போல அவன் திறத்தில் உகப்பில் உகத்தல், நோவின் நோதல், ஒண்பொருள் கொடுத்தல், நன்கு இனிது மொழிதல், புணர்வு நனிவேட்டல், பிரிவு நனி இரங்கல் என்ற ஆறு பண்புகளை உடையீர். உம்மைப்போல் விரதமுடையார் யாவரும் வீரப்பெண்களே. எம்பெருமானைத் தொழுது எழும் வீரப்பெண்கள் எம்பெருமானே ஆண்டான், அவனே ஆறு, அவனே பேறு என்ற மூன்று இயல்பு உடையவர்கள் தம் பண்புகளில் நெகிழ்வில்லாதபடி வீராங்கனைகளைத் தயாரிப்பவரும் தாங்களே.

**92. விப்பிர நார்ரா யணனொடும் விஞ்சுசீர் மாறனொடும்**
**விப்பிரத் தோன்றலாம் விட்டுசித் தன்னொடு வீசுபுகழ்**
**விப்பிர ஊர்தி வியன்தமிழ்ப் பாணன் பிறவிவெரு**
**விப்பிர புத்திசெய் வேந்தன் குலசே கரனொடுமே**

தொண்டரடிப் பொடியாழ்வார் ஆகிய விப்பிரநாராயணர், மேம்பட்ட சிறப்பினை உடைய சடகோபர், அந்தணருள் மேம்பட்ட விட்டு சித்தர், யோக சாரங்க முனிவர் தோளில் சுமக்கப்பட்டு எம்பெருமானைத் தரிசிக்கவந்த திருப்பாணாழ்வார், பிறவிப் பிணிக்கு அஞ்சி விற்றுவக் கோட்டம்மானைச் சரண் புகுந்த குலசேகரப் பெருமான் ஆகியவரும்,

**93. ஒடுங்கலில் சீரார் முதல்வர்கள் மூவராம் ஒன்தமிழர்**
**ஒடுங்கலில் ஞானமும் பத்தி விரத்தியும் ஓங்குகோதை**
**ஒடுங்கலில் யோகி மழிசைமன் உற்ற மதுரகவி**
**ஒடுங்கலில் வாழ்த்துக் கலியன் உதிப்பித்த தும்மருளே.**

மற்றும் குறைவற்ற சிறப்புடைய முதலாழ்வார்கள், மூவர் ஞான பக்தி வைராக்கியத்தால் மேம்பட்ட கோதையராகிய ஸ்ரீஆண்டாள், யோகியாய் வாழ்ந்த திருமழிசைப் பிரான் மதுரகவியார், 86 திவ்விய தேசங்களைப் பாடியருளிய திருமங்கையாழ்வார் முதலானாருடைய திருஅவதாரங்கள் தாயாராகிய உமது முனைப்பினாலும் எம்பெருமான் அருளாலும் இந்த பூலோகத்தில் உண்டாயின.

94. உமதரு ளொன்றே உதவுமெய் ஞானநீர் வித்தையதால்
உமதருள் சேதனர் பாலதாம் உற்றநல் தாயதனால்
உமதருள் ஏற்பன் உலகுண் பரனின் இனியையதால்
உமதருள் முற்றவும் உற்றதே யாக்கும் நெகிழ்தலிலே.

அன்னையாராகிய நீர், வித்தையே வடிவினராய் இருப்பதால் உம் அருளே மெய்யுணர்வை உண்டாக்குவதாகும். தாங்கள் உலகின் தாயாக இருப்பதனால் தங்கள் அருள் இவ்வுலகினுள்ள உயிர்களின் பக்கல் பரவியுள்ளது. எம்பெருமான் உகப்பிற்குரிய தேவியராக நீர் இருப்பதால் ஊழியில் உலகை வயிற்றில் வைத்துப் பாதுகாக்கும் எம்பெருமான் உம் அருள்செயல்களைத் தானும் இசைகிறான். உம் அருள் குறைவுறாமல் உயிர்களுக்கு ஏற்புடைய நன்மைகளையே உண்டாக்கும்.

95. நெகிழ்வதே உந்தம் அருளிலர் நேர்வது முற்றவுமே
நெகிழ்வதே இந்திரன் நீடு சிவனயன் நேர்பதங்கள்
நெகிழ்வதே ஓரிரு கோள்கதி யைம்பூத நேர்மையதும்
நெகிழ்வதில் நித்த விபூதிநும் சார்பில் நிலைத்திடுமே.

உம் அருள் பெறாதார் செய்யும் செயல்கள் முழுமையாக நிறைவேறாமல் இடையிலேயே தடைபட்டு அழியும். உம் அருளின்றேல் இந்திரன், சிவன், அயன் என்பார் பதவிகள் நிலைபேறு அடையமாட்டா, மேலும், ஞாயிறு, திங்கள் இயக்கமும் ஐம்பூதப் பண்புகளும் நெகிழ்ந்து விடும். அழிவில்லாத பரமபதமும் உம் தொடர்பினாலேயே நிலை பெற்றிருக்கும்.

96. நிலைநிற்கு மன்றோ கயவன் சிறைவைத்த பாதகத்தை
நிலைநிற்கு மன்றோ நெருப்பிடை மூழ்கநீர் நேர்ந்தசெயல்
நிலைநிற்கு மன்றோ நிமலன்தன் பள்ளி இருந்தசெயல்
நிலைநிற்கு மன்றோ நிலத்தின் புகுசெயல் மாதருக்கே.

இராவணன் உங்களைச் சிறைவைத்த நீசச் செயல் உலக மக்கள் உள்ளத்தில் துன்பத்தை உண்டுபண்ணும். தாங்கள் நெருப்பில் மூழ்குவதற்கு ஈடுபட்ட செயலும், வான்மீகியின் ஆசிரமத்தில் நீங்கள் பலகாலம் இருந்த செய்தியும், இறுதியில் பூமிக்குள் புகுந்து மறைந்த செயலும் உலகவர் உள்ளத்தில் என்றும் நிலை நிற்பனவாம்.

97. மாதா நுமதே அழகின் சிகரமே மற்றுமுண்டே
மாதா நுமதே அருளின் வடிவம் பிறிதிலதே
மாதா நுமதே பிறர்நலம் பேணும் சிறப்புடைமை
மாதா நுமதே நிலைபிரி தொண்டர் அடிப்படுத்தே.

அன்னையீர்! அழகின் உயர்ந்த நிலையும் அருளின் வடிவமும், பிறர் நன்மையே வேண்டிச் செயற்படும் மாட்சிமையும் உடைய நீங்கள் அடியார் தொண்டினை மிகைப்படுத்தி எம்பெருமானுக்குப் பரிந்துரை கூறி, அவர்களை ஆட்கொள்வதற்காகப் பெருமானைப் பிரியாது இருக்கின்றீர்.

98. அடியனைக் கொண்டதே யாவும் அடைந்தது போலுமானீர்
அடியனில் கீழ்மையோன் முன்பின் படைப்பிலும் யாருமுண்டே?
அடியர்பால் காணீர் குறையடி யேன்கேட் டறிந்ததுண்டு
அடியனின் தாழ்வையும் கொண்டநீர் ஆய்ந்திடின் உண்மையன்றே

மிகக்கீழனோகிய அடியேனை ஆட்கொண்டதிறத்தால் தங்கள் விருப்பமெல்லாம் நிறைவேறியது போன்ற நிறை மகிழ்வைப் பெற்றுள்ளீர். முன் ஊழிகளிலும் இனிவரும் ஊழிகளிலும் நிகழ்ந்த, நிகழ இருக்கின்ற படைப்புகளில் அடியேனிலும் கீழானோர் இருக்க மாட்டார்கள். தாங்கள் அடியார்களுடைய குறைகளைப் பொருட்படுத்த மாட்டீர் என்று கேட்டறிந்ததுண்டு. தங்கள் உயர்வையும் அடியேன் தாழ்வையும் ஆராய்ந்தால் தாங்கள் அடியேனை ஆட்கொண்டது மெய்யான செயலேயாகும்.

99. உண்மைப் பொருளலர் மேல்மங்கை சேர்ந்திங் குளனொருவன்
உண்மைப் பொருள்பொறைத் தாயினை ஒக்கலை யேந்துகேழல்
உண்மைப் பொருள்ஏழ் விடைசெற்று வந்துகொள் பின்னைகேள்வர்
உண்மைப் பொருள்மூன்றே ஓர்ந்துப் பொதுவறக் காண்பதென்றே

மெய்ப்பொருளாம் பெருமான் அலர்மேல் மங்கையுடன் சேர்ந்து வேங்கட மலையில் உள்ளான். பொறுமைக்கு இருப்பிடமாகிய பூமித்தாயை தன் இடையில் வைத்துக் கொணர்ந்த மகாவராக மூர்த்தியும், அசுரர் உட்புகுந்த ஏழு காளைகளை அழித்துப் பின்னையை மணந்த கண்ணனும், வேங்கடவனும் ஒரே உண்மைப் பொருளின் அவதாரங்களே என்பதனைக் காணலாம்.

**100. என்றலர் மேல்மங்கை நின்தாள்சார் என்கண் அருளுவதே?**
**என்றலர் மேல்மங்கை மன்தாள்சார் என்கண் அருளுவதே?**
**என்றலர் மேல்மங்கை தொண்டர்சார் என்கண் அருளுவதே?**
**என்றலர் மேல்மங்கை போற்றும் அருளென்கண் பார்த்துலகே.**

அலர்மேல் மங்கைத்தாயே! என்னிடம் உன்திருவுளச் சார்பினை அருளுவது என்றோ? நீர் எம்பெருமான் திருவடிகளை அடியேன் சாரும் வாய்ப்பினை அருளுவது என்றோ? பிராட்டி பெருமாள் என்ற இருவரையும் சரணாகப் பற்றிய தொண்டர்கள் சார்பினை அடியேனுக்கு அருளுவது என்றோ? அடியேன் மாட்டு அலர்மேல் மங்கை பாலிக்கும் அருளும் எம்பெருமான் அடியேன்திறத்தில் செய்யும் அருளையும் உலகவர்போற்றும் நாள் என்று வருமோ?

## நூற்பயன்

**அலர்மேல மங்கைநல் தாய்திருத் தாளன்ப ரும்பயனை**
**அலர்மேல மங்கையந் தாதி தனையோதி ஆர்வமுற**
**அலர்மேல மங்கை இணையடித் தாமரை தம்மினெஞ்சம்**
**அலர்மே லமர்ந்துறை யன்னமாய் நின்றன்பு பெற்றிடுமே.**

நற்றாயாகிய அலர்மேல் மங்கை திருவடிகளில் அன்பு பெருகுதலாகிய அரிய பயனாய், இந்த அலர்மேல் மங்கையந்தாதியை ஆர்வத்தோடு ஓதுவதால் நம் நெஞ்சமானது, அப்பெருமாட்டியின் திருவடித் தாமரைகளில் அன்னம்போல் நீங்காதிருந்து தூய அன்பினைப் பெற்றுச் சிறந்து விளங்கும்.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# சடகோப நான்மணிமாலை

## காப்புச் செய்யுள்

**நானிலத் தேவரும் மாமுடி கோளுறு நாறுமகிழ்**
**தேனலந் தாரிதை மாமுடி கோளுறுந் தேசிகன்தன்**
**நான்மணி மாலை உலகவ ருய்ய நவில்வதற்கு**
**மான்மறைச் சீடன் குருவவன் காப்பாகு மாமுனியே!**

**இதன் உரை:**
நால்வகைப்பட்ட நிலங்களிலுள்ள யாவருமே'சடகோபன்' என்ற சொல் கேட்டதும் தங்கள் திருக்கரங்களை சிறந்த முடிமேல் கொள்ளுதற்கு உரியவரும், பரிமளம் மிகுத்து தேன் வெள்ளமிடும் மகிழ மலர் மாலையை முடிமேல் கொண்டுள்ளவருமான ஆதிகுருவாம் மாறன் (நம்மாழ்வார்) விஷயமான நான்மணிமாலை என்ற நூலை உலகை உய்வித்தல் பொருட்டு, திராவிடவேதத்தின் பொருளை காலட்ஷேபரீதியில் நம்பெருமாளுக்கு–ணர்த்தி அவனைச் சீடனாக்கிக் கொண்ட மணவாள மாமுனிகளே இதற்குக் காப்பாகும்.

## நூல்

### வெண்பா

**1. வீறுசால் தெய்வ வெறிகொள் துழாய்கமழும்**
**நாறுநவ நீத முடைநாற்றம் – நாறுமால்**
**மச்சகந்தம் மாறன்கண் ணன்வியாசன் வந்தவிடம்**
**நச்சுவது யாரைநெஞ்சே நாம்?**

உலகிலுள்ள மற்ற மணங்கள் தனக்கு ஒவ்வாத தெய்வத்தன்மை வாய்ந்த துழாய் மணம் கமழும் குருகூர் நம்பி அவதரித்த இடமும், கண்ணன் வந்தவதரித்த வெண்ணெய் முடநாற்றம் கமழும் ஆயர்சேரியும், வியாசன் வந்தவதரித்த மச்சகந்தம் நாறும் புலைச்சேரியும் இத்தகையவர்கள் அவதரித்த இடம் இத்தன்மையாதனால் நெஞ்சே! இவர்களில் நாம் விரும்பித் தொழுதற்குரியவர் யார்? என்று சொல்வாயாக !

### (கட்டளைக் கலித்துறை)

2. நாமே? வியப்புவ நானிலந் தாழ்ந்த வருணமிதை
தாமேந் துதற்கு வராககோ பாலராம் தண்ணியராய்
ஆமா றுலகோர் பிறவிக் கடலாழ்ந் தனத்தமுற
பூமா தவர்ச்செய மாறன் புகுந்த வருணநான்கே.

ஒரு காலத்தில் பிரளய வெள்ளத்தில் அழுந்தித் தாழ்ந்த உலகையும், யயாதி சாபத்தால் தாழ்ந்துபோன யது குலத்தையும் மேல் நோக்கி உயர்த்துவதற்கு வராக மூர்த்தியாகவும், கோபால கிருஷ்ணனாகவும், தாழ்ந்து வந்தவதரித்தாற் போன்று, உலகத்தவர்கள் பிறவிக்கடலில் அழுந்திக் கிடக்கின்றவர்களை மெய்யுணர்வைக் கொடுத்து நிலத்தேவராக்குவதற்கு உயர்ந்த மாஞானியாகிய குருகூர்ச் சடகோபன், தாழ்ந்ததென்று உலகம் நினைக்கும் நான்காம் வருணத்தில் வந்தவதரித்த வியப்பை, நாம் சொல்லும் தரமுடையதன்றே? (நெஞ்சே நீ சொல்வாயாக.)

### (எழுசீர் ஆசிரியச்சந்தவிருத்தம்)

3. நான்முகன் நான்மறை நாபியா றங்கம்
ஒருமுடி யிருகண்மூன் றந்தாதி
நோன்புளம் திருமொழிப் பல்லாண்டு திருமொழி
முகங்கழுத் திருபது நூறோடும்
நான்கிரு பதினான் கேழ்பதி னைந்துதோள்
நாற்பதைந் தடித்தூள் பத்தாகம்
வானிடந் தோள்பத் தடிஎதி மதுர
கவியுடல் உறுப்புயாங் கந்தாமே

நான்கு முகங்களாலே வேதங்களின் கருத்தாக தமிழில் திருவாய்மொழி பாடினவர் நம்மாழ்வார். இவருக்கு நாபியாக வந்தவதரித்தவர் கலியன். இவர் வடமொழியிலுள்ள ஆறுஅங்கங்களையும் தமிழில் பாடிய பிரபந்தங்கள். அதைப்போலவே வடமொழி வேதத்தை தமிழில்பாடியவர்களான பொய்கையாழ்வார் நம்மாழ்வாருக்கு முடி, பூதத்தாழ்வாரும் பேயாழ்வாரும் இரண்டு திருக்கண்கள், இவர்கள் மூவரும் பாடிய மூன்றந்தாதிகள், நோன்பென்று நோற்ற திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும் நம்மாழ்வாரின் திருவுள்ளம் ஆண்டாள் பாடிய பிரபந்தம். நம்மாழ்வாருக்கு திருமுகமாகிய பெரியாழ்வார் பாடிய திருப்பல்லாண்டும்

சடகோப

பெரியாழ்வார் திருமொழி. இந்த நம்மாழ்வாருக்கு திருக்கழுத்தாக அவதரித்தத் திருமழிசை பிரான் இவர் பாடியருளிய நூற்றிருபது திருச்சந்தவிருத்தம் நான்முகந்திருவந்தாதி தொண்ணூத்தாறும், நம்மாழ்வாரின் திருத்தோளான குலசேகரப் பெருமாள் பாடிய பெருமாள் திருமொழி நூற்றைந்து. இவர் திருமார்பான தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலை நாற்பத்தைந்து திருப்பள்ளியெழுச்சி பத்து. இவர் இடதுத் தோளான திருப்பாணாழ்வார் பாடிய அமலனாதிபிரான் பத்து, எம்பெருமானார் இவர் திருவடிகள். இவர் விஷயமாக பதினொரு பாசுரங்கள் பாடியவர் மதுரகவியாழ்வார் இவர் திருமேனி, நம்மாழ்வார் தவிர்த்த மற்ற ஆழ்வார்கள் பாடின பிரபந்தங்கள் உபஅங்கங்களாகும்.

(ஆசிரியப்பா)

4. தாழேந் திரந்திடற் குற்றவர் தங்குரு
ஆமா றறிந்துடன் பயில்பவர் சோத்தரி
தங்கிளை மாணவர் தாமிவர் சேர்ப்பார்
பரிந்துரைத் திரக்கும் பராங்குச நாயகி
பறவையாய் பாவனை சிறையறி வொழுக்கும்
விசுஞ் சிறகீர் விண்ணுமக் கெளிதே
அஞ்சிறை சேவலோ டாடுவென் றருளீர்
கூட்பிகைச் சொல்லீர் குருகினத் தவரே
உணர்த்தல் ஊடல் உணர்ந்துறை அன்னம்
புணர்த்தபூந் துழாய்முடி பெருமாற் கண்டு
புணர்த்தகை யடியேற் பொருட்டுப் போற்றுமின்
நன்னலப் புள்ளினம் நான்வினை யாட்டியேன்
இரந்தேன் என்முல்லை மேல்சேர் தும்பிகாள்
இதுவோ தக்கவா றென்னவே வேண்டும்
செங்கால நாராய் குடக்கூத் தென்துதாய்
நூங்கால் நுமரோடென் தலைமேல் கொழுமிரே
கொக்கினங் குருகினந் தக்கிலங் கேளிரே
உடன் மாணாக்கர் கேண்மி னுயர்குரு
இளங்கிளி சிறுபுவாய் யான்வளர் நீரலிர்
வினையேன் வளர்சிறு பூவை மீர்காள்
இன்னமா ணாக்கர் மக்கள்பா லிரந்து

**பிரிவின் வேட்கை மிகுந்திடப் பெருமான்**
**பாலணைந் திடுமோப் பிரிந்துரை செய்மின்னென்(று)**
**இரந்திடும் பறவைதாள் வீழ்ந்து பரிந்தே.**

**பறவைகளைத் தூதுவிடுவதற்கு உள்ளுறைப்பொருள்:-**

குருகூர் மாறன் தான் நாயகி பாவத்திலே களவில் கூடி பழிக்கஞ்சி நாணத்தால் பிரிந்து, பிரிவுத்துயர் தாங்காது எம்பெருமான் பக்கல் தூதுவிடுகின்ற பராங்குசநாயகியுடைய சொற்கள் இவைகள். பராங்குச நாயகி நெய்தல் நிறத்து மங்கையாய் அங்குள்ள பறவைகளைக் கண்டு பெருமானைப் பிரிந்த பிரிவாற்றாமையால் பறவைகளைத் தூதுவிடுகின்ற பராங்குச நாயகி, தூது விடுதற்குற்றவர் தனக்கு குருவாகவும் தான் பயிலும் போது உடன் மாணாக்காராகவும் நினைத்து பெருமான்பால் தூதுவிடுகிறார். பெருமானிடத்தில் செல்வதற்குப் பறவைகளுக்கு இரண்டு இறகுண்டு என்று நினைத்து அவைகளைத் தூதுவிட, தான் தூது விடுபவர்களுக்கு ஞான ஒழுக்கங்கள் உண்டு. அவை இறைவனை அடைதற்குச் சாதனம் எனக் கருதி, 'சிறகுகளலே ஆகாயத்தில் பறந்து செல்கின்றவர்களே! பறவைகளாகிய நீங்கள் எம்பெருமானிடத்தில் செல்வது சுலபம். சேவலோடு என் துயரத்தைக் கண்டு ஐயோ! என்று அருள வேண்டும். 'நீங்கள் பெருமானிடத்தில் சென்று கை கூப்பிச் சொல்லுங்கள் குருகினத்தாவர்களே! உணர்த்தல் உடையவர்களாயும் ஊடல் செய்கின்றவராயும் உணர்ந்து உறையும் அன்னங்களே! தொடுக்கப்பட்ட திருத்துழாய் மாலைகளை முடிமேல் தரித்துக் கொண்டிருக்கும் பெருமானுக்கு அடியேன் பொருட்டு புணர்த்த கையராய் போற்றிச் சொல்லுங்கள். கூடியிருத்தலாலே மிக்க இன்பத்தை அடைந்திருக்கிற புள்ளினங்களே! நான் வினைவயத்தால் பிரிந்து வருந்துகிறேன். ஆதலால் உம்மை இரந்து கேட்கிறேன், முல்லைகளின் மீது சேர்ந்திருக்கும் தும்பிகளே! என்னைப் பெருமானைக் கண்டு பிரிந்து வருந்தும்படி விட்டிருப்பது தக்கதோ? என்று பெருமானைக் கேளுங்கள், சிவந்த கால்களுடைய நாரைகளே! குடக்கூத்தாடிய பெருமானுக்கு காதலன் காதலியின் திறத்தில் வேட்கை மிகுதியால் அவள் தன் எச்சிலை ஆதராம்ருதம் என்று விரும்புவது போல, இவ்வாழ்வார் திறத்துண்டான ஞான பக்தி வைராக்கியங்களின் மிகுதியால் எம்பெருமான் மிக விருப்பமுற்று இந்த ஞான பக்தி வைராக்கியங்கள் வளர்வதற்குக் காரணம் திருமேனி சத்துவகுணத்தாலாயது என்று திருவுள்ளம் பற்றி இவரை திருமேனியோடே திருநாட்டுக்கு எழுந்தருளப்பண்ண வேணும் என்ற திருஉள்ளம் உடையனாய் எம்பெருமான் இவருடைய திருமேனியிலே ஐம்பெரும் பூதம் சேர்க்கை என்ற நினைவில்லாதவனாய், இவர் திறத்துண்டான ப்ரேமையின் மிகுதியால் இவர் திருமேனியில் குரவை துவரைகளில் பற்பல உருவம் கொண்டு பரிமாறியது போலே இவ்வாழ்வார் திருமேனியில் உகந்தருளின நிலங்கள்

எல்லாவற்றிலும் பண்ணும் ஆதரத்தோடு வைகுந்த வளட்டில் பண்ணும் ஆதரத்தையும் உடையவனாய் இவர் திருமேனியில் புகுந்து, இவர் திருமேனியோடே கொண்டுபோக விரைவானாக திருக்கையைப் பற்றி வாரும் என்றழைக்க, 'இங்குத்தான் விலங்கென்றால் அங்கும் எனக்கு விலங்கா' என்று இவ்வாழ்வார் அவன் திருவடிகளைப் பற்றிக் கொண்டு தன் திருமேனியில் அவன் பண்ணும் ஆதரத்தை கைவிடும்படி விடுவித்துக் கொண்டார். இதனால் பரமார்த்தனுடைய சரீரத்திலே எம்பெருமான் பண்ணும் வியாமோகம் திருமாலிருஞ்சோலை மலையிலே தழைக்கும். "தூது செல்லும் பொருட்டு உமது திருவடிகளை நும் இனத்தவரோ டென் தலை மீதாக்குங்கள். கொக்கினங்களே! குருகினங்களே! பெருமானைக் கண்டு, 'நான் தகுதியற்றவளா' என்று கேளுங்கள். உயர்ந்த குருகுகளே நீங்களும் (சப்ரம்மசாரிகளே) கேளுங்கள் இளங்கிளிகளே! சின்னஞ்சிறு நாகனவாய் பறவைகளே! என்னால் வளர்க்கப்பட்ட நீங்களல்லையோ? வினையேன் வளர்த்த சிறு பூவைகாள்! கேண்மின்" என்று இவ்வாறு மாணாக்கர்பாலும் மக்கள் பாலும் பிரிவின் வேட்கையால் துயரமிகந்து 'பெருமான் என்பால் அணைந்திடுமாறு பரிந்துறை செய்மின்' என்று பறவைகள் தாள்களில் வீழ்ந்து யாசிக்கிறாள்.

## (வெண்பா)

5. பரிந்திங் கிருள்தரும் பாருல குய்யப்<br>
பொருந்துமா மேகம் புகன்றான் – பெருந்தவங்கள்<br>
நீத்துக் கலைதெளியக் கண்டுரை நீதியான்<br>
வாய்த்தகுரு கூர்வந்த வன்.

லீலா விபூதியான இருள்தருமா ஞாலத்தில் உள்ள சேதநர்களை உய்விப்பதின் பொருட்டு இரக்கங்கொண்டு உய்விப்பதற்குப் பொருந்திய்தான "மாமேகம் சரணம் வரஜ" என்றெம் பெருமான் சொன்ன வார்த்தைக்குப் பொருந்த தாம் முயன்று செய்யும் (உபாயாந்தரங்களை அறக்கைவிட்டு ஆத்ம பரமாத்ம சொரூபங்களுக்கு) பொருந்தியதான சரணாகதி நிலையைக் கண்டு சொன்ன நியதியை உடையவனானவன் இதற்கு வாய்த்த குருகூர் வந்த பராங்குசனாகும்.

(கட்டளைக் கலித்துறை)

6\. வந்தவன் வேதம் மயக்கும் பொருளைத் தெளிவுறுத்த
அந்தமில் சீரன்பர் கூட்டுணும் ஆயிரம் பாவமுதைத்
தந்தவன் மாலன்பர் தம்மடிச் சாயைசார் ஏழ்முறைக்கீழ்
சந்ததம் நின்றவன் தாளெம்மை என்றும் விளைக்குமாலே.

வேதமானது சரீராத்ம சம்பந்த முதலிய காரணங்களால் முரண்படுவது போல் சொல்லும். அர்த்தங்களைத் தெள்ளத் தெளிய சொல்லவந்த எல்லை காண்பரிய நலமிக்க அன்பர்கள் கூட்டம் கூட்டமாகக் கூடி அனுபவிக்கும்படியாக அமுதமயமான ஆயிரம் பாக்களைத் தந்தவன் சடகோபனாவார். அவர், எம்பெருமானுடைய அடியார்களுக்கு அடியார் என்ற முறையிலே ஏழு தலைமுறைக்கு கீழே போய் நின்றவ அவருடைய திருவடிகள் என்றும் எமக்கு வியாமோகத்தை உண்டாக்கும்.

(ஆசிரிய விருத்தம்)

7\. மாலேழ் கடலேழ் மலையேழ் உலகேழ்
நும்படைப்பு மற்றுளவும்
மாலே எவர்க்கும் அழியக் கடிவான்
தனக்குமொரு மால்விளைக்கும்
மாலே!நும்சீர் பரவும் கவியால்
நுமக்குமொரு மால்விளைக்கும்
பாலேய் தமிழர் இசையர் பரவும்
தமிழ்மறைப் பூட்டினனே.

திருமகள் கேள்வனே! தேவரீர் உலகவர் திறத்துண்டான கழிவிரக்கத்தால் ஏழுகடல்களோடும் ஏழுமலைகளோடும் கூடிய ஏழ் உலகங்களும் மற்றும் உண்டானவையும், உங்களுடைய படைப்பு படைத்த உலகத்தில் உண்டான உண்டியே உடையே என உகந்து ஓடும்படியான நீர் விளைத்த மயக்கத்தை அழியும்படி போக்கும் தன்மையுடையவன் குரு கூர்ச் கோபன். இத்தகைய குருகூர் சடகோபனுக்கும் உம்முடைய சொரூபம், குணங்கள், திருமேனி முதலாகிய சௌந்தர்யத்தைக் காட்டி வியாமோகத்தை விளைத்தீர். இந்த குலுகூர்ச் சடகோபன் பாலே போல் இனிக்கும் உன் கீர்த்திகளைப் பாடும் கவிகளால் இனிய இசையில் வல்லவர்களுக்கும் நுமக்கும் இன்ப மயக்கத்தை விளைக்கும் தமிழ்மொழியாம் திருவாய்மொழியை புணைந்து கொடுத்தான்.

### (அகவற்பா)

8. பூண்டநாள் பொருவரு சீர்க்கடல் உட்கொளும்
நீண்டதோள் மால்துயில் நீள்கடல் தன்னின்
பூண்டநா ளெல்லாம் நீராடப் புகுமே
திருமால் சீர்க்கடல் உட்பொதி சிந்தையர்
நீலநன் மேனி நின்றநன் நிறமொத்து
திருமால் திருமேனி யோகம் ஒத்து
நினை அடை முகில்வணன் நிழலிட் டாலே
தீர்த்த கரராய்த் திரிந்துயி ரளிப்பான்
தீதில் நன்னெறி காட்டித் திரிந்து
ஞானமா மடுவை யுடையதும் அன்றி
நீள நினைவுறு நீரை யுடையதும்
ஆசை வெறுப்பாம் அழுக்ககற் றுவதும்
ஆன மனத்தில் உளவாம் தீர்த்தத்து
ஆடுவான் எவனவன் மேற்கதி அடைவதும்
எம்பிரான் இலங்கு குணநீர் நிறைந்து
தீங்கின்றி வாழ உலகில் பெய்து
கொடுத்த நினைந்திடா வள்ளல் தன்மையுள்
வெட்கி வெறுத்து கொடுக்கப் பெற்றிலம்
பிறர்தம் நலமே தம்பே றாக
அன்பின் நிறைந்த அன்பன் பாலன்பு
கூறும் அடியவர் உரையில் இடாதவர்
புயல்கை மாரி குணந்திகழ் கொண்டல்
போல்வார் மேகம் போல் தந்திடுமே.

பூண்ட நாள் சீர்க்கடலை உட்கொண்டு மழை பெய்ய வேண்டிய காலங்களில், கடலிலே புகுந்து அதில் நீரைப் பருகிப் பொழியும் மேகம் போலே, 'பூண்ட நாளெல்லாம் புகும் என்றும் திருமால் சீர்க்கடலை உட்பொதிந்த சிந்தனையேன்' என்றும் சொல்லுகிறபடியே விடிந்த நாளெல்லாம் அவன் கண்வளர்ந்தருள்கிற கடலிலே புகுந்து திருமகள் கேள்வனான அவனுடைய கல்யாண குணக்கடலை உள்ளே அடக்கிக்கொண்டு மேகமானது அவன் திருமேனியோடு ஒத்த நிறத்தையுடைதாயிருக்கு மாபோலே

**உள்ளே தியானிக்கப்படுகிற முகில் வண்ணனுடைய நிழலிட்டாலே அவனோடு ஒத்த நிறத்தையுடையதாய், மேகமானது மழை மூலமாக உயிர்களைப் பாதுகாப்பதற்காக விரிந்திருக்கிற ஆகாசப் பரப்பெங்கும் சஞ்சரிக்குமா போலே, பிறப்பு இறப்புகளிலே உழலுகிற ஆன்மாக்களைப் பாதுகாப்பதற்காக உலகத்தை தூய்மை செய்பவர்களாய் உய்யும் வழியைக் காட்டுமவர்களாய், எவ்விடத்தும் திரிந்து கொண்டு ஞானமாகின்ற அறிவினையுடையதும் தியானமாகிற நீரையுடையதும் ஆசை துவேஷம் ஆகிற அழுக்கையகற்றுவதும் ஆனமனத்தில் உறவாகியதீர்த்தத்தில் எவன் ஆடுகிறானோ அவன் உயர்ந்த கதியை அடைகிறான் என்றும் மனத்திலுள்ள தீர்த்தத்தைச் சிறப்பித்துச் சொன்ன ஞானமாகிற மடுவைத் தாங்கள் பெய்கிற பகவானுடைய குணங்களாகிற தண்ணீரால் நிறைத்து தீங்கின்றி வாழ நிதி சொரிந்து "தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து" என்றும், "வாழ உலகினில் பெய்திடாய்" என்றும், "வாழ்த்த நிதி சொரிந்து" என்கிறபடியே கேடு சிறிதும் இன்றியே வரும்படி பகவானுடைய குணங்களாகிற நீரைப்பொழிந்து பொழிந்து, கொடுத்தது நினையாதே வெட்கி வள்ளல்தன்மை மிகுதியினாலே இன்னமும் கொடுக்கப் பெற்றிலோம் செய்தது போருமோ என்று வெட்கி வெளுத்துப்போய் ஒளித்து மேகமானது மழை பெய்யாதபோது வெளுத்துப் போய்க் கண்களுக்கு புலப்படாமல் இருப்பது போலே அர்த்தவிசேடங்களை உபதேசிக்கப்பெறாத போது உடம்பு மறைத்து வெளியே முகம் காட்டாதவர்களாய் கண்டு உவந்து பிறந்த பேறான, மேகமானது தனக்கு என்று காரியம் செய்யாது பிறர்நலத்துக்கே கொடுப்பது போன்று, கொடுக்குமிடத்து சிஷ்யர்களின் நிறைவினைக் கண்டு மகிழ்ந்து அந்நிறைவினையே தங்களுக்கு பயனாக கொண்டிருக்கும்படியான ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்தன்பு கூறும் அடியவர்களான முதலாழ்வார்கள், உருவினாவான் உறைப்பிடாதே முதல் நடு இறுதிகளிலே மாறுபட்டவர்கள் குறையினை கூறுதல் முன்னாக எம்பெருமானுடைய முதன்மையை எடுத்துக் கூறிய திருமழிசைப்பிரான், வள்ளற்றன்மையினையுடைய மேகத்தைப் போன்றவராய் அருளைப் பெய்யும் திருமங்கையாழ்வார், "குணம் திகழ் கொண்டல் இராமானுசன்" என்று குணங்கள் ஒளிவீசும் மேகமாகச் சொல்லும் எம்பெருமானார் போன்றவர்களை குணங்களின் ஒப்புமைக் கொண்டு மேகம் என்று சொல்லும் என்கை, பயனுக்குக் காரணம் இவர்களாகையாலே பயனில் விரைவுத் தோன்றப் பலகாலும் தூதுவிடுவர் என்கை.**

### (வெண்பா)

**9. தந்திடும் அற்ற களைகணார் தங்கட்கு<br>
அந்தமில் ஆர்வம் அடைந்திடத் – தந்த<br>
உடலம் உருக பெருகும் மதுரம்<br>
குடமுக்கில் வெள்ளங் கொடு.**

எம்பெருமானையன்றி வேறு கதியற்றவர்க்கு எல்லையில்லா ஆர்வம் பெருகும் வகையில் தந்த உடலம் உருகும்படியாக இனிமை பெருகும் வண்ணம் பேரார்வத்தை திருக்குடந்தையில் பெருவெள்ளம் பெருக தந்திடும்.

(கட்டளைக் கலித்துறை)

10. கொடுமை யுடைய விருத்தம் இலதாக்கும் எம்பெருமான்
கடுமை யுடனி கழகம் புகவேண்டா போகுநம்பி
திடமா யெதிர்த்திடு நாயகி ஊடல் திருவடியால்
விடச்செய்து விண்ணகர் கோயில்கொள் அப்பனாம் ஒப்பிலானே.

திருவிண்ணகர் கோயில் கொண்ட விருத்த விபூதியனான ஒப்பிலியப்பன் வராமைக் கண்டு, மின்னிடைமடவார் என்ற திருவாய் மொழியில் பராங்குசனாயகி வைகல்பூங்கழிவாய் என்ற திருவாய்மொழியில் நாயகனாம் எம்பெருமானை குறித்து பிறிவாற்றாமை மீதுற பறவைகளைத் தூதுவிட்டாள். தூதுபோன பறவைகள் போய் சொல்லி அவன் புறப்பட்டு வருவதற்குள் வேட்கையின் மிகுதியாலே பராங்குச நாயகி அவன் திறத்து ஊடல் கொண்டு, அவன் இனி வந்தாலும் அவன் முகத்தில் விழிப்பதில்லை என்று தன் ஆற்றாமையை போக்குவதற்காக சிற்றிலமைத்து பராக்காக பொழுது போக்கும் காலத்தில் எம்பெருமான் வந்தான். வந்தவிடத்தில் பராங்குசநாயகி முகம் கொடாமலிருக்கக் கண்டு, தன்பால் சேர்த்துக் கொள்ள பலவித உபாயங்களைச் செய்தான். அதில் ஒன்று கூட்டமாகக் கூடியிருந்த கழகத்தில் உள்ளே நுழைந்தான். அப்போது பராங்குச நாயகி 'எங்கள் கூட்டத்தில் புகாதே வெளியேறு' என்று கடிந்து சொல்ல, இவர்கள் இழைத்து நின்ற கடுந்தன்மை நீங்கி அவனிடம் கலந்துக் கொண்டார்கள். அனைவர்க்கும் உபாயமான திருவடியே அவர்களோடு கூடுவதற்குத் தனக்கும் உபாயமாயிற்று. அஃதன்றி பராங்குசநாயகி ஊடே நின்றிருந்த கடுந்தன்மை நீங்கி இணைந்ததை வியப்பாகக் கொண்டு விருத்த விபூதியனான எம்பெருமானை அடுத்த திருவாய் மொழியில் ஒப்பிலா அப்பனான அவனை மங்களாசாசனம் பண்ணினார்.

(எண்சீர்கழிநெடிலாசிரிய விருத்தம்)

11. ஒப்பில்பே ரன்புடையாள் உடன்கூடி உலகிரைக்கும்
பழிக்கஞ்சி நாணமுற்றுப் பிரிந்தா ளந்தோ
இப்பரிசால் ஆற்றாளாய் இழிபுடைய மடப்பத்தால்
பறவைகளைத் தூதுவிடற் கிணக்க முற்றாள்

**செப்பரிய தம்பிழையும் சிறந்தசெல்வம் படைப்பலுவல்**
**தமர்கூட்டம் மறப்பிக்க மறந்தா னன்றே**
**துப்புடைய பொறைவிரதம் சுவையழகு இருபரங்கள்**
**வியூகவிப வர்ச்செய் இவைவிடைய மன்றே.**

ஒப்பற்றவளான பராங்குசநாயகி எம்பெருமான் பக்கல் பேரன்புடையவளாய் காதாசித்கமாக அவனைக் கிட்டி நின்றநுபவிக்க உலகவர் பழித்துச்சொல்லும் பழிக்கஞ்சி வெட்கமுற்றுப் பிரிந்தான். அந்தோ பாவம்! பிரிந்த இந்தக் காரணத்தால் ஆற்றாமை மீதூர்ந்து பெண்மையால் இழிவுடைய மடப்பத்தால் பறவைகள் தூது செல்வதற்கு தகுமா? தகாதா? என்ற விவேகமின்றி ஆற்றாமை கை கொடுக்க பறவைகளை தூது விட்டாள். இப்படி இவள் தூதுவிட அந்த பெருமான் இவளை மறந்திருந்தான். அதற்குக்காரணம் குறையுடைய நாயகி செய்யும் பிழையை பொறுத்துக்கொள்ளும் அபராத ஸஹத்வம் என்ற குணம் தனக்கிருப்பதை மறக்கையாலே நாயகியை மறந்தான். இது, வியூக மூர்த்தியின்பால் அஞ்சிறையமட நாரயில் தூதுக்கு விஷயம். அடியார்களைக் காக்கும் விரதமுடையவனாகையாலே நாயகியை மறந்தான். இது, "வைகல்பூங்கழிவாய்" என்ற பதிகம் இரண்டாம் தூதுக்கு விபவத்துக்கு விஷயம்.

"பொன்னுலகாளீரோ" என்ற திருவாய்மொழியில் அந்தாயாமித்வம் பரத்வம் நிலைகளுக்கு தூதுவிடும்படியாய் அவன் தன் படைப்பின் மீதாகிய ஈடுபாட்டில் நாயகியை மறந்தான். "எங்கானலங்கழிவாய்" எனத்தொடங்கும் திருவாய்மொழியில் "திருவல்லவாழ்கோயில் கொண்ட" என்ற அர்ச்சாவதார மூர்த்தி அடியார்கள் கூட்டத்தின் இனிமையாலே பாரங்குசநாயகியாகிற தலைவியை மறந்தான். அந்தர்யாமித்வம் பரத்வாமாகிற இவைகள் மூன்று நான்கு தூதுக்கு விஷயம் என்றவாறு.

## (அகவற்பா)

**12. விடுதற் கரிய பேரழகின் மிக்கவள்**
**புனிதர்ப் பிரிந்து பொறுக் கிலளாகி**
**நினைவற் றுணங்கினள் தாயர் நுணங்கினர்**
**கட்டுவிச் சியரைக் கதியெனக் கொண்டு**
**இனதென நோயும் மருந்தும் இனதெனிர்**
**முனநாள் முருகற் பற்றினில் முடிக்கிலிர்**
**நீர்மறந் திட்டால் தான்மறந் திடுமே**

**வேலனைக் குறித்து வெறியாடத் தீர்மென**
**மறந்தும் புறந்தொழில் மாய்வளே அந்தோ !**
**உலகொருங் குண்டவன் வலைப்படும் இவளை**
**இழப்பீர் இதனை முந்துற விடுமின்**
**துலைவிலி மங்கலம் துணைகொடு காட்டினீர்**
**வகுத்தவன் வடிவில் மயங்கினள் மீள்வளோ?**
**இவள்விடாள் தாயீர் நீர்விடும் ஆசை**
**மணமுரசு அறையீர் செவிப்படின் மாய்வள்**
**திருப்புலி யூரில் நாயனார் திறத்துக்**
**கலவி இவட்குள போலும் காண்மின்**
**அந்தண் துழாய்இவள் கமழ்தலில் அறிந்தனன்**
**புனையிழை அணியும் புதுக்கணிப் பறிமின்**
**அவைகளால் பிறர்க்கும் தனக்கும் அல்லள்**
**வகுத்தவன் திறத்துத் தகுந்ததென் றமைமின்**
**தோழிக்கூற் றிஃதேல் தாய்நிலை சொல்வதென்?**
வாடி மெலிந்துபித் தேறியும் மற்றும்
ஏறப் பேசி கட்டிழுந் தகன்றும்
சார்வதே வலித்தமை சாதன மென்று
அஞ்சி ஏழில் அவனருள் அல்லதோர்
நெறிபிற தில்லெனல் நிச்சய மாமே?
மகள்பல்கால் ஆள்விட்டு ஆற்றாமை சொல்லி
கண்புதையப் போக்கற் றுறுநெஞ் சுள்ளெழ
கூடுநாள் கூடித் தாழ்த்ததுக் கூடி
உசாத்துணை அற்று சூழவும் பகைமுகம்
செயத்தடை நிலாது புயக்கற் றதனொடும்
மாலையும் காலையும் பூசல் பதினேழ்
விரைதலின் விரைவு தெரிந்த தெளிவே

விட்டுப்பிரிய முடியாத அப்பேர்பட்ட அழகின்மிக்கவனாய், தூயவற்றுக்கெல்லாம் தூயனாய் மிக்க பேரழகனாய், கல்வி செல்வம் இவற்றால் பூர்ணனாய் திருமகள் கேள்வனான எம்பெருமான் ஒருக்கால் தோழரோடு வேட்டையாடித் தோழர்களைப் பிரிந்து வந்தானாக. எல்லாவற்றிலும் சிறந்தவளான பராங்குச நாயகி தோழியரோடு மலர்

**பறித்துக் கொண்டிருந்தவள் தெய்வகதியால் தோழியரைப் பிரிந்து தனித்து வந்தாளாக, இப்படித் தனித்து வந்த இருவரும் தெய்வயோகத்தால் ஒருவரை ஒருவர் கண்டு காதலுற்று கூடினார்கள். இப்படிக் கூடினவர்கள் உலகவர்கள் நகைப்பார்களே என்று அஞ்சி பிரிந்தார்கள். பிரிந்தவர்கள் ஒருவரை ஒருவர் மறந்ததில்லை. பெரிய பேதமைச் சின்மதிப் பெண்மையால் பராங்குசநாயகி நினைவு முதிர்ந்து தந்நிலை இழந்து உணர்ச்சியற்றுக் கிடக்கிறாள்.**

இப்படிக் கிடந்த பராங்குச நாயகியை தோழியரும் தாய்மார்களும் கண்டு ஒரு மகள் தன்னையுடையவர்களாகையாலே திருமகள் போல் வளர்த்தவர்கள் ஆற்றாமையால் ஒன்றும் தோன்றாமல் கவலையுற்றுக் கலங்கினார்கள். அந்தத் தாய்மார்களில் ஒருத்தி குறி சொல்லுகின்ற கட்டுவிச்சியைக் கண்டு 'இந்த நோயின் தன்மை என்ன? இதற்குப் பரிகாரம் என்ன?' என்று வினவியபோது அவள் "நீங்கள் முன்னொரு காலத்தில் வேலனுக்கு ஏதேதோ செய்வதாக பிரார்த்தித்தீர்கள். ஆனால் அந்த பிரார்த்தனை செலுத்தவில்லை. கால நீட்டிப்பால் மறந்து விட்டீர்கள். அதனால் கோபமுற்றவனாய் இந்தப் பெண்ணின் மீதாவேசித்து இந்நிலை யெய்தும்படி நேர்ந்தது. வேலனைக் குறித்து பூஜை செய்கின்ற வெறியாட்டக்காரரை அழைத்து வெறியாட வேண்டும்; அந்த வெறியாட்டக்காரர்களுக்கும் வேலனுக்கும் மதுவாராதனை பண்ண வேண்டும் இறைச்சி கள்ளைக் கொணர்ந்து படைக்க வேண்டும். அதனால் வேலன் மகிழ்ந்து இந்நோயக்கிடமில்லாதபடி செய்து விடுவான்" என்று கட்டுவிச்சிச் சொன்னாள். மகள் நிமித்தமாக நீள உருகும் தாய்மார்கள் தங்கள் குடிமரபின் ஒழுக்கத்துக்கு மாறாக மறந்தும் புறந்தொழாத்தன்மை விட்டு, மகளின் நிமித்தமாக கட்டுவிச்சி சொன்னதுக்கிணங்க இசைந்து வெறியாட இறைச்சி, கள், மீன் போன்றவற்றை வைத்து வெறியாட்டம் நடத்தினார்கள். இதை அந்தரங்கத் தோழி கண்டாள். "பெருந்தேவனான பெருமான் திறத்தில் ஈடுபட்ட இவளை, இவள் நிலை இன்னதென்றறியாது வைணவக் குடும்பத்தைத் தூஷிக்க வேண்டும் என்று கட்டுவிச்சி சொன்னதை மெய்க் கொண்டு நீங்கள் ஆராயாமல் செய்த இந்த செயலால் பராங்குச நாயகியை இழந்துவிடுவீர்" என்று தோழியானவள் ஆராய்ந்து சொல்வது போலச் சொன்னாள். உலகொருங்காக உண்ட பெருந்தேவன் திறத்தீடுபட்டு சித்தியாமையாலே உணர்ச்சியற்றுக் கிடக்கின்ற பராங்குச நாயகி உண்மை நிலைமை யுணர்ந்து வெறியாட்டம், களியாட்டம் நம் மரபுக்கு ஒவ்வாதென விளக்கிவிட்டாள் இது, தீர்ப்பாரை என்று தொடங்கும் திருவாய்மொழியின் சாரம். அடுத்தபடியாக "துவளில் மணிமாடமோங்கும்" என்று தொடங்கும் உரையிலே தோழியரும் தாய்மாரும் திருத்தொலைவில்லி மங்கலத்தை சேவித்தார்கள். அரவிந்த லோசனனைக் கண்டபோது நெடுங்கண் இளமானான பராங்குச நாயகி அவன் அழகிலே ஈடுபட்டு

அவனை விட்டுப் பிரியமுடியாமல் பேராசையுற்று அங்ஙனே நிற்கின்றாள். தாய்மார் அவளை மீட்கப் பலகால் முயன்றும் முடியவில்லை. இதைக்கண்ட அந்தரங்கத்தோழி ("நலியக்கூடிய பொருள்கள் நலியா நின்றன என்று கூப்பிட்டும் போருகிற பதினேழில் த்வரையும் தெரியும்". மேற்கூறிய பதினேழு திருவாய் மொழிகளிலே பேற்றிலே பதற்றம் தோன்றும் என்கை.) "சிறப்புடைய பேரழகனைக் கண்டால் இவள் மீளமாட்டாள் என்று நீங்கள் குறிக்கொள்ளாது வலிய அழைத்து வந்து சேவிக்க வைத்துவிட்டீர்கள். அவன் அழகில் ஈடுபட்டு அவனைவிட முடியாதபடி நிற்கிறாள், நீங்கள் இவள் திறத்து ஆசையை துறக்க வேண்டுமே தவிர அவன் திறத்து ஆசையை அவள் துறக்கமாட்டாள் என்றாள். மற்றோர் நிலையில் குட்ட நாட்டுத் திருப்புலியூர் ஆயன் விஷயத்தில் மிக்க பேரழகுக் கண்டு பேரன்புடையவளாகி ஈடுபாடு கொண்ட பருவம் நிரம்பிய இவளை யாருக்கேனும் மணமுடிக்க வேண்டும் என்று சுயம்வரம் கூட்ட மணமுற சறைவிக்க ஆரம்பித்தார்கள். அந்தரங்கத் தோழி, "இவள் ஏற்கனவே குட்டநாட்டுத் திருப்புலியூர்ஆயன் விஷயத்தில் ஈடுபட்டவள்; அவனோடு கலவியுள்ளவன்; அதனால் அவள்மேல் திருத்துமாய் மணம் கவிழ்கின்றது; இவன் பேசுகின்ற பேச்செல்லாம் அவன் திறத்ததுவே; அவனுக்கு நேராக வேண்டும் என்று நினைத்து சிறந்த ஆடை அணிகலன்கள் எல்லாம் அணிந்து கொண்டு புதுக்களிப்புற்றிருக்கிறாள்; ஆதலால் இவளை திருப்புலியூர் ஆயன் திறத்தில் சேர்ப்பிப்பதுதான் தர்மம், அங்ஙனம் இன்றி நீங்கள் நினைப்பது செய்தால் அது அதர்மம்" என்றாள். கருமாணிக்க மலைமேல் மணித்தடத்தாமரை என்று தொடங்கும் திருவாய்மொழியில் அனுபவம். இது தோழி அறத்தொடு நிற்றல் என்ற பிரணவத்தில் ஜீவபரர்கள் சம்பந்தம் சொல்லும் தோழி உரையைச் சேர்ந்த கூற்று.

## தாய் கூற்று

தலைமகளின் பதற்ற நிலை கண்டு இது சாதநத்தில் மூளுமோ என்றஞ்சும் நிலைதாய பேச்சாகும். ஆடி ஆடி என்று தொடங்கும் திருவாய்மொழியில், வாடிவாடும் என்கிறபடி அடியார்கள் குழாங்களை உடன்கூட பெறாமையால் வந்த துன்பத்தாலே கொம்பை இழந்த தளிர்போலே வாடி மெலிந்து என்றும், "பாலனாய் ஏழுலகு" என்று தொடங்கும் திருவாய்மொழியில், "கண்ணன் கழல் துழாய் பொன் செய் பூண்மென்முலைக்கு" என்கிறபடியே, கை கழிந்தவற்றை ஆசைப்பட்டு மெலிந்து பித்தேரி என்றும், "மண்ணை இருந்து துழாவி என்ற திருவாய் மொழியில், என் பெண்கொடி ஏறிய பித்தே" என்கிறபடியே, ஒப்புமையுள்ள பொருள்களையும் அவனாக நினைத்துக் கிட்டும்படி, பித்தேறி ஏறப்பேசி என்றும், "கடல்ஞானம்" என்ற திருவாய்மொழியில், ஈசன் வந்தேறக் கொலோ என்கிறபடியே ஆற்றாமையாலே இறைவன் ஆவேசித்தானோ

என்னும்படியும் கட்டிழந்த மாலுக்குஎன்ற திருவாய்மொழியில், கற்புடையாட்டி இழந்தது கட்டே என்று பகவானைப் பிரிந்த க்லேசத்தாலே கட்டடங்க இழந்து அகன்று என்றும், உண்ணுஞ்சோறு என்ற திருவாய்மொழியிலே, இன்றெனக்குதவாதகன்ற என்கிறபடி, தன்னைப் பிரிந்து துன்பப்படுகின்ற இன்னிலையிலே எனக்கு உதவாதே போன என் பெண்பிள்ளை என்னும்படியாகவும், "கங்குலும் பகலும்" என்ற திருவாய்மொழியிலே, "சந்தித்து உன் சரணம் சார்வதே வலித்த தையலை என்கிறபடி அவனைக் கிட்டி அவன் திருமுன்னரே முடிய வேண்டும் என்று உறுதி பூண்டமை சாதனம் ஆமோ? என்று உபாஸக பரபக்தி தசையில் உண்டாம் வாட்டம் மெலிதல் முதலிய போலே சாதனத்திலே முதலிடுமோ? என்று மாதா அஞ்சி, அவனையும் வினவ வந்தவர்களையும் மயங்கா நின்றாள். மெலியா நின்றாள், "எந்தன் கோவே" என்று முறையிடுகிற ஏழில், "முறையோ அரவணை மேல் பள்ளிகொண்ட முகில் வண்ணனே" என்கிறபடி "இவள் பக்கல் உள்ளவை ஒன்றும் உபாயம் அன்று ஆனபின்பு இப்படித் துடிக்கவிட்டிருக்கை உம்முடைய கருணைக்கும் பாதுகாக்கும் தன்மைக்கும் தகுமோ?" என்று கூப்பிடுகின்ற ஏழு திருவாய்மொழிகளிலும் உபாயத்திலே உறுதி தோன்ற பேசும் இது தாய்க் கூற்று.

(வெண்பா)

**13. தெளிவுறுத்தி நான்முகற்கு தென்மறைமால் சொன்னான்**
**தெளிவின் றிருக்கவே சொன்னான் – தெளிவின்றித்**
**தேக்கு வடவேதம் தெளிவிக்கும்? தேர்த்தெளிவால்**
**காக்குமத் தென்மறையே காண்.**

எம்பெருமானானவன் ஒரு நான்முகற்கு (நம்மாழ்வாருக்கு) மயர்வற மதி நலமருளி தென்மொழியாகிற திருவாய்மொழி என்ற திராவிட வேதத்தை தான் சொன்னான். மற்றுமோர் நான்முகனுக்கு மயர்வறமதி நலமருளி கீர்வாணவேதத்தை உபதேசித்தான். இந்நிலையில் பிரம்மாவுக்கு உபதேசித்த வடமொழி மறை உலகவரை தெளிவிக்குமா? என்பது ஐயம். மயர்வற மதிநல மருளிச் சென்ற திராவிட வேதமே உலகவருடைய அறிவின்மையைப் போக்கி மெய்யுணர்வை உண்டாக்கி இறைவனடியிலே சேர்த்துக் காக்கும் தன்மையுடையதாம்.

### (கட்டளைக் கலித்துறை)

**14. காணத் தடைசெய் மயர்வைக் கழித்து மதிநலமாப்**
**பூணும் பொலன்முகம் தன்முகம் ஏழ்பத்து முப்பதிகம்**
**நாணும் நலங்கொள் மகள்முகம் பத்துடன் ஏழ்பதிகம்**
**தோணற்றாய் தோழி இருமுகம் வாய்மொழி ஏழுமூன்றே.**

ஐம்பொருளையும் காணவொட்டாமல் தடை செய்கின்ற வினைவழி வந்த உடல்வயத்தால் வந்த அறிவின்மையை எம்பெருமான் கழித்து முழுமெய்ஞானமும் முழுமையான பக்தியும், விட்டு நீங்காதபடி 73 திருவாய்மொழிகள் தோன்றின. நாணத்தை மிகவுடைய தலைமகள் கூற்றாக 27–திருவாய்மொழிகள் தோன்றின. தலைமகளை வலது தோளாக உடைய தாய்முகமாக ஏழுதிருவாய்மொழிகள் தோன்றின. அந்தரங்கத் தோழி முகமாக மூன்று திருவாய் மொழிகள் தோன்றின. ஆக, தன் முகம், தாய் முகம், தலைமகள் முகம், தோழி முகம் ஆக நான்கு முகங்களாக நூறுதிருவாய் மொழிகள் தோன்றின.

### (ஆசிரிய விருத்தம்)

**15. மூன்றும் ஐந்தும் அறியா தவர்க்கு**
**உய்யும் வகையை முதலு ரைப்பர்**
**ஏன்ற குருவின் இன்ன ருளால்**
**இக்கரை சார்ந்தார்க் கின்ப வெள்ளம்**
**தோன்றா மடுவும் மேடு காணும்**
**துவளறு சீல மாழங் காணா**
**தான்றன் னருளால் கரை சேர்ப்பார்க்**
**உடற்கு றைகாண் சடகோபன் னுண்டே**

தத்துவங்கள் மூன்றென்றும், முதல் தத்துவம் எம்பெருமான் என்றும், அர்த்த பஞ்சகத்தை அறியாதவர்கட்கு அவற்றை அறிவித்தும், துன்பக் கடலை நீந்தி இக்கரை ஏறி இளைத்திருப்பாருக்கு என்கிறபடியே, பிரபன்னனுக்கு உபாயம் அவனே என்று துணிந்திருப்பார்க்கு க்ருதக்ருத்யனாகையாலே முகில்வண்ண வானத்தவர் சூழ பேரின்ப வெள்ளத்தை முத்தர்க்கு அறிவித்தும், பரமார்த்தனுடைய திருமேனியைவிட இசையாமல் வியாமோகத்தாலே அங்கு கொண்ட போக நினைக்கும் உபய விபூதி நாயகனுக்கு "மங்கவொட்டு உன் மாமாயையை" என்ற பாசுரப்படியே விகாரமான தேகதோஷத்தை எம்பெருமானுக்கறிவித்தும், நித்திய தொண்டாற்றும் சுவை மிகுதியாலே எம்பொருமானுடைய ஆச்ரிதபாரதந்–

தரியத்தால் சீலகுணத்தாலே பரிமாறும் பரிமாற்றத்தாலே சீலகுணம் ஆழங்கால்படுத்தும் என்று நித்தியர்கட்கு அறிவித்தும் போருவர். முமுக்ஷுக்களுக்கு நிச்சயமாக எய்வது பேரின்ப வெள்ளம் என்று உபதேசித்தும், இப்படி நான்கு வித அதிகாரிகளுக்கும் ஆழ்வார் உபதேசம் செய்வர் என்றபடி.

## (ஆசிரியப்பா)

16. உண்டே? ஆயிரம் கவிகொள் கீதையும்
ஆதித்தியன் ஆயிரங் கதிர் பரப்பியும்
இராம திவாகரன் இலங்கை யெரித்தும்
உள்ளிருள் நீங்கிய தென்பது ஏதே?
ஊற்றாறா பிறவிக் கடலும் ஒய்ந்ததே?
குருகையில் வருமோர் கோதில் வகுள
பூடணபாற் கரன் உதிக்க அப்பொழுதே
பிறவியாம் பெருங்கடல் இறையும் இலதே
போதிற் கமலம் புரையற மலர்ந்ததே
உள்ளிருள் எனும் அறிவின்மை உலர்ந்ததே
இவ்வெலாம் நேர்ந்தஇவ் வுலகின் புறவே

திருத்தேர்த் தட்டில் கண்ணன் எம்பெருமான் அருளிய கீதையெனும் ஆயிரம் கவி உதித்தும், ஆதித்தியன் ஆயிரம் கிரணம் பரப்பியும், சக்கரவர்த்தி திருமகன் என்னும் திவாகரன் இலங்கை தகிக்க ஆயிரம் அம்பு எய்வித்தும் உள்ளிருள் என்னும் அஞ்ஞானம் நீங்கியதில்லை. மேன்மேலிருளைச் சுரக்கும் பிறவிப் பெருங்கடல் வற்றவில்லை. திருக்குருகூரில் வந்துதித்த குறையாதும் இலாது வகுள பூஷண பாஸ்கரன் உதித்த அந்தக்கனமே பிறவியாம் பெருங்கடல் அல்பம் இன்றி வற்றி இதய கமலம் நன்கு மலர்ந்தது; உள்ளிருள் என்பதான அறிவின்மை உலர்ந்து போயிற்று. இவையெலாம் நேர்ந்ததால் இவ்வுலகம் இன்புற்றது.

## (வெண்பா)

17. இன்பமாரி இன்பப்பா வீட்டின்பம் இம்மூன்றுள்
பண்பறிவார் யாரே! பயனறிவார் – உண்மை
தரமுயர் மாறன் இசைவேதம் அர்ச்சை
திரிபறிவார் சேர்வர் நரகு.

சடகோப

இன்பமாரியாம் குருகூர்ச்சடகோபனையும், இவர் திருவாய் மலர்ந்தருளிய திருவாய்மொழியையும், அர்ச்சாமூர்த்தியை உலோகங்களால் புனையப் பெற்றது என்றும், நான்காம் வர்ணத்தார் என்றும், தமிழ்பாக்கள் என்றும் பண்பறியார் கூறுவர். பண்பறிவார், தொழுகுலத்தோன் என்றும், உயர்வேதமென்றும், சுத்த ஸத்வ திருமேனி என்றும் காண்பர். இதற்கு மாறுபட அறிவர் நரகம் சேர்வர் என்பதே.

(கட்டளைக் கலித்துறை)

18. நரகை யொழித்து நன்கழல் சேர்க்கும் அனந்தபுரம்
அருச்சித் தமரர் தலைவன் அயனும் நிலத்தேவர்
ஒருத்தர் தவறா(து) ஒருங்குமூ வாசல் கடைப்பிடித்து
திருத்தும் உறவே சமமாகச் சேவிக்கச் சீர்கொளுமே.

மலைநாட்டு திருப்பதிகளில் ஒன்றானது திருவனந்தபுரம். அதில் அமரர்கோனாகிய விஷ்வக்சேனர், முதல்வாசல் கடைபிடித்து திருமுடிபக்கம் நின்று சேவித்தும், எம்பெருமான்நாபியில் தோன்றிய பிரமன் இரண்டாம் வாசல் கடைபிடித்து திரு உந்திக்கமலம் சேவித்தும், நிலத்தேவர்கள் மூன்றாம் வாசல் கடைபிடித்து திருவடிகளைச் சேவித்தும், இப்படிச் சேவித்தாலும் தன்பால் வேற்றுமை இன்றி சமமாக சேவிக்கும் வாய்ப்பினை உடையதாம்.

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

19. கொள்ளும் எழுத்தொன்(று) இருளைஎன
உறவில் உணர்த்திகுறை வில்பொருள்
விள்ளும் நமம செவிலியென
அருளே நெறிகொள் மிக்கதிடம்
துள்ளும் பதற்றும் மகள்நான்கில்
துவளில் போகத் துறுவேட்கை
தெள்ளென் ஞானச்சட கோபன் தெறிக்கும்
நால்வர் நான்முகத்தே.

பிரணவத்தின் அர்த்தமான ஜீவபரர்கள் சம்மந்தத்தைத் தோழிக் கூற்றாகச் சொல்லும். குறைவிலா நிறைபொருள் தரும்படியான நமப்பதம், எம்பெருமான் அருளல்லது வேறு உபாயம் இல்லை என்னுபடியான திட நம்பிக்கையை வலியுறுத்தும் தாய்க்கூற்று. தலைமகனை சேர்ந்தல்லது தரிக்க

முடியாத பதற்றமுடைய நாராயணாய என்ற நான்காம் வேற்றுமைப் பொருளைத் தலைமகள் கூற்றாகச் சொல்லும். இப்படித் தோழி, தாயார், தலைமகள் மூன்றோடு பெண் பேச்சாகவும் பேசும் ஆழ்வார் தம் பேச்சாக நான்கு அதிகாரிகளைப் பார்த்து நான்கு முகமாக உபதேசிப்பர்.

**(அகவற்பா)**

**20. என்பெறு தென்ன மலைக்கா துள்ளத்து**
**ஊறிய மதுவிர தமாய் தூமது**
**வாய்கொள் கொண்டு குழல்வாய் வகுளத்தின்**
**சாரமுட் கொண்டு தேனென என்று**
**ஆளம் வைத்துச் சிறுகாலில் லியம்போது**
**குறிஞ்சி மருளறும் காமரம் கந்தாரம்**
**தகைவறப் புக்கு வண்டொத் திருண்ட**
**குழலில் சங்கையற மருவி யருளாத**
**யாமென் றோடிவந்து வாசமே ஊதி**
**வண்டே கரியாய தெய்வ வண்டோடே**
**சேர்விக்கும் சேமம் உடைய நாரதன்**
**முனிவா கனர்தம் பிரான்மார் போல்வார்**
**இவர்களை வண்டு தும்பியாம் பொருளே.**

அழகிய மலரெலாம் ஊதி நீ என்பெறுதி என்று மீட்க வேண்டும்படி தகாத பொருள்களை இனிய பொருள்களென்று மயங்காதே, இறைவனாகிய தன்னுடைய அழகு சீலம் முதலியவைகளை நினைத்து உள்ளம் கனிந்திருக்கும் அடியார்களுடைய மனத்திலே பகவனாகியத் தேனை விரும்பி அவனையே உணவாக உடையவண்டு, தாமரை மலரில் இருந்து கொண்டு அதனை விட்டு, அடைவதற்கே அரியதாய் அடைந்தாலும் நாவினை நனைப்பதற்கும் போராதே, தேனை உடைய முள்ளிற் பூவை கண்ணாலும் பாராததைப் போன்று, "தேவரீருடைய தேனே மலரும் திருவடித்தாமரைகளுடைய இனிமையில் மனம் அழுந்திய ஒருவன் மற்றொரு அற்ப இன்பத்தை விரும்ப மாட்டான்" என்கிறபடியே, மற்றொன்றினைப் பிரித்து பாராதே இந்தத் தேனை உண்ணுதலையே விரதமாக உடையராய் பகவானாகிய இனிய பொருளை அனுபவிக்கும் அனுபவத்தாலே பரிசுத்தமாய் வகுள மாலையைத் தரித்த ஆழ்வாருடைய இனிமை பரத்துவம் முதலானவற்றின் இனிமையும் அளவிற்குட்பட்டது என்னும்படியான திருக்குழலில் வைத்த ஒளிமா மலரான வகுளத்தின் தரத்தை எடுத்து

அவ்வழியாலே இத்தலையில் இனிமையை அனுபவித்து, இப்படி பகவானுடையவும் பாகவதருடையவும் இனிமைகளை அனுபவித்த செருக்குக்குப் போக்கு வீடாக ஆலத்தி வைத்து, காலங்கட்கு தகுதியான பண்களைப் பாடி, திருவாசல்களிலே சேவிக்க வந்தவர்கள் நிறைந்து தலைப்புகவொண்ணாதபடி நெருக்க தெருவாசல் காப்பர் திருக்கதவு திறக்க வேண்டும் என்று விரும்பிக் கேட்டு, கண்ணையும் மனத்தையும் கவருகின்ற திருவாசலில் அழகில் துவக்குண்ணாதே அதனைக் கடந்து புகவேண்டுகையால் தடையற பாடுவாராக இருக்கின்ற அந்தரங்கத் தன்மையாலும், ஒன்றிலேயே நோக்குடைய மனத்தினை உடைமையாலும், தனக்கு ஒத்த விஷயமுள்ள இடத்திலே சேர்ந்து அச்சமில்லாமல் அவனுடைய அண்மையில் இருப்பவர்களாய், இத்தலையில் துன்பத்தை அவனுக்கு அறிவித்து அவனோடே கூடிவர இராதே முந்துறவே தேடிவர வேண்டும் என்று விரும்பி விட்டபடியே இத்தலையில் துன்பத்துக்குத் தகுதியாக அவன்வரவினை அறிவிக்க, விரைந்து வந்து தங்கள் வரவாலே இத் தலையில் பிறந்த செவ்வியை அனுபவித்து அத்தலையில் தாங்கள் அனுபவித்த இனிமையை தங்கள் வரவாலே இத்தலைக்கு விளக்கிக் கொண்டு தரிக்கச் செய்து, வேத சாகைகளின் மேலேயுள்ள சாரத்தை உட்கொள்ளும் ஆறுபத நிஷ்டர்களாய் இரண்டு சிறகுகளோடு கூடியிருப்பதாலே தடையின்றி எங்கும் செல்லக் கூடியவர்களை முன்னிட்டு அங்கீகரிக்கும் அவனாய், வேதாந்தங்களாலே அறியப்படுமவன் என்று தோன்றும்படி கெருடவாகனனாய் சாரத்தையே எடுக்கின்ற சர்வேச்வரனோடே சேர்விக்கும் பிரம்மபாவனையாகிற சேமத்தையுடைய நாரதன், பகவானுடைய குணங்களை அனுபவித்து போரானந்தமுடையவனாய் அந்த ஆனந்தத்தில் பாடிக்கொண்டும், நடனம் ஆடிக்கொண்டிருக்கும் ஸ்ரீநாரதமாமுனி, லோக சாரங்கமாமுனிகளாலே தாங்கப்படுகையாலே முனிவரென்று கூறப்படுகின்ற திருப்பாணாழ்வார், திருவாய்மொழி இசையினையே தங்களுக்கு இனிய பொருளாகக் கொடுக்கின்ற தம்பிரான்மார் போன்றவர்களை வண்டு தும்பி என்னும் என்கிறபடி.

### (வெண்பா)

**21. பொருளின் அடிமையிற் புக்கிலர் ஞானம்**
**இருந்தும் இசையார் அழுக்கை – விரும்பியும்**
**ஏற்பரோ? மாறன்பா மெய்யுணர்ந்தோர் ஏலாரே**
**காற்கடை கொள்ளுவர் காண்.**

தடையற்ற சுவாதீனான பரம் பொருளுக்கு ஆன்மா அடிமை என்பதையும், அந்த அடிமைகளோட தொண்டாற்றுதலையும் அறியாதவனானவனுடைய ஆன்மா அறிவு மயம் ஆனந்த மயனானாலும்

மாறன்பாவாகிய திருவாய்மொழி உணர்ந்தோர் இவ்வாத்மாவை வேண்டுமென்றிசைய மாட்டார்கள். இவ்வான்மாவால் தரிக்கப் பெற்ற அறிவில்லாப் பொருளாம் அழுக்குடம்பை ஏற்கமாட்டார்கள் என்பதை சொல்ல வேண்டிடுமா? அவற்றைக் காற்கடை கொள்வர்.

(கட்டளைக் கலித்துறை)

22. காண்மின் உலகீர் சனக தசரதர் காசினியில்
பேணும் பிறங்கொளி இலதாம் நந்தன் இவர்கள்குலம்
தோணும் முதலும் இடையும் கடையும் துலங்குவபோல்
நாணுறு நான்கினில் மாறன் எனவரு பாற்கரனே.

உலகவர்களே! இந்த வியப்பைக் காணுங்கள். ஜனகர் மூத்த மகளான சீதா பிராட்டியும், தசரத சக்கரவர்த்தியுடைய நடுப் பிள்ளையான பரதாழ்வானும், உலகவர் விருப்பத்துக் குரித்தல்லாத குலத்தில்தோன்றிய நந்தகோபனுடைய கடைக் கூற்றுப் பிள்ளையான கண்ணனும் தோன்றி, குலத்தை சார்ந்த குறைகளைப் போக்கி புகழுண்டாக்கினது போல் மாறன் நான்காம் வர்ணத்துத் தோன்றி குலத்துக்குப் புகழும் உலகவருடைய பிறவிச்சிறையும் அறுத்தார்.

(ஒன்பதின் சீர்க்கழி நெடில் ஆசிரிய விருத்தம்)

23. பாற்கரன் கதிரின் ஞானமா னந்தம் அடியவன்
பாலதோர் நூல்களின் நுகர்பவன் பகர்வே
நூற்களின் சாரமாம் நுவலரு மறையின் உயிர்களாம்
நுவல்பர தந்திரன் நுகர்பவன் பரனே
பாற்படா பரன்தன் தன்வழி நுவல்பவை முதற்கடை
பகையிவை நான்கும் நமவும் பின்னவே
ஏற்ப திவ்வாறாம் குறையறக் காண்பார் பரனுயிர்
இயல்பை அறிவெனும் கடலெனப் பெறுவரே.

பகலவனுடைய பேரொளியைப் போன்ற ஞான ஒளியும், அவற்றின் காரியமான ஆனந்தமும் உடையவனான இந்த ஜீவன், தான் பரனுக்கு அடியவனாய்த் தொண்டு செய்து தொண்டினால் வரும் இன்பம் தனதாகக் கருதுபவன் என்பது சாஸ்திரங்களில் சொல்லப்பட்டதாகும்.

சாஸ்திரங்களின் ஸாரமாய் சொல்வதற்கரிய பெருமைகளை-யுடையதான திருமந்திரத்தில், சேதனனை பரதந்திரன் என்றும், இந்தப் பரதந்திர இயல்புக்கு ஏற்ப ஜீவன் செய்கின்ற தொண்டினால் விளையும் இன்பத்தை நுகர்பவன் இறைவனென்றும் சொல்வதாகும்.

நூல்களில் சொன்ன ரீதியில் பரனுக்கு ஜீவனானவன் பரதந்திரன் என்றும் போக்யம் என்றும் கொள்ளாது, சேஷத்துவ போக்த்ருவத்தோடு கூடிய இவ்– விரண்டும் அகங்காரத்தை ஏற்றிருப்பதால் பரன் திருவுளத்திற்கு மாறுபட்டவை. (அவன் உகப்புக்கு மாறுபட்டவை) இவற்றைத் திருமந்திரத்தில் ப்ரணவத்தில் முதல் எழுத்தாகிய அகாரமும் ஈற்றெழுத்தாகிய மகாரமும் சொல்லியிருக்க, பின்வரும் நாராயணாய என்று வரும் நான்காம் வேற்றுமையும் இரண்டாம் பதமான நமசும் சேஷத்வ போக்த்ருத்வத்தை அறத்தள்ளி முதற்சொன்ன அகார மகாரங்களை விட்டு, பின் சொன்ன நமபத ஆய பதங்கள் பின் வந்து பாரதந்த்ரிய போக்யதையை சொல்லிற்று. இதில் அகங்காரத்திற்கு யோக்யதை இல்லையாயிற்று. இவ்வாறாக பரமாத்மாவின் இயல்பையும் ஜீவாத்மாவின் இயல்பையும் மாறுபடக் காணாது. மேற்சொன்ன ரீதியில் யதார்த்தமாக காண்பவர்களை கண்ணனெம் பெருமான் "ஸமஹாத்மா" என்று சொன்னதாலே, மகாமதியுடைய வன் என்பதால் இவன் கடல் போன்ற பேரறிஞன் எனப்படுவான்.

இதை நம்மாழ்வாரும் "தனைக்கேயாக எனைக் கொள்ளுமீதே" என்ற ருளியிருக்கின்றார்.

"சேஷத்வ போக்த்ருத்வங்கள் போலன்றே பாரதந்தர்ய போக்யதைகள்" என்று தொடங்கும் ஆசார்ய ஹ்ருதய சூத்திரத்தின் அடிப்படையில் அமைந்தவை இவை.

(ஆசிரியப்பா)

24. கடல்நீர் உப்புநீர் நித்தம் காணலாம்
உவாவில் அன்றித் தொடற் குதவாத போல்
நூற்கடல் ஆங்கே கலங்குநீர் நொய்யவாம்
தெளிவிலாக் கலங்கல் பருகத் தெளிவிலாது
ஐயந் திரிபறி வின்மையின் ஆழ்ந்து
வேண்டா நாற்ற மிகுமுடல் முகந்து
நானென தென்னும் நலமி லுழல்வான்
இறையருள் கடைக்கண் இயங்கக் குருகைநேர்
வகுள பூஷணன் பாற்கரன் வந்து
இன்ப மாரி இயந்ததோர் ஞானத்து
வீட்டின்ப வாரிதன் குணநீர் மிசைந்து

**ஆயிரங் கதிரா யிரங் வியமுதின்**
**நிலத்தே யிவரால் நிறைஞா னம்பெறும்**
**புகல்வதோர் புகழே மாறன்தன் வேதமே**

உப்புத் தன்மை வாய்த்தாய் அந்தக் கடலுக்குள் வசிக்கின்ற மீன் முதலான பொருட்களுக்கொழிய, புறம்புள்ளார்க்கு உள்ளே புகுவதற்கும் அரிதான பவுர்ணமி முதலிய பருவ காலங்களில் ஒழிய ஏனைய காலங்களில் தீண்டத்தகாது என்கையாலே முழுகுதற்குக் கால நியதியை உடைத்தாய் இருக்கிற கடல் நீரானது, மேகம் பருகி மழையாகப் பெய்ய அம்மேகத்தின் சம்பந்தத்தில் கடல்நீரினது உப்புத்தன்மை நீங்கி எப்பொழுதும் எல்லார்க்கும் பயன்படுவத போன்று, வடமொழி மறையானது, பிராமணன் ஆவணிமாதத்திலாவது புரட்டாசி மாதத்திலாவது சாஸ்திரத்தில் சொல்லியபடி உபாகர்மங்களைச் செய்யும் நியமத்துடன் கூடியவனாய் நாலரை மாதங்களில் வேதங்களை அத்யயனம் செய்யக்கடவன். இதற்குப் பிறகு நியமத்துடன் கூடியவனாய் சுக்கில பட்சத்தில் வேதங்களை ஓதக்கடவன். 4 வேதம் 6 அங்கங்கள் உபநிடதங்களையும் கிருஷ்ணபட்சத்தில் நன்றாக அத்தியயனம் செய்யக்கடவன் என்கிறபடியே அத்தியயனம் செய்வதற்கு கால நியதியும், மேல் மூன்று வர்ணத்தாரும் ஓதற்கு அதிகாரிகள் ஆகையாலே, அதிகாரி நியதியையும் உடைத்தாயிருக்கிற நூற்கடல் என்ற வேதம், 'இவள் வாயனகள் திருந்தவே' என்கிறபடியே நம்மாழ்வார் திருவாக்காலே வெளிவந்து கால நியதி அதிகாரி நியதியை வேண்டாத பண்பை அடைந்து கட்டளைப்பட்டவாறே, பெண்களாலும் நான்காம் வர்ணத்தவர்களாலும் அத்யயனம் செய்யத்தக்கது. இதனை அத்தியயனம் செய்யும்வர்கட்கு மோக்ஷம் கையில் இருக்கும்படியே. ஒரு காலவரையின்றியே எல்லார்க்கும் எல்லாக் காலமும் கற்பதற்குரியதாம் இந்தத் திருவாய்மொழி. இந்த மறையும் இதன் பயனும் சிறப்புடைவனவாகும். வடமொழி மறை முக்குணமான தோஷத்தைக் குறிக்கொண்டதால் அம்மறை பயின்றவர்கட்கு யதார்த்த ஞானம் வருவது அருமை. ஐய உணர்வு, திரிபுணர்வு, அறிவின்மை இவைகளில் ஆழ்ந்து இதனால் பொல்லா ஒழுக்கு ஒழுகி துர்நாற்றமுடைய உடலெடுத்து, நான் எனதென்னும் அகங்காரமமகாரங்களால் ஆனந்தம் இல்லாத காட்டில் உழல்வாருக்கு வேதம் பிரமாணம், இதைக்கண்ட இறைவன் மனம் வருந்தினவனாய், சேதனர்பால் அருள் பெருகி உண்மை உணர்ந்த நல்லான் ஒருவனைத் தோற்றி வைக்க வேண்டும் என நினைத்து, அமலங்களால் விழிக்கும் தம்கடைக் கண்களால் நோக்க, அந்நோக்கம் ஜாயமான காலத்தில் அவதரிக்கப்பட்ட இன்பமாரியாம் ஆழ்வார் என்ற முகிலானது அர்ச்சாவதாரத்தின் குண நீரைப்பருகி, ஆயிரம் கவியமுதமாக்கி, இதையுண்டவர் நிலத்தேவராய் நிறைஞானம் பெற்று தாங்கள் உய்ந்தார்கள்; உலகை உய்வித்தார்கள். இதனால் மாறன் வேதம் புகழ்வதற்கரியதோர் புகழுடையது.

## (வெண்பா)

**25. வேதங்கள் கற்றல் ஒழுகலில் விப்பிரராய்**
**சாதியால் தாழ்த்தி உயர்த்திகள் – ஓதுவர்**
**சந்தங்கள் ஆயிரவர் சாதி பிரித்தறியார்**
**வந்தனைக்காம் வைணவன் தான்.**

மறைகளை குருமுகமாகக் கற்றறிந்து அறிந்ததின் ஒழுக்கத்தை மேற்கொண்டொழுகலால் பிராமணன் என்ற தகுதியை பெறுவர். இவர், தன் குலத்தை மேலாக மற்றது தாழ்வாகக் கொள்வர். குருகூர் சடகோபன் திருவாய் மலர்ந்தருளிய சந்தங்கள் ஆயிரத்தைக் கற்று வல்லவரானால் வைணவன் என்ற தகுதி பெறுவான். இவன் ஆன்மாவின் உண்மை அறிந்து அனைத்தும் சமமே என்றொழுகுவான்.

## (கட்டளைக் கலித்துறை)

**26. தானே உயர்தின்னனை ஒன்று சாற்றினான் நோற்றநான்கில்**
**கானேய் பயிலேறு கண்கரு வீடொருக் கொண்ட சொன்னால்**
**தேனே எம்மா ஒழிவேய் நெடு நான்கில் தெரிபயனும்**
**ஊனேய் தடைஉயிர் ஆறெம்மான் ஐம்பொருள் ஓர்ந்துரைத்தே**

மிக்க இறை நிலையும் என்ற தனியனின்படி திருவாய்மொழியில் அர்த்த பஞ்சகம் உள்ளதென்பதை உயர்வற என்றும், திண்ணன் வீடு, அணைவதரவணை, ஒன்றும் தேவு என்றும் தொடங்கும் நான்கு திருவாய்மொழிகளில் பரத்வ தன்மை சொல்லியதாம். பயிலும் சுடரொளி, ஏறாளும் இறையோனும், கண்கள் சிவந்து, கருமாணிக்கம்,என்று தொடங்கும் திருவாய் மொழிகளில் ஆன்மாவின் தன்மையும், வீடுமின், ஒரு நாயகம், கொண்ட பெண்டீர், சொன்னால் விரோதம் என்று தொடங்கும் திருவாய்மொழியில் இறைவனை அடையத் தடை பண்ணும் விரோதியின் தன்மையும் சொல்லிற்று. நோற்ற நோன்பு, ஆராவமுதே, மானேய் நோக்கு நல்லீர், பிறந்தவாறு என்று தொடங்கும் நான்கு திருவாய்மொழியில் பகவானை அடைவதற்கு சாதனத் தன்மையும் சொல்லிற்று. எம்மா வீடு, ஒழிவில்காலம், நெடுமாற்கடிமை, வேய்மரு தோளினை என்று தொடங்கும் திருவாய் மொழிகளில் பரன் திறத்து அடைந்து பெரும்பயனைச் சொல்லிற்று.

## (அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்)

27. ஈதே முடிவில் விடுமுடம்பில் எச்சில்
உகக்கும் காதலன்போல்
ஏதும் உடம்பின் குறைகாணான் மாயஆக்கை
இதில் புகுந்து
யாதும் உகந்த நிலமாக இவன்திரு
மேனிவா னாட்டிருப்பா
பாதம் பற்றி மங்கவொட்டுன் மாயை
எனவே விடுவிக்கும்.

மாலையாக பிறக்கும் பிறவிகளின் உடம்பில் இறைவனருளால் வினைத் தொடர்பு இல்லாததாக இதுதான் கடைசி உடம்பு என்றும், இனி உடம்பின் தொடர்பு இந்த ஆத்மாவிற்கு கிடையாது என்றும், இந்த நிலையில் இருக்கும் ஆழ்வார், இறைவன் இடத்திலும் அடியார்களின் திறத்திலும் மற்றும் இறைவன் சம்பந்தப்பட்ட எல்லைக் காண்பரிய பிரேமையும் மதிப்பும் உடையவராக ஆகவும், இதைக்கண்ட எம்பெருமான் பல கல்பங்களாக படைத்துக் கொண்டு வருகிற நிலையில் இந்த ஆழ்வாருடைய பண்புகளைக் கொண்டு, இதுவரைக்கும் படைத்த படைப்பில் இப்படி ஒருவர் இல்லை மேலும் இருக்க முடியாது என்ற திருவுள்ளமுடையவனாய். இவர் திருமேனியில் வாஞ்சையுற்று, காதலியின் அழுக்கை விரும்பும் காதலன் போல் இவர் திருமேனியில் புகுந்திருந்து, இ வரை இந்தத் திருமேனியோடு பரமபதத்திற்குக் கொண்டு செல்ல வேண்டும் என்று நினைத்து, "இந்த ஸ்தூல உடம்போடு கையைப் பிடித்து அழைக்கின்றானே என்று இங்கு தான் அருவருக்கத்தக்கப் பிறவி என்ற சிறை என்றால் அங்குமா?" என்று கலங்கி எம்பெருமான் திருவடிகளைப் பற்றிக்கொண்டு முக்குணத்தோடு கூடிய மாயையின் பரிணாமமாகையாலே இதை விடுவிக்க வேண்டுமென்று ஆழ்வார் பிரார்த்திக்க, திவ்யசூரிகளான இவர்களால் வாழ்த்தப் பெற்ற திவ்ய தேசங்கள் தோறும் செய்யும் பிரேமையை இவருடம்பில் செய்வானாக. இவர் இசையாமல் இறைவனைப் பார்த்து, அருவருக்கத்தக்க மாயை காண் இந்த அழுக்குடம்பு ஆதலால் இதை விடுக்க வேண்டுமென்று திருவடிகளிலே மன்றாட எம்பெருமான் ஆச்ரித பரதந்தரனாய் இசைந்து விடுவித்தான் என்பதாம். இந்த குணம் "மருள்கள் கடியும் மணிமலை திருமாலிருஞ்சோலைமலையே" என்ற பதிகத்தில் காணலாம்.

## ஆசிரியப்பா

28. என்றனை நீஇன்று ஒருபொரு ளாக்கி
என்னுள்ளே நின்றனை வைத்தாய் அன்றெனை
புறம்போகப் புணர்த்த தென்செய்க? குன்றென
திகழ்மா டங்கள் சூழ்ந்த திருப்பேரா!
ஒன்றெனக் கருள்செய் யுணர்த்த லுற்றேன்
என்றே மாறன் நின்றே இயம்ப
தலைநிலம் கவிழ்ந்து தரையைக் கீறி
இறைவன் இதற்கொரு மாற்றங் காணா
கடிமணக் காட்சியில் மந்திரம் மறந்த
மறையவன் வாத்திய ஒலியை முழக்கி
செய்யச் செய்யும் செய்கை போலே
சூழ்விசும் பணிமுகில் தூரியம் முழக்கம்
முரசங்கள் வலம்புரி முழக்கம் செய்து
அர்ச்சி ராதி கதியைக் காட்டி
அமானவர் அடையும் நிலையுங் காட்டி
அந்தமில் பேரின்பத் தடியரோ டிருந்தமை
இவ்வெலாங் காட்டி இறைவ னாழ்வாரை
திசைதி ருப்பிக் கேட்டக் கேள்வியை
மறக்கச் செய்வதில் மாயன் சதுரன்
மாறனே! வாரீர் ஓங்காரத் தேரில்
ஏறுமென இறைவன் இதமொ ழிந்தானே.

"மங்வொட்டு" என்னும் திருவாய்மொழியில், ஆழ்வாருடைய ஜ்ஞான பக்தி வைராக்கியங்களைக் கண்டு எம்பெருமான், திருமாலிருஞ்சோலை, திருப்பாற்கடல் முதலான திவ்ய தேசங்களில் பண்ணும் ஆதரத்தையும், அன்பையும் ஆழ்வார் திருமேனி முதலான அவயங்கள் – உறுப்புகள் எல்லாவற்றிலும் செய்து பஞ்ச பூதங்களினுடைய சேர்த்தியாலான ஆழ்வாருடைய திருமேனியை பரமபதத்திற்கு எடுத்துச் செல்ல விரும்பி அவசரப்படுத்துவதைக் கண்ட ஸ்வாமி நம்மாழ்வார், எம்பெருமானைப் பார்த்து ஒரு கேள்வி கேட்டார். 'எம்பெருமானே! அடியேனை இன்று ஒப்புற்ற வஸ்துவாக்கி—பொருளாக்கி உபயவிபூதிக்கும் நாயகனான உம்மை என்னிடத்தில் இருத்தி, என் இருதய கமலத்தில் வீற்றிருந்து, இவ்வளவு பாரிப்புகளைச் செய்து என்னைச் சூழ்ந்து கொண்டு ஒரு நொடிப்போதும் என்னை

**விட்டகலாமல் பேரருள் செய்கிறீர். அடியேனைக்கடந்த காலங்களில் மாறிப் மாறி பல பிறப்புகளை எடுத்து அனர்த்தப்படும்படி விட்டுவைத்தது ஏதுக்காக? இதையருளிச் செய்வேணும்' என்றார். அதற்கு எம்பெருமான், இவர் கேள்விகளுக்குப் பதில் சொல்ல ஆரம்பித்தால், பிறகு வேறு ஒரு கேள்வியைக் கேட்பார். இதனால் இவரிடமிருந்து தப்பிக்கவே முடியாது என அறிந்து, தலைகவிழ்ந்து பூமியை தனது பெருவிரலால் கீற,**

கல்யாணத்தில் மாங்கல்ய தாரணம் செய்யும்போது சொல்லக்கூடிய மந்திரத்தை மறந்த புரோகிதனைப் போல, திசைத் திருப்புவதில் சாதுரியமுடைய எம்பெருமான். "சூழ்விசும் பணிமுகில்" என்ற திருவாய்மொழியில் சொல்லப்பட்ட அர்ச்சிராதி கதியைக் காட்டி ஆழ்வாருடைய கேள்வியை மறக்கச் செய்தான்.

## (வெண்பா)

**29. மொழிபல செப்பம் பிறந்தது முத்தி**
**வழிபல வாயவிட் டொன்றாம் – கழிபல**
**தாழ்த்தும் பொருநைக் குருகைச் சடகோபன்**
**வாழ்த்துரைத்த வாய்மொழித் தேன்.**

உலகின் பல மொழிகளும் இயங்குவதால் இறைவன் தொடர்பின்மையால் செப்பமற்றன. திருவாய் மொழி இறையனுபவத்தையே கொண்டிருத்ததலால் மற்ற மொழிகளும் இதைக் கண்டே செப்பமுற்றன. முக்தி மார்க்கங்கள் பலவாக நுல்கள் கூறியதை, பரன்பால் தஞ்சம் அடைவதொன்றே முக்தி மார்க்கமென்று திருவாய்மொழி கூறும். வெள்ளப்பெருக்கால் சுழித்தோடும் பொருனைத் தென்கரையிலுள்ள திருக்குருகூரிலவதரித்த மாறனருளிய திருவாய் மொழியின் செப்பங்களிதுவாம் மாறனருளிய திருவாய்மொழி.

## (கட்டளைக் கலித்துறை)

**30. தேனென்றி னிக்கும் சொலக்கேட்க சென்மங்கள் கைத்தழலும்**
**தானொன்றி தந்தான் கவியா னமையின் புளிகவாது**
**கானொன்று செவ்வாய் துவர்த்துப்பாம் கூடிக் களிப்புறுமால்**
**வானொன்று சீர்த்திரு வாய்மொழித் தேன்கொள் கடலிதுவே**

சுவை மிக்கதும் சிறப்பு மிக்கதுமான திருவாய்மொழி ஆறுசுவைகளைக் கொண்டதொரு தேன்கடல். "எங்ஙனே சொல்லினும் இன்பம் பயக்கும்" என்று சடகோபன் வாய்மொழி பண்புரை சாமத்தின் சதோக்யமாகையாலே

சொன்னமாத்திரத்திலேயே தேனுறலின் இனிக்கும். குருமுகமாகக் கேட்கப் பிறவிகளில் விரத்தியுண்டாக்கிப் பிறவியைக்கடிந்து போக்கும். எம்பெருமான் "ஒன்றி ஒன்றி உலகம் படைத்தான் கவியாயினேன்" என்பதனால் உளதாய இன்பம் உள்ளே நிரந்தரமாக நிரம்பி மிடைந்த சொல்தொடையா யிரமாக வழிந்து வந்ததாகையாலே, உள்ளே என்றும் நிற்கும் பராங்குச நாயகி எம்பெருமானைக் கூடிக்களிப்புற்றதால் எம்பெருமான் திருவதரம் துவர்த்துப்பாம். இதில் அறுசுவையும் செல்லப்பட்டது.

## (அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்)

31. கடலகடு வகிர்பொருநை காவிரியின்
கரையிகந்து கிளை கொண்டோடும்
உடனிகுளை கூறுபல உற்றதாய்பல்
கூறுதலை மகள்பல் கூறா
படர்வேட்கை தன்கூறோ பலபலகால்
விரிந்து திருமகள் கேள்வாரி
குடைந்துபுகும் குருகூரர் வாய்மொழியாம்
குடைந்து பிறகுடைதல் தீர்ந்ததுவே

கடலின் வயிறு கிழியும்படியாக வேகமாகச் சென்று சங்கமமாகும் தாமிரபரணி, காவேரி என்ற நதிகள் போலே திருவாய்மொழியாம் பெரியதோர் ஆறு கரை கடந்து தோழிக்கூற்று, தாய்க்கூற்று, தலைமகள் கூற்று என்ற பல கிளைகளாலும் பெருகியும் தன் கூற்றோடு சிறிதும் குறையாது கம்பீரமான கடலைக் கிழித்துக் கொண்டு திருவாய்மொழி என்ற ஆறு திருமகள் கேள்வன் என்ற பெருங்கடலிலே சங்கமிக்கும். இத்தகைய குணக்கடலாகிய திருவாய்மொழி என்றதோர் பெரிய தோராற்றில் படிந்து குடைந்து பெருமுத்தாபமும் பிறவிக்கேதமும் தணிந்து சந்ததம் சுகித்துக் கொண்டிருக்கிற யாம், பிரிதொன்றில் தொடர்புக் கொள்ள மாட்டோம்.

## (அகவற்பா)

32. வித்தைநல் தாயெனக் கொடுபெறு வித்து
பாலும் அமுதுமாம் பரம்பரன் பேர்கொடு
வளர்த்தது திருமகள் போன்றெனை வளர்த்த

தஞ்சமாத் தந்தை மற்றைப் பேச்சன்றி
உபய விபூதி நாயகன் நன்கொடு
நாலிரண் டிழைசேர் முப்புரி நாண்கொடு
பிரம சூத்திர பந்தம் பிணைக்க
பரம்புரு டன்தான் பாங்குடன் கைக்கொள
நான்கினில் புக்கு நடுக்கிடக் கும்நாள்
நான்கினைக் கழித்து சூழ்விசும் பின்படி
உடன்வழி சென்று குடைந்துநீ ராடி
வியன்துழாய் அஞ்சனம் நீறுநா னப்பொடி
பீதக வாடை பல்கலன் கொண்டு
நோக்கியர் அலங்கரித் துப்பல் லாண்டு
கவரிசெய் நிறைகுட விளக்கம் ஏந்தி
இளமங் கையர்தாம் வந்தெதிர் கொள்ள
வைகுந்தம் புக்கு வாய்மடுத் துப்பெருங்
களிச்சியா வானவர் போகம் உண்டு
கோப்புடைக் கோட்டுக்கால் கட்டில் மிதித்து
ஆரோ கித்துப் பரதன் அக்ரூரன்
மாருதி இவர்களை அணைதிரு மார்பில்
குருமா மணியா அணையும் பொருளிவள்
மணிவல்லிப் பேச்சி இவள்தன் பரமே?

பிரம்ம வித்தையாம் திருமந்திரத்தை இலனென்பது போய் உளனாம் ஞாநப்பிறவியாகப் பெற்று, பாலும் அமுதுமான திருமால் திருநாமங் கொண்டு திருமகள் போலவளர்த்தேன் என்கிறபடியே திருமகளுக்கு ஒப்பாக வளர்த்த ஆசாரியனாகிய தஞ்சமாகிய தந்தையானவன், வினைவழி வந்த பிறவி ஆகிய ஊனஜென்மத்துக் காரணமாகிய தந்தை போலன்றியே, உபய விபூதிக்கும் தந்தையாயிருந்தும் பந்த மோஷங்களின்ரண்டுக்கும் காரணமான தந்தையைப் போலுமன்றிக்கே ஞானசென்மத்தைக் கொடுத்து மோஷத்துக்கே காரணனாகிய தந்தையாய், எந்த நிலையிலும் கைவிடாதவனாய் உய்விப்பதையே நோக்குகிறவனாய்க் கொண்டு ஆபத்துக்களில் காப்பாற்றுபவனாம் ஆசாரியனாகிய தந்தை. எம்பெருமான் தவிர மற்றவர்க்குப பேச்சுப்படாமல் பரம்புருடன் உகந்து, கைக்கொண்டு போக, அகாரத்தில் நான்காம் வேற்றுமை வழியேயணைந்து இதற்கிடையூறாக ஆத்ம பரமாக்களுக்கு "நண்ணியும் நண்ண

கில்லேன்"என்கிறபடியே நடுவே யோருடம்பிற்கிடக்கும் நான்கு நாள் கழித்து, சூழ்விசும்பிற்படியே உடன்வழி சென்று விரஜையில் சென்று குடைந்தாடி என்கிறபடியே, "தெய்வத்தன்மை வாய்ந்த நூறு பெண்கள் மாலைகளைக் கையில் ஏந்தினவர்களாய், நூறு பெண்கள் அஞ்சனத்தைக் கையில் ஏந்தினவர்களாய், நூறு பெண்கள் வஸ்திரத்தைக் கையில் ஏந்தியவர்களாய், நூறு பெண்கள் ஸ்ரீசூர்ணத்தை கையில் ஏந்தினவர்களாய், நூறு பெண்கள் திருவாபரணத்தைக் கையிலேந்தியவர்களாய் மானேய் நோக்கியர் ஆன தெய்வப் பெண்கள் எதிரே வந்து முத்தனைய பிரம்ம அலங்காரத்தாலே அலங்கரிக்கின்றார்கள்" என்கிறபடியே, சர்வேச்வரனுக்கு இனிதாம்படி அலங்கரித்து இவர்களிடத்தில் அவர்களுக்குண்டான தொண்டு செய்வதில் உண்டான இச்சைக்கேற்ப திரள நின்று போற்றி பணிமாற அங்குள்ள பெண்கள் மங்கள தீபம் முதலியவற்றை ஏந்திக் கொண்டு எதிரே வந்து உபசரிக்குமாறு போலே புதிய இளமையினை எப்பொழுதுமே இயல்பாக உடையவர்களான வேறு தெய்வப் பெண்கள் சிலர் எதிர் கொள்ள, திருமகள் கேள்வனுடைய பேரின்பத்திற்கு நிலைக்களமான வைகுந்தம் அடைந்து அவனோடே கூடியிருந்து வாய்மடுத்துப்பெருங்களிச்சியாக அடைந்து அடியார் குழாங்களும் அவனுமாக இருக்கிற சேர்த்தியாக முழுமிடறு செய்து நித்திய சூரிகள் அனுபவிக்கிற போகத்தை, "முக்தன் எல்லாக் குணங்களையும் பரமாத்மாவோடு அனுபவிக்கிறான்" என்கிறபடியே எல்லாப் பொருள்கட்கும் புகலிடமான தொன்மை பொருந்திய கட்டிலிலே பாத பிடத்திலே அடியிட்டேறி, பரத அக்ரூர மாருதிகளைத்தழுவிய மணிமிகு மார்பிலே ஸ்ரீபரதாழ்வானையும் அக்ரூரனையும் திருவடியையும் ஆதரித்து அணைத்துக்கொண்ட கௌஸ்துபம் நிறம் பெறும்படியான அழகியதான திருமார்பிலே இறைமைத் தன்மைக்கு அடையாளமாக ஸ்ரீகௌத்துபமணியைப்போன்று இனிய ஒளியுடையதாய்க் கொண்டு அணைகிற ஆன்மாவிற்கு இனியதாய் தனக்குத்தானே அழகியதாய் கொள் கொம்பு பிரியில் தரைப்பட்டுக்கிடக்கும் 'கொடி போன்றவள்' என்கிற தன் தன்மையோடு கூடியதாய் வரும் பேச்சு வந்தேறியன்று இயல்பாகவே அமைந்தது.

## (வெண்பா)

**33. பரனும் பிறனும் உறைகோயில் ஓங்காரம்**
**பிறனாக் குருகூர்ப் பிறந்தோன் – பரனிவனில்**
**வேறிலன் மெய்ம்மைப் பொலிந்து நின்றூசனா**
**தேறுமெனத் தக்கா னிவன்.**

பரன் என்பது எம்பெருமான், எம்பெருமானுக்கு பிரதியாய் இருப்பவன் ஜீவன் (ஆன்மா). இந்த இருவருடைய பெயரான அகாரமும் மகாரமும் உகாரமும்,

அகாரத்தாலும், உகாரத்தாலும், சொல்லப்பட்ட பரனுக்கும் பிராட்டிக்கு
மகாரத்தை பெயராக உடைய ஜீவன் இருவருக்கும் அடிமை என்
பொருளைத் தருவதாய், இந்த மூன்று எழுத்துக்களும் சேர்ந்தே ப்ரணவ
ஆகையால், திருக்குருகூரில் ஆதிநாதப் பெருமானும் ஆதிநாத வல்லியு
ஆழ்வாரும் ஆகிய மூவரும் உறை கோயில் திருக்குருகூர். இதனா
திருக்குருகூரும் ப்ரணவத்திற்கு நிகரானது. குருகூரில் அவதரித்
நம்மாழ்வார், பரனோடு சொத்தாக ஒத்திருப்பதால் பொலிந்து நின்ற பிரானை
ஈசன் என்று ஆழ்வார் அருளியுள்ளதால் "ஈ சேசி தவ்ய" என்கிறப
உடையவன் உடைமை என்று சம்பந்தத்தால் வேறிலர் என தேறுதல் தக்கதா

## (கட்டளைக் கலித்துறை)

34. வன்பெரு வான்முதல் உய்ய உலகம் இனிமையுற
கண்வளர் கேள்வன் திருமகள் கட்கில் கடலிடங்கொள்
என்றும் இவற்றில் இவள்திறத் தென்கோலோ நேர்வதென
என்பிக் கின்ற வியூகநட் புண்மை முதன்மையிதே.

திருவரங்கத் எம்பெருமானுடைய ஐவகை நிலைகளையும் கண்
இந்த ஆழ்வார், வடியுடை வானோர் தலைவனே என்றும், கடலிடங்கொண்
கடல்வண்ணா என்றும், கட்கிலி என்றும், காகுத்தா கண்ணா என்று
திருவரங்கத்தானே என்றும் ஐந்து நிலைகளை பேசியதி
அர்ச்சாவதாரத்தில் எல்லா குணங்களும் பூர்ணமாக ஒளிவிடும் என்
இருந்தாலும் இவ்வாழ்வார் இந்த மூர்த்தியிடத்தில் வியூக சௌகார்த்த
(உலகை காத்தல் பொருட்டு சிந்தனை செய்வது) பிரகாசிப்பதாக அருளி
செய்கின்றார். திரு வுள்ளம் உகந்து, திருக்கண் வளர்ந்து அருளுகி
திருவாளனுடைய திருப்பதியான திருவரங்கம் ஐவகை நிலைகளை
வைத்துக்கொண்டு இவள் திறத்து என் சிந்தித்தாய் என்று சொல்லும்ப
உலகை காப்பதைப் பற்றி சிந்தனை பண்ணும் குணம் முதன்மையுடைய
என்கோலோ இவள் திரத்து முடிகின்றது என்று பாற்கடலில் யோக நித்தி
செய்யும் வியூகத்தின் குணமான சௌகார்த்தத்தை முதன்மையா
உடைத்தாய் இருக்கும் (உடையதாய் இருக்கும்) என்று.

## (அறுசீர் ஆசிரியர் விருத்தம்)

35. வாமனன் வந்து கோயில் கொண்ட
குறியவன்தான் குறுங்குடிக்கண்
நாமம் வைணவ நம்பி என்று
எதிவரனார் இடப்பெற்று

**பூமி மூவடி வேண்டி நின்ற**
**பேரழகின் பொலங்கழலால்**
**ஏமம் மிகுத்து நின்றிரந்த விபவம்**
**இங்கு பூரணமே**

விபவ மூர்த்தியான வாமணன் திருக்குறுங்குடியில் அர்ச்சாவதாரமாகக் கோயில் கொண்டிருந்தான். ஒருநாள் உடையவர் என்ற திருநாமம் உடைய இராமாநுஜரைக் கண்டு, "மண்மிசை பிறந்த நாம் பெருக்க முயன்று திருத்த முடியாத இந்நிலவுலகத்தவர்களை எப்படி திருத்தினீர்?" என்று கேட்க, "கேட்கும் கிரமத்தோடு கேட்டால் நான் சொல்லும் கிரமத்தோடு சொல்கிறேன்" என்று இராமாநுஜர் சொல்ல, எம்பெருமான் அவருக்கு ஒரு பீடம் கொடுக்க, இராமாநுஜர் அந்த பீடத்தின் அருகில் கீழ்நின்று தன் வலக்கையை அதன் மீது வைத்துக்கொண்டு பெரிய நம்பிகள் உபதேசிப்பதாக பாவனை செய்து கொண்டு துயத்தை உபதேசஞ்செய்து 'வைஷ்ணவ நம்பி' என்று தாஸ்யநாமம் இட்டார். அன்று முதல் வைஷ்ணவ நம்பி என்று பெயர்பெற்றான். அவனே விபவ அவதாரத்தில் மாபலி இடத்தில் சென்று "என் காலால் மூவடி மன்தா" என்று யாசித்து நின்ற பேரழைக்கண்டு அப்படியே தந்தேனென்று உதக பூர்வமாகக் கொடுத்தான் மாபலி என்பர். இதனால் இந்த விபவ அவதாரத்தில் லாவண்யம் பூர்ணம்.

## (அகவற்பா)

**36. பூரணம் கண்வலைப் பொருந்தாப் போலிகள்**
**வளர்த் தெடுப்பார்தம் கையில் இருந்து**
**தயிர்நெய் யமர்பால் அமுதமுண் டேநீயிர்**
**போற்றி ஓர்வண்ணம் திருந்த நுவலாது**
**என்பிழைக் கும்நீ யலையே நல்வளம்**
**துரப்பன் என்னும் அவற்றுக்கு முகந்து**
**சொல்லை எடுத்துச் சோர்ந்த வாறே**
**கற்பியா வைத்த மாற்றங்கள் கூப்பி**
**வணங்கப் பாடி ஆலியா அழையா**
**பராபி மானத்து ஒதுங்கின அன்றே**
**நம்பிக் கன்பர் தலைமீ துடிப்பொடி**
**உடையவர் உடையார் போல்வார் தன்மை**
**கிளியும்பூவை குயிலும் மயில் எனுமே**

"மாதரார் கயற்கண் என்னும் வலையில் பட்டு" என்கிறபடியே பெண்களின் கண்ணாகிற வலையில் அகப்பட்டு அழிந்து போகாமல்; "தாமரைத் தடங்கண் விழிகளின் அகவலைப் படுப்பான்" என்று பூரணனான ஸர்வேச்வரனுடைய தாமரைப் போன்ற திருக்கண்களின் நோக்காகிற வலைக்குள்ளே அகப்பட்டு, இதற்குப் பொருந்தாத மற்றவற்றைப் பொருந்தாப் போலிகளென விட்டு, "வளர்த்தனால் பயன் பெற்றேன் மடக்கிளியை" என்று எடுத்து வளர்த்தவர் கைகளிலிருந்து, "தயிர்ப் பழம் சோற்றொடு பாலடிசிலும் தந்து" என்றும்,"நெய்யமரின் னடிசில்" என்கிறபடி "உபதேக்ஷ்யந்திதே ஜ்ஞானம்" அவர்கள் உனக்கு ஞானத்தை உபதேசிப்பார்கள் என்கிறபடியே காலத்துக் கேற்றவாரும், நிலைமைக் கேற்றவாரும் தாராளமாய் அவர்களுக்கு பகவத் குணங்களாகிற உணவை அநுபவிக்கும்படி செய்து, "போற்றி யானிரந்தேன் புன்னை மேலுறை பூங்குயில்காள்" என்று அவர்களைப் பல்லாண்டு பாடி அவர்களை ஆசாரியனாக பாவித்து, ஆதரித்தாலும், "ஒருவண்ணம் சென்று புக்கெனக் கொன்றுரை யொண்கிளியே" என்று எனக்காக இறைவனிடம் சென்று ஒருவழியாக என் நிலைமையை அறிவி என்றால் அறிவிக்காமல், "என்பிழைக்கும் நீயலையே–நுவலென்ன? நுவலாதேயிருந்தொழிந்தாய்" என்று 'என்னுடைய ஆற்றாமையைப் பெருமானிடம் சீக்கிரமாய் அறிவியென்றால்' "சொல்பயிற்றிய நல்வளமூட்டினீர் பண்புடையீரே" 'எனக்குதவன் பெயரைச் சொல்லாதே' என்றால்"கண்ணன் நாமமே குழறிக் கொன்றீர்" என்கிறபடி எனக்கு உதவாத எம்பெருமானை எனக்கு ஞாபகமூட்டி துன்புறுத்துகிறீர்' உம்மை நான் வளர்த்து நல் விஷயத்தில் ஈடுபடும்படி செய்த எனக்கு நல்ல உதவி செய்கிறீர்கள், நல்ல பண்புதான்! என்று அவற்றைக் கடிந்தும்,

"இன்று நாராயணனை வரக்கூவாயேல் இங்குத்து நின்றும் துரப்பன்" என்று தன்னை ஆதரித்த சமயத்திலும் அநாதரித்த சமயத்திலும் இன்சொற்களும் வன்சொற்களும் வகுத்த விஷயத்தில் கோவமும் அருளும் பகவத் விஷயத்தில் விநியோகப்படுத்தலாம் என்னும் நினைவாலே உகந்து; சொல்லை எடுத்துத்தொடுப்பதற்கு இயலாமல் சோர்ந்தவாறே–அதாவது, அவன் திருநாமத்தை சொல் என்றால் நெஞ்சாழும் கண்சுழலும் என்றபடி சொல்ல பலமில்லாமையாலே துவள, ஏற்கனவே உமக்கு கற்பித்துள்ளேன் அவற்றைச் சொல்ல என்ன, அந்த கிளிகள் இறைவன் திருநாமத்தைச் சொல்ல "மடக் கிளியை கைகூப்பி வணங்கினாலே" என்று அவற்றைப் பராச்குச நாயகியான தான் கை கூப்பி வணங்கி சந்தோஷ மிகுதியாலே பாடியும் "ஆலியா அழையா" என்கிறபடி ஆனந்தத்தோடே போது போக்குபவர்களாய பராபிமானத்திலே ஆசார்யாபிமானத்திலே ஒதுங்கி "தென்குருகூர் நம்பிக் கன்பன்" என்கிறபடி, ஸ்ரீமதுர கவிகள் ஆசாரியரான நம்மாழ்வார் விஷயத்தில் அன்பே வடிவாக இருப்பர் "நாவலிட்டுழி தருகின்றோம்

நமன் தமர் தலைகள் மீதே" என்று யமன் போன்றோர் தலைகள் மீது காலடியிடும்படி செருக்கை யுடையராய் பாகவதவர்களுக்குப் பாததூளிபோலே நிரூபித்துத் தொண்டரடிப் பொடியாழ்வார், ஆழ்வான் ஆண்டான், எம்பார், அருளாளப் பெருமானெம் பெருமனார் முதலானவர்களை குணத்தைவிட்டு, கிளி, பூவை, மயில், குயில் என்று சொல்லும் என்றபடி.

(வெண்பா)

37. குயிலும் மயிலையும் தூதென் றனுப்பி
அயர்வின் விரோதம் அழிக்கும் – பயிற்சி
விருத்தம் ஒழிக்கும் கடனாசா மர்த்தியம்
நன்னகரில் வித்தீர் ணம்.

பாரங்குச நாயகி குயில் முதலான பறவைகளை தூதுவிட, அவைகள் சென்று சொல்லி அவன் வருமளவுக்கும் பொறுக்காத ஆற்றாமை மிகுதியால் பிரணய ரோஷம் உண்டாகி, அவன் வந்தாலும் இனி வேண்டாம் என்று ஊடல் பண்ணி சிற்றிலிழைக்க, அவன் வந்து இவர்களோடு கலப்பதற்குப் பல உபாயம் பண்ணியும் முகம் கொடாதிக்க, இவர்கள் இழைத்த சிற்றிலை தன் திருவடியால் கலைத்தான். அனைவர்க்கும் உபாயமாயிருக்கும் திருவடிகள் தனக்கும் உபாயமாய் பாரங்குச நாயகி "எங்கள் சிற்றிலும் யாமடும் சிறு சோறும் கண்டு முறுவல் செய்து நின்று அழித்தாயே" என்று சொல்லி கூடுவாளாகி, நாம் ஊடிய ஊடலைத் தீர்த்த இவன் முரண்பட்டவை எல்லாம் பொருந்த விடுவான் என்று நினைத்து, திருவிண்ணகர் பெருமானை நல்குரவும் செல்வம் என்று தொடங்கும் திருவாய்மொழியால் விரிவுற வாழ்த்தினார்.

(கட்டளைக் கலித்துறை)

38. கைய கழிந்தார்க்கு உணவுடன் நீருக்குறு நிதியா
வெய்ய தோராபத் துடன் தோழனுமா விழையுமிவ
னொய்ய உறவினன் தூய்மை நிகரில் புகழுடையோன்
செய்ய நற்பண்புகள் திண்ணம் புகுமூர் பெருமையிதே.

பராங்குச நாயகி இறைவன் திறத்தான விருப்ப மிகுதியால் தன்கையகத்தி ருந்த மற்றைப் பொருட்களெல்லாம் கைகழிய, திருக்கோளூர் வைத்தமாநிதி பெருமானே உண்ணுர்சோறும் பருகும் நீரும்தின்னும்

**வெற்றிலை எல்லாம் கண்ணன் என்று நிஷ்டையுடையவளா பராங்குசநாயகி, ஆபத்துக்குதவும் உடன் தோழனுமாய் எல்லா உறவுகளை முடையவனாய் விருப்புற்று நிகரில புகழான வாத்சல்ய குணத்தை உடையவனுமாய் உள்ள பெருமானைச் சென்றடைவது என்று, தான் தன் வழியே திருக்கோளூருக்குப் போய்விட, தாயானவள் இன்று எனக்குதவாதகன்றவள் தின்ன மென்னிளமான் புகுமூர் திருக்கோளூரே என்று உலகவற்கு உரைக்கும்படியான பெருமையுடையவள்.**

## (ஒன்பதின் சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்)

**39. பெரும்புறக் கடலிது அலைத்தும் ஆழ்ந்தும் ஓடுமிவ்**
**விடங்களில் பெறுவதற் கியல்வில பேதுறுவார்**
**விருப்புறு விசும்பும் பாற்கடல் கரந்தசில் லிடங்களோ**
**டயோத்தியும் காலமும் தேசமும் சேய்மைத்தே**
**பருகுபே ராவல்க ளுடையவர்க் சுவையிவை இயல்வில**
**பயனில சாககண் டத்துறு முலையேதான்**
**திருவுடைக் குணங்களால் நிரம்பிய மடுவொடு திருவுடை**
**நிறைநூல் இன்பமாரி மானமேயம் உயர்ந்ததே.**

எம்பெருமான் பரவாசு தேவனாக பரமபதத்தில் இருக்கும் நிலைை பெரும்புறக் கடலென்பார்கள். அந்த மூர்த்தியும் பாற்கடலுள் பள்ளிக் கொண்டுள்ள வியூக மூர்த்தியும், சேதந அசேதநங்களனைத்திலு அந்தர்யாமியாக உறைபவனும், காகுத்தன் கண்ணனாக வரும் அவதா நிலையுமாகிய நான்கு நிலைகளிலும் பகலோலக் கமிருந்து காரிய மந்திரிந்து கருப்புடுத்தி நகர சோதனை செய்து வேட்டையாடி (ஆராமங்களில் விளையாடும் ராஜநீதி). இவற்றில் பரவாசு தேவ மூர்த்தியும் பாற்கடல் மூர்த்தியும் தூரதேசத்திலிருப்பவர்கள். விபவ அவதாரமூர்த்தியு காலங்கடந்தது. அந்தர்யாமித்துவமோ எவராலும் காண முடியாதநிலை. ஆக இந்த நான்கு மூர்த்தி இருந்தும் உலகவர்க்கு காண இயலாது பயனற்றன முதுவேனில் காலத்தில் குளிர்ந்த மடுவில் சம்சார தாபத்தால் தவிக்க பெற்றவன், நீர்நசை மிகுந்து பருகுவதற்கு நீரைக் காணாது தவிக்கப்படுவத போன்றும், ஆட்டின் கழுத்தில் உள்ள முலைக்காம்புகள் போல பயனற்றவை இந் நிலையில் கல்யாண குணங்களால் நிரம்பிய பெருக்காற்று வெள்ளத்தில் தேங்கிய மடுவோடு ஒத்தது அர்ச்சாவதாரம். மேற்சொல்லப்பட்ட நான்கு மூர்த்திகளையும் அறிவதற்குப் பிரமாணமாயிருப்பது, பரவாசுதேவனைச் சொல்லப்பட்டது வேதம், வியூக மூர்த்தியைப் பற்றி பேசுவது பாஞ்சராந்திரம், விபவ அவதாரங்களைப் பேசுவது இதிகாச புராணங்கள்

அந்தர்யாமியைப் பற்றி பேசுவது மனுநீதி என்னும் நூல்கள். காணமுடியாததைப் பற்றி பேசுவதால் மேற்சொன்ன பிரமாணங்கள் நான்கும் குறைவுடையதே. தேங்கிய மடுக்களுக்கு ஈடாக சொல்லப்பட்ட குணங்களால் பூர்ணமான அர்ச்சாவதாரத்தைப் பற்றி பேசுவது திருவாய் மொழியாம். பிராமணம் என்பது ஒரு விஷயத்தைச் சான்றுகாட்டிப் பேசும் நூல். பிரமேயம் அந்த நூலால் சொல்லப்பட்ட விஷயங்களாகும். மேற்சொல்லப்பட்ட நான்கு பிரமாணங்களாலும் பேசிய விஷயங்களை நான்கு மூர்த்திகளும் குறைவுடையனவே. அஞ்சாம் பிரமாணத்தால் பேசப்பட்ட அர்ச்சாவதார மூர்த்தியே உயர்ந்தது. அதே போன்று அந்த மூர்த்தியைப் பற்றி வாழ்த்தி பேசும்படியான திருவாய்மொழியும் உயர்ந்தததேயாம்.

## (அகவற்பா)

40. உயர்வற உயர்நலத் தொண்பொருள் பகலிடை
அயர்வறும் அமரர்கோன் மூதுவர் தியாகிகள்
கணாதியர் துவார பாலனர் கணத்துடன்
சோர்வர செங்கோல் செலுத்திரா சநீதி
சனக சநாதி சீரியர் கூட்டத்து
காப்புடை காரியம் மந்திரித் தொழுங்குற
ஒல்வன அல்லன காணுமி ராசநீதி
சீரிய உபய விபூதியில் செய்தியை
கருப்புடை உடுத்தி ஒருவரும் காணாது
உழற்றுஉழன்று காணுமி ராசநீதி
மீனம் கூர்மம் வராகம் வீறுசால்
நார சிங்கம் நன்மதி வாமனன்
மூவுரு வினிரா மன்கண் ணன்கற்கி
அரக்க ரசுரர் நாத்திகர் புறத்தோர்
வெறுப்பொடு வேட்டையா டுமிரா சநீதி
செய்ததிண் மதில்திரு விண்ணகர் சேர்ந்தவன்
பெருந்தே வுடையமூ வுலகில் பெய்த
காவெனும் அரங்க முதலா ராமங்கள்
ஒண்டோடி யாளெனும் திருமக ளோடு
விளையாடு வீவிலி ராச நீதிகள்

**மனக்கண் கண்டு களிக்கும் வாய்ப்புடை**
**உம்பர்தம் உலகு நமக் கொப்புண்டே?**
**வீவிலம் மிராச நீதிவீ றுடையதே.**

கதிரவன் ஒளிக்கு முன் மற்றை ஒளிகள் இருந்தும் இல்லையாவது போல, உலகில் மற்றுமுண்டான ஆனந்தமிருக்க இறைவனுடைய ஆனந்தத்திற்கு முன் இல்லையாவது போல் உயர்வற உயர்ந்த ஆனந்தமுடைய பரம்பொருளான பரவாசு தேவனுடைய பேரொளிப்பிழம்பான பரமபதத்தில், அறிவின்மையின் வாசனை கூட இல்லாது நிரந்தரமான பேரறிஞர்களான விஷ்வசேனர் முதலிய நித்யசூரிகள், சம்சாரத்தை அறத்துறந்து விட்டு வானோர்க்குலம் புகுந்த முக்தர்கள், கணாதிபர், துவாரபாலகர், கணம் கணமாக வாழ்த்தி ஸேவிக்கும்படியாக செங்கோல் செலுத்தும்படியான ராஜ நீதி ஒன்று. சனகாதிகள் முதல் ஸ்வேதத்தீப வாசிகள் கூடியிருந்து வாழ்த்தும்படியான பாற்கடலில் மந்திராலோசனை அதாவது ஜகத் ரட்சனை சிந்தனை பண்ணுகின்ற வியூக மூர்த்தி ஒரு ராஜநீதி.

கருப்புடை தரித்து நகரசோதனைச் செய்யும் அரசர்கள் போல், தன்னால் வியாபிக்கப்பட்ட பொருளை மறைந்திருந்து நகர சோதனை பண்ணுகிற ஒரு ராஜ நீதி.

மச்சம், கூர்மம், வராகம், நரசிங்கம், வாமனம், மூவுருவின் ராமன், கண்ணன், கல்கி என அவதரித்து அரக்கர், அசுரர், நாத்திகர் மற்றும் புறத்தோர் உலக நலத்தை பாழ்படுத்துவார். இவர்களைச் சினத்தோடு வேட்டையாடும் ஒரு ராஜநீதி.

"செய்த திண்மதில் சூழ் திருவிண்ணகர் சேர்ந்தபிரான் பெய்த காவு கண்டீர் பெருந்தேவுடை மூவ்வுலகு" என்கிறபடி திருவரங்கம் முதலான ஆராமங்களான பூஞ்சோலைகளில் ஒண்டொடியாள் திருமகளும் தானுமாக விளையாடுவது ஒரு ராஜ நீதி. இந்த ராஜ நீதிகளை எல்லாம் சான்றோர்கள் அருளிய நுல்களைக் கொண்டும் ஆசாரியர்கள் உபதேசங்களைக் கொண்டும் மனக்கண்ணால் கண்டு களிக்கும் முமுக்ஷுக்களாகிய எம்போல்வார்கள வாய்க்கப் பெற்றவர்கள். இத்தகைய நாம் இருக்கும் இருள்தருமாஞாலத்திற்குத் தெளிவிசும்பு திருநாடு ஈடாகாது என்னும்படியான வீறுடைய ராஜ நீதி ஒன்று.

## நூற்பயன்

(எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்)

திருமகள் கேள்வன் திருவருள் நலத்தால்
மயர்வற மதிநல மருள
அரும்பொரு ளனைத்தும் ஒருங்குடன் அமுத
கடமென ஆயிரம் விரித்தான்
குருகையில் வருநல் பிறவியில் துறவிதன்
நான்மணி மாலையாம் குளிகை
இருள்தரு ஞாலம் தெருள்தரு விசும்பா
வேகடம் செய்வதொன் றன்றே.

திருமகள் கேள்வனாகிய ஸ்ரீமந் நாராயணன் தன் திருவருள் வயப்பட்டு தென் திசையில் தன் திருக்கண் பார்வை செலுத்த, ஜாயமான காலத்தில் குருகூர் சடகோபன் மேல் வீழ்ந்து, அதனால் அறிவின்மை அறத்தொலைந்து ப்ரீதி ரூபமான ஞானம் உண்டாகப் பெற்று, திருக்குரு கூரில் வந்தவதரித்த பிறந்த போதே துறந்த சடகோபன் விஷயமாக "நான்மணிமாலை" என்று சொல்லப்பட்ட, ரசகுளிகை இயல்பில் இருந்து இருள்தருமாஞாலமான இந்த லீலாவிபூதியை தெளிவிசும்பாம் நித்திய விபூதியாக மாற்றும் தகுதியுடையதொன்றாகும்.



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆசார்ய நூற்றந்தாதி

## காப்புச் செய்யுள்

**யாதும் அறியேன் அதையே அறிந்தன்று**
**போதரா யென்றே பொருளாக்கும் – நீதியான்**
**ஆசையால் தாளினையே காப்பா அறிந்தின்று**
**பேசுகின்றேன் வாஞ்சைவரப் பெற்று.**

உய்வு பேற்றுக்குரிய யாதொன்றும் அறியாத 'அறிவிலி' என்று என்னையறிந்து, அதுவே காரணமாக அடியேனைத் தன்பாலழைத்து மெய்யுணர்வு இன்மையால் அசித்தைப்போல (அறிவற்ற ஜடப்பொருளைப் போல) கிடந்தவனை, மெய்யுணர்வை முற்றும் போதித்து பொருளல்லாத என்னைப் பொருளாக்கி, சத்தை–யுண்டாம்படி செய்த ஆசாரியன் செயலை இன்றாக அறிந்து மிக்க பிரேமையுற்ற அடியேன், 'ஆசாரிய நூற்றந்தாதி' என்ற வெண்பா யாப்பினால் வாஞ்சையே வடிவாக ஆசாரியன் திருவடிகளை முன்னிட்டுக் கொண்டு இந்நூலை இயற்றுகின்றேன்.

## நூல்

**1. சீரார் வநசச் செழுங்கடல் வந்தமுதின்**
**ஏரார் நிறைபொருள்மார் பேய்ந்துறையும் – ஆரா**
**வமுதீ யமுதமே வேறன் றயிந்தை**
**எமையாளும் பாடியன்தாள் இங்கு.**

**உரை:**

எம்பெருமான் திருக்கண் வளர்தலால் செழுமையுற்ற பாற் கடலில், (மஹாலக்ஷ்மி) தான் தோன்றுவதற்கேற்ற சிறப்புற்றத் தாமரை மலரில் அமுதத்தோடு வந்தவதரித்து, எல்லாவற்றாலும் அழகுமிக்க ஒத்தார் மிக்காரையில்லாத பரம்பொருளான திருமாலின் திருமார்பில் இறையும் அகலாது, பொருந்தியுள்ள ரூபத்தாலும் குணத்தாலும் பேரழகு வாய்ந்த பெரியபிராட்டியார், அமுதந்தவிர்த்தப் பேறு என்னலாம்படி

எம்மையாளும் திருவயீந்திரபுரம் கச்சிக் கிடாம்பி பாஷ்யமாசாரிய ஸ்வாமிகளின் திருவடியைப் பற்றுக் கோடாகப் பற்றி உய்யும்படி அடியேனுக்கு பேரருள் செய்தாள்.

**2. இங்கே திரிந்தே எழுபிறப்பும் தீர்ந்தொழிந்தேன்**
**சிங்கப் பிரான்சீர்மை ஆய்ந்தறிந்தேன் – பொங்கும்**
**கருணைக் கடலமு துண்பேன் அயிந்தைத்**
**திருவன் திருவடிசேர்ந் தின்று.**

இருள்தரு மாஞாலமாகிய இவ்வுலகத்தில் மனம்போனபடி திரிந்த அடியேன் திருவயீந்திரபுரத்தில் வாசஞ்செய்யும் ஸ்ரீமத் பகவத் கைங்கர்யமாகிய செல்வம் நிரம்பப்பெற்ற ஸ்ரீமத் கச்சிக் கிடாம்பி பாஷ்யமாசாரிய ஸ்வாமிகளின் திருவடிகளை, அவரருளால் இன்று சேர்ந்து தேவ, மனித, விலங்கு, பறப்பன, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் ஆகிய ஏழுவகைத் தோற்றங்களாகப் பிறக்கும் பிறவியொழிந்து, சிங்கப்பிரான் புகழை ஆராய்ந்தறிந்து ஸ்ரீவைகுண்டமாகிய திருநாட்டிற் சேர்ந்து அளவில்லாமல் பொங்கி வழியக்கூடிய ப்ரமபதநாதனின் கருணையை அநுபவிப்பேன்.

**3. இன்றுநாளை யென்றறியேன் கங்குல் பகலறியேன்**
**பொன்றுமுட லென்றுநா னென்றறியேன் – பொன்றுவிக்கும்**
**தீதறியேன் யாதறியேன் தேரத் தெரிந்தென்னை**
**ஓதுவித்த தொண்பொருள் ஒன்று.**

இன்றென்றும் நாளையென்றும் உலகத்தவர் சொல்லும் கால வேறுபாட்டையும் இவற்றைச் சார்ந்து நிகழும் நிகழ்ச்சிகளின் வேறுபாட்டையும் இவ்வாறே இரவு பகலின் வேறுபாட்டையும் அறியேன். எடுக்கும் பிறவிகள் தோறும் அழிந்து படும் உடல்கள் அவ்வாறு அழியாத நிலைபெற்ற உயிர்களின் நிலைகளையும் அறியேன். அழிவுக்காரணமான அடியேனை நன்கறிந்து இந்நிலை போய் எல்லாவற்றையும் தெளிய அறியும்படி ஒப்பற்ற பொருள் ஒன்று ஓதுவித்தது.

**4. ஒன்றுதான் போதமுநி வேதமுநி நாதமுநி**
**நன்று நலந்தீதுங் காட்டுமுநி – நன்றும்**
**சிவந்தவாய் செம்பவளம் கண்கமலம் ஒன்மை**
**உவந்துளத்துப் பாடியனென் றோர்.**

றந்தாதி

ஒதுவித்த அழகிய பொருள் யாதெனின்? மனனஞ் செய்து மெய்யுணர்வை நிரம்பப் பெற்றதும், இதைப்பிறருக்கு அறிவிப்பதையே தொழிலாகவுடையதும், நல்லொழுக்கத்தில் ஏவுவதும் மற்றுள்ள நல்லதும் தீயதும் காட்டக்கூடிய நன்கு சிவந்த தாமரைப்போன்ற வாயையும் தாமரைப் போன்ற இதழ்களையுடையதும் அழகிய கைகளையுடையதும் எல்லார் திறத்தும் நன்மையே வேண்டுவதுமான பாஷ்யமாசாரியரே யாகுமாம்.

5. ஓரடி முந்தமற் றோரடி முந்தவதின்
ஈரடியும் சேர்ந்தென்னை ஏற்பதே? – ஈரடியுஞ்
சேர்ந்திணைந் தன்றன்றே சேமமா ம்ஆறுபயன்
ஓர்ந்திணைந் துள்ளதெம் பால்.

அடியேனை ஏற்பதற்காக ஓரடிமுற்பட்டு வர, அதைக்காட்டிலும் இன்னொரு திருவடி முற்பட, இப்படி ஈரடியும் சேர்ந்தென்னை ஏற்றது வியப்பன்றோ? இதன்றி இந்த இரண்டு திருவடிகளும் சேர்ந்தே சாதனமும் பயனுமாகும் என்பதை யானறியேன்.

6. எம்பெரு மானார் இசைத்ததாக் கேட்டதுண்டு
நம்பும் படியொன்றும் நானறியேன் – வம்பெதற்கு?
வீடில்நாள் மூன்றில் முமுச்சுபடி மெய்ப்பித்த
பாடியனே பெற்றேன் பயன்.

உஜ்ஜீவனத்துக் கேதுவாக எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யம் அருளிச் செய்துள்ளதாகக் கேள்விப்படுகிறோம், அதை நேர்கண்டறிந்ததில்லை. ஸ்ரீபாஷ்யத்தில் சீக்கிரமாகப் பலப்ராப்தி உண்டு, இல்லையென்கிற வம்பெதற்கு? நிரந்தரமாக மூன்று நாட்களில் முமுக்ஷுப்படி என்கிற திருமந்திரார்த்தத்தை உள்ளவாறு கேட்பித்த ஸ்ரீமத் பாஷ்யமாசாரிய ஸ்வாமிகளையே அடியேற்குப் பயனாகப் பெற்றேன்.

7. பயனுற்ற தொன்றன்றே பாவிரித்தான் மாறன்
உயர்வசந பூடணம் ஓதி – நயந்துரைத்தான்
தத்துவ மூன்றின் தகவனைத்தும் தானோக்கி
வித்தகன்நீ! யென்றான் வியந்து.

ஸ்ரீமத் பாஷ்யமாசாரிய ஸ்வாமிகளைப் பயனாக மட்டுமோ பெற்றோம்? இவரால் மாறன்கலையாகிற பகவத் விஷயத்தை உரைக்கப்பெற்றேன்; ஸ்ரீவசன பூஷணம் உரைக்கப் பெற்றேன்; இங்ஙனே தத்வத்ரயமும் அருளப் பெற்றேன்; இவற்றைக் கேட்ட தன்மையைக் கண்டு வியந்து 'நீ வித்தகன்' என்று அவரால் அருளப்பெற்றேன்.

8. வியந்தான் உகந்தான் விரிகமலம் நோக்கி
பயந்தான் பரன்தான் பணியை – உயர்ந்தோர்
இணைந்தா மரைத்தாள் இசைத்தான்தன் பொன்தான்
பிணைத்தான் பீழை தகர்த்து.

ஸ்ரீ பாஷ்யமாசாரியன், அடியேனை வியந்தான், உகந்தான், தாமரைக்கண்களால் விரியக் கடாக்ஷித்தான். அடியேன் பாலுள்ள குறைகளைப்போக்கி உயர்ந்தவர்களான மெய்யடியார் திருவடியிணையடியை வணங்கும்படி இசைவித்து, தன் அழகிய திருவடிகளில் இருத்திக் கொண்டான்.

9. தகர்த்தேன் மடமை வினைப்படலம் தாக்கி
உகக்கடிந்தேன் ஊனைக் கழகம் – புகுந்தேன்
நனிமாக் கலவியின்பம் நாளும் நுகர்வேன்
இனியனெனும் பாடியன்தாள் ஏய்ந்து.

இனியவரான ஸ்ரீ பாஷ்யமாசரியன் திருவடிகளைப் பொருந்தியதால் அறிவின்மையை அறத்தொலைத்து, அதன் காரியமான பாபசமூகத்தையொழித்து, அதின் கார்யமான உடல் தொடர்பை யொழித்து, இறைவன் திருவடிகளைப்பிரியா மெய்யடியார் கூட்டத்து புகுந்து அளவிலா இன்பம் நாளும் நுகர்பவனாயினேன்.

10. ஏய்ந்த குருகூரன் தன்தாள் இணையடியே
வாய்ந்த சரணா வரித்தன்றே – நீந்திப்
பிறவிக் கடல்கடந்தீர் பேதை எனையும்
உறவைப்பீர் உந்திருத்தாள் உய்த்து.

பாஷ்யமாசாரிய ஸ்வாமிகளே! திருக்குருகூரில் அவதரித்து பிறந்த பொழுதே துறவியான நம்மாழ்வாரின் திருவடிகளினையே தஞ்சமாகக் கொண்டு, அவரருளால் பிறவிக்கடல் கடந்தீர். அறிவிலியான அடியேனையும் தேவரீர் திருவடிகளில் பொருந்தச்செய்து, அவ்வாறே பிறவி தொலைத்து பேரின்பமுற்று வாழும்படி செய்வீராக!

**11. உய்த்தும் கடைக்கணித்தும் ஒப்ப நினைந்திட்டும்**
**எய்த்த யிதுதன்னைப் பற்றாசா – மெய்த்தவுரை**
**எட்டெழுத்தும் முப்பத் திரண்டெழுத்தும் ஐயைந்தும்**
**தொட்டுரைத்த ஒன்றே துணை.**

அடியேன் அறிவிலியாய் உய்யும்வழி யறியாமல் பிறவிக்கடலில் ஆழ, அதையே காரணமாகக்கொண்டு பாஷ்யமாசாரியர் என்னை நினைத்து தனமுன் நிறுத்தி, கருணைப்பூத்தக் கண்களால் நோக்கி, மெய்யடியார் திரளில் சேரும்படி செய்து, மெய்ப்பொருளான எட்டெழுத்துள்ள திருமந்திரம், இருபத்தைந்து எழுத்தான த்வயமந்திரம், முப்பத்திரண்டெழுத்தான சரமச்லோகம் இவைகளின் அர்த்தங்களைச் சுட்டிக்காட்டி நெஞ்சில் பதியவைத்த அவரருளே அடியேனுக்கு உஜ்ஜீவனத்துக்குத் துணையாகும்.

**12. துணைவனே துன்பப் பிறவிக் கடல்நீர்**
**புணைவனே பொய்ம்மை இருள்தீர் – இணையில்**
**கதிரவனே பூரியர் சுற்றங் கழற்றும்**
**சதிரனே தந்தருள்வாய் மற்று.**

துணைவராயும், துன்பமேயான பிறவிக்கடலைக் கடத்தும் நாவாய் போன்றவராயும், பொய்யறிவாகிய இருளை நீக்கும் சூரியனாயும், தகவு இல்லாதவர்களின் உறவை நீக்கும் சதுரராயும் உள்ள தேவரீர், உய்வு பேற்றுக்குத் தக்கதை அடியேனுக்கு உகந்து அருள் செய்வீராக.

**13. மற்றோர் பொருளுளதே? மாயை அறத்தொலைத்து**
**தெற்றத் தெளிவித்துச் சேமநல்கி – பிற்றைப்**
**பிறப்பொழித்துப் பெம்மான் கழலிணைத்து நாளும்**
**உறுமின்பம் உண்பிக்க வே.**

ஆசாரியன் அருளைக்காட்டிலும் பிறிதொரு சிறந்த பொருள் அடியேற்குளதோ? பிறவிக் கேதுவான பிரகிருதி தொடர்பை நீக்கி, அறிவின்மையாகிற மயக்கத்தைப்போக்கித்தெளிவைத் தந்து, இவ்வளவிலேயே ஆனந்தமுறச் செய்து முகுந்தனான இறைவன் திருவடிகளில் சேர்த்து மேலுள்ள காலமெல்லாம் பேரின்பம் நுகரும் வாய்ப்பினை அடையும்படி செய்தார்.

**14. உண்பித்தான் ஒண்மை உலகாரியன் ஓர்ந்தருள்செய்**
**விண்புகு விஞ்சுசுவை முத்தர்தம் – பண்பிதனை**
**தக்கவா றுண்டு தரமுயர்ந்து நிற்கின்றேன்**
**மிக்கவநான் எவ்வெவர்க்கும் மேல்.**

உலகோர்க்கு உய்யும் வழியைத் தந்தவரான வள்ளல் பிள்ளை லோகசாரியர், தாம்மிகவுணர்ந்து அருளிச் செய்த ஆகாசத்தைப் போன்று உயர்ந்த சுவையுடைய முத்தர்க்கு இன்பத்தை வழங்கக் கூடியதான ஸ்ரீவசநபூஷணம் என்ற நூலை அமுதாகத்தேர்ந்து அநுபவிக்கும்படி செய்தார். பாஷ்யமாசாரியரும் அதை அடியேனுக்கு உபகரித்தார். அடியேனும் அதன் தரமறிந்து உள்ளத்திருத்தினேன். இதனால், நான் உலகில் எவருக்கும் மேன்மையனாவேன்.

**15. மேலா மிகுபுகழ்ப் பாடியன்தன் மெய்வழிசால்**
**தோலா அருள்தந்த தொல்வழியில் – நாலாம்**
**வழியே எளிய உரிய வழியா**
**அழிவிலா ஈரியல்புக் காம்.**

மேலானார் புகழும் புகழ்களுக்கெல்லாம் மேம்பட்ட புகழாலரான பாஷ்யமாசாரியர், தம் மெய்யுணர்வால் ஆய்ந்து, முக்தி நெறியான நான்கில் எல்லா நெறிகளைக்காட்டிலும் மிகஎளியதும் அழிவற்ற ஆத்ம பரமாத்மாக்களுடைய உண்மை நிலைமைகளுக்குப் பொருந்தியதும் எவரும்மேற்கொண்டொழுகுவதற்கு உரியதாகிய மிகச் சிறந்தது சரணாகதி உபாயமேயாகும் என்றார்.

**16. ஆமா றறிவுடைய ராவ தரிதன்றே**
**தேமா மலர்மா திருவருள்சார் – நாமடந்தை**
**நாவன் திருவயிந்தைப் பாடியன் நல்குதல்போல்**
**யாவனே ஆரியர்சார் பின்று.**

றந்தாதி

தன்னையடைந்தாரை உய்விக்கத்தக்க அறிவுடையராக்குவது அரிதே யன்றோ இவ்வுலகின் நிலை? இப்படியிருக்க, தேனொழுகும் தாமரை மலரைப்பிறப்பிடமாகவுடைய திருமகளின் அருளைப்பெற்ற கலைமகள் வாழும் திருநாவைவுடையவரான திருவயீந்திரபுரம் பாஷ்யமாசாரியரைப் போல் அடைந்தாரைக்காக்கும் இயல்புடையவர் எவரே உளர்?

17. இன்றே பிறந்தேன் பழுதே யிழந்தநாள்
குன்றோ? மலையோ? கொழுங்கடலோ? — ஒன்றறியேன்
பாடியன் வந்திலனேல் பாழன்றே? மேல்நாளும்
தேடிவந்தான் ஏதிலருள் செய்து.

மாறிமாறிப்பலப் பிறவிகளையடைந்து நின்றகீழ் நாள்களெல்லாம் பல கல்பங்களாக கழிந்தது மட்டுமின்றி ஒரு குன்றினளவு, பெரியமலையளவு பெருங்கடலினளவு என்றளவிட முடியாதக் காலமெல்லாம் எனக்குப் பழுதேயாயின. பாஷிய மாசாரியர் காரணமற்ற கருணையால் அடியேனைத் தேடிவந்து, எனக்கருள் செய்த இந்நாளே பயனுள்ள பிறவியடைந்தேன் என்றவாறு.

18. செய்தநலன் ஈதென்று சிந்திக்க ஒல்லுமே?
மெய்யுணர்வின் மேம்பொருளைச் சேர்நெறியும் — பொய்மையைப்
போக்குதலும் மெய்ம்மை மிகவுணர்த்தி பொன்கழலில்
வீக்குமெய்ம்மைப் பாடியன்மெய் யின்று.

பாஷ்யமாசாரியர் செய்த ஆனந்தத்துக் கேதுவான நன்மைகளை மனத்தால் நினைக்கவும் முடியுமா? மெய்யுணர்வின் தொடர்பால் அடைதலுக்குரிய பரம்பொருளை அடையும் வழியையும், அதற்குத் தடையானப் பொய்யுணர்வைப் போக்குதலும், தன்னுடைய அழகிய திருவடிகளில் சேர்த்துக் கொண்டு மெய்யறிவை நன்கு உணர்த்தி அருள் செய்த இவையனைத்தும் மெய்யேயாகும்.

19. இன்றன்றே யானும் இலன்போய் உளனானேன்
என்றடி யேனை இருந்துகேள்நீ — என்றதுமே
எண்பெருக் கந்நலத் தொண்பொரு ளாயினன்
திண்கழற் பாடியற் சேர்ந்து.

அடைந்தாரைக் கைவிடாது எம்பெருமானிடத்தில் சேர்க்கும் திருவடிகளையுடைய பாஷ்யமாசாரியர், அடியேனை அழைத்து எதிரிலிருத்தி முமுக்ஷுப்படியைப் போதித்தலுமே, எண்ணிக்கைக்கு அப்பாற்பட்ட அளவிடமுடியாத ஆனந்தத்தையுடைய இறைவனோடு சமதர்மத்தை அடையத்தக்க இன்றே, அசத்தாயிருந்த அடியேன் சத்தானப் பொருளானேன் என்றவாறு.

20. சேர்ந்தேதி லின்னருளே பொய்ம்மையைத் தீர்த்தருள
ஆர்ந்த மதிநலம் அன்றடைந்து – ஓர்ந்தீங்
குபய விபூதி ஒழிவி லுடையான்
அபயமிங் குற்றே னது.

ஸ்ரீமத் பாஷ்யமாசாரிய ஸ்வாமிகளின் வேறு காரணமற்ற இன்னருளால் அடியேனைத் தன்பால் சேர்த்து நிறைந்த பக்தியும் அறிவும் உண்டாகும்படி பண்ணி, ஒரு சிறு துணுக்கும் தன்னை விட்டு நீங்காது இரண்டுவிதமான உலகத்திலிருக்கும் அனைத்தையும் தனக்குடமைப் பொருளாகக் கொண்டிருக்கும் எம்பெருமனால் அஞ்சேல் என்றருளப் பெற்றேன். ஈதன்றே அடியேனுடைய பாக்கியம்!

21. அதன்றே? ஒழுக்கம் இலதுண் டறிதல்
அதன்றே? மெய்ஞ்ஞானம் அறிதல் – இதன்றே?
முழுமையன் பாடியன் முந்துற்ற வென்போல்
விழுமயரின் மிக்கா ரெவர்?

அறிவொழுக்கங்களால் நிறைவுபெற்ற குருவை அடைவதே உய்வு பேற்றிற்குரியதாகும். இதனை நாம் அறிவது இயலாதே. இது உலகின் நிலை. அப்படியிருக்க அறிவற்றவனான அடியேன் இவற்றை எப்படி அறிவேன்? அறிவொழுக்கங்களால் நிறைந்த பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளே அடியேன் இருக்குமிடம் தேடிவந்து இன்னருளைச் செய்தார். இதனால் அடியேனைப்போல் சிறப்புடையாரின் மிக்கவர் எவர்?

22. எவரே? விடம்போல் இருந்துடன் நாளும்
பவரேகைப் பண்ணும் பரிசும் – அவரே
கழற்றுந் திறனறிவார் பாடியன் தானே
கழற்றுங் கருணைமிகக் கொண்டு.

றந்தாதி

தீய செயலைப்புரிவதற்குக் காரணமான நம்முடைய உடலானது விஷம்போல் நாள் தோறுமிருந்து நம்மை நலிகின்றது. இப்படிப்பட்ட உடற்பிறவியை நீக்க வேண்டுமானால் விரோதி ஸ்வரூபத்தை நன்றாக அறியவேண்டும். அவ்வாறு அறிந்து, அவ்விரோதியை பொக்குவதில் வல்லவரான பாஷ்யமாசாரியர், தன் கருணையாலே அடியேனுடைய விரோதியை போக்கி என்னை ஆட்கொண்டர்.

**23. கொண்டான் நிரம்புங் குறைக்கொள்ளி நானாவேன்**
**மண்டிய தீவினையேன் மாலுடையேன் – கொண்டான்**
**உலகில் நிகரில்லாப் பாடியன் ஒன்றோ**
**அலகில் அருளால் அணைத்து.**

இவ்வுலகினில், எல்லாவாற்றாலும் நீசைதை நிரம்பிய குறைக் கொள்ளியானக் காரணத்தினால் மொய்த்த தீவினையுடைய-- வனானேன். இத்தகு தீவினையேனையும் கைக் கொண்டு ஒப்பற்றக் கருணையுடையவராக ஸ்ரீமத் பாஷ்யமாசாரிய ஸ்வாமிகள் அளவற்ற அருளால் அடியேனை அணைத்துக்கொண்டார்.

**24. அணைவான் அணைத்தார் பெரிய உடையார்**
**இணையில்லாச் சீரார் இறையை – அணைத்தான்**
**கருணைக் கடல்போலுங் கண்ணென்னுந் தோளால்**
**பரிவுமிகும் பாடியன்வந் தின்று.**

முத்தனாய் வருமவனை அணைத்துக்கொள்ளும் அளவற்ற கல்யாண குணங்கள் நிரம்பிய ஒப்பற்றவனான சக்ரவர்த்தித் திருமகனை (இராமனை) பெரியஉடையார் என்ற ஜடாயு அளவற்ற ஆர்வத்தால் அணைத்தார். அதுபோல், பெருங்கருணைக்கடலான பாஷ்யமாசாரியர், பவித்திரத்தை உண்டாக்கும் கண்ணென்னும் தோளால் அடியேனை அணைத்துக் கொண்டார்.

**25. இன்றன் றிறைவன்பா லுள்ளவுற வொன்பதும்**
**ஒன்றும் உணரோம்யாம் தானறிவான் – இன்றயிந்தை**
**பாடியன்பால் சேர்த்தும் பரிவின் முழுக்களித்தான்**
**ஈடிலம்யாம் என்றுலகின் தேர்வு.**

அநாதிகாலமாக எம்பெருமானுக்கும் நமக்கும் உள்ள உறவு ஒன்பதையும் நாம் அறியோம். முற்றுணர்வினாகிய எம்பெருமான் தானறிவான். இத்தகு உறவின் காரணமாக அடியேனை உய்வுபெற நினைத்து தகுந்தவரான பாஷ்யமாசாரியரிடம் பரிவோடு சேர்த்து, மெய்யுணர்வை முழுக்க வுண்டாக்கினான். இதனால், இன்று உலகவர் இவன் ஒப்பற்றவன் என்று நிர்ணயிப்பதற்கு ஏதுவானேன் – என்றவாறு.

**26. தேர்வ லிதமென்னாச் சிந்தியேன் பாவியேன்**
**ஊரோ டுழல்வேனைப் பாடியனாம் – நாரணன்**
**மந்திரத்தின் நுண்பொருளை மாட்டிச் செவிவழியே**
**தந்தருள் செய்தான் நேர்ந்து.**

ஆத்மாவாகிற நமக்கு நன்மையைச் சிந்திக்காமல் உண்டியே உடையே என்று உகந்தோடும் ஊரவரோடு உழல்கின்ற பாவியான என்னை, பாஷ்யமாசாரிய ஸ்வாமிகள் அடியேனுக்கு இதம் செய்வதற்காக, என்னை வளைத்துப்பிடித்து நாரணன் மந்திரமாம் எட்டெழுத்தின் உட்பொருளை செவியின் மூலம் உபதேசித்தருள் செய்தார்.

**27. நேர்ந்து நினைந்தும் வணங்கி வழிபட்டும்**
**கூர்ந்துமிகும் அன்பின் குறிக்கொண்டும் – தீர்ந்துநின்பால்**
**தஞ்சம் அடைந்தனன் பாடியநின் தாளினையே**
**எஞ்சுத லில்லா அரன்.**

பெருமான் அருள்தமக்கு வேண்டுமென்று ஈடுபட்டு, வணங்கி வழிபாடுகளைச் செய்யும் மிகமிக அன்புடையவரான பாஷ்யமாசாரிய ஸ்வாமிகளே! தேவரீரையே தஞ்சமென்றடைந்தேன். ஆதலின், தேவரீர் அடியேனுடைய உய்வு பேற்றிற்குக் குறைவற்றக் காப்பாளாராக ஆகக்கடவீர்!

**28. அரணென் றடைந்தனன் ஆரியநின் தாள்கள்**
**முரணும் அழுக்குடம்பும் ஞானம் – முரணும்**
**ஒழுக்கமும் தெற்றென அற்றன தேர்ந்தேன்**
**விழுப்பொருள் நீயா விழைந்து.**

றந்தாதி

ஆசாரிய ஸ்வாமிகளே! தேவரீர் திருவடிகளே காப்பாகுமென்று தஞ்மென்று அடைந்தேன். அடைந்த இம்மாத்திரத் தாலேயே, தீயவிஷயத்தில் ஈடுபாட்டை விளைவிக்கும் அழுக்குடம்பு, அதன்காரணமான தீயவொழுக்கம், அதன்காரணமான பொய்யறிவு இவையனைத்தும் பறந்தோடின. இதனால், தேவரீரே விழுமிய பொருளென்று உணர்ந்தேன்.

**29. விழைந்தேன் இனியதா வேகடஞ்செய் நின்னை**
**விழைந்திலன்முன் மாயவன்சேற் றள்ளல் – அழுந்திமிக**
**பல்பகல் பாழ்பட்ட மீட்பதினி யுண்டாயின்**
**நல்வகையில் நீயினி நல்கு.**

முன்காலமெல்லாம் வலிய சேறாகிய இந்நிலவுலகில் அழுந்தி உருப்படியில்லாமல் கிடந்தமையால் இரும்பைப் பொன்னாக்குவாரைப் போலிக்கிற தேவரீருடைய ஸ்வபாவத்தை அறியாமல் நீண்டகாலம் பாழே போனேன். இன்றாகத் தேவரீரை அறிந்து அன்பு பூண்டேன். ஆனால், பாழே கழிந்த காலத்தை இனி மீட்பதொன்று உண்டே? தேவரீரே இதையருளிச் செய்ய வேணும்.

**30. நல்கும் குருகூர்ச் சடகோபன் வேட்பன**
**அல்லனே தான்பொதுவன் நீர்சிறப்பின் – அல்லரே**
**ஏந்தூர் சடகோபன் வேட்பன ஈவதே**
**உந்தம் சிறப்பினுக் கொப்பு.**

குருகூருக்குத் தலைவரான நம்மாழ்வார் எவ்வண்ணம் எம்பெருமானை ஆசைப்படுவாரோ உபயவிபூதிக்கும் பொது நின்ற எம்பெருமான் அவ்வண்ணமே நல்குவான். எமக்கு ஆசாரியரான தேவரீரோ, உம்மைத்தஞ்சமென்று அடைந்தாரை அவர்கள் விரும்பியது தரும் சிறப்புடைய நியதியுடையீர். இத்தகைய நீர், உம்மையே தஞ்சமாக அடைந்த ஏந்தூர் சடகோபனாகிய அடியேன் விரும்பியதைக் கொடுப்பதே சிறப்பாகக் காப்பவரான உமக்குத் தகும்.என்று அடியேன் விண்ணப்பம்.

**31. ஒக்கும் அடியேனைக் கைக்கொளல் உந்தமக்கே**
**ஒக்கும் அடியேனும் தாள்சாரல் – தக்கதே**
**ஈடிணை யில்லாப் பெருமையீர் நீரன்றே**
**ஈடிணை யில்சின்ன வனான்.**

சிறப்புடைய ஆசாரியரான உமக்கே அடியேனைக் கைக்கொளல்தகும். தேவரீரோ ஈடியிணையில்லாப் பெருமை-யுடையவரெனத் தக்கவராகையாலே, அடியேன் தேவரீர் திருவடிகளைக் சார்வதே ஒக்கும். அடியேனோ சிறியவர்களில் ஈடிணையில்லவன் என்பதே உண்மையாகும்.

**32. நானென் றெனதென்றும் நான்பெரிய கோனென்றும்**
**வானொன் றகங்காரத் தியான்வளர்ந்தேன் – தேனென்**
**றமுதென்றும் மும்மநுப்பால் ஆழ்ந்ததின் ஆசான்**
**நமவென் நலங்கொடுத்த னன்.**

அடியேன் கீழ்க்கழிந்த நாள்களிலெல்லாம் நானென்றும், எனதென்றும், நானே பெரியவன் என்றும் இப்படி வானைவிட உயர்ந்த அகங்காரத்தில் முதிர்ந்தவனாய் இருந்தேன். இந்நிலையில் ஆசார்ய சுவாமிகள் அடியேனுக்கு மூன்று மந்திரங்களில் முதல் மந்திரமான திருமந்திரத்தில் நடுவில் பதமான நம: என்ற சொல்லை விவரித்து, தேனில் இனியதும் அமுதம் போன்றதும் மரண மற்றதுமான இந்த விஷேச அர்த்தங்களை உபதேசித்து அடியேனை உய்வித்தார்.

**(இன்னிசை வெண்பா)**

**33. கொடுத்தான் குருகூர்ச் சடகோபன் ஈந்த**
**கொடுத்தான் பதின்மர் குறிக்கும் மொழிகள்**
**கொடுத்தான் கலம்பகம் மற்றும் அனந்தம்**
**மடுத்தேன் மதுவெனப் பெற்று.**

உலகோர் துன்பத்தைப் போக்க திருநகரியில் அவதரித்தவர் நம்மாழ்வார், அவர் அருளிய பிரபந்தங்கள், மற்றுள்ள ஆழ்வார்கள் பிரபந்தங்களையும் கொடுத்தார். அடியேன் பாஷ்யமாசாரியரை அடைந்ததே காரணமாக, அடியேனைக்கொண்டு திருவாய்மொழிக் கலம்பகத்தையும் இயற்றும்படி செய்து, மதுரமிக்க ஸம்பிரதாய அர்த்தங்களையும் அடியேனை அநுபவிக்கச் செய்தார்.

**34. பெற்றேனின் தாளிணையில் பாமாலை பெய்கலையைக்**
**கற்றேன் கடும்பிறவி காய்ந்தொழித்தேன் – நற்றேன்**
**ஒழுகுநின் கீர்த்தி நயந்துரைத்தேன் ஓர்கால்**
**பழகு பரிந்துரைப்பால் பட்டு.**

ஆசாரியரே! மறு பிறப்பறுக்கும் உமது தாளிணையே தஞ்சமாகப் பெற்றேன். நின் திருவடி விஷயமான பாமாலையாகிற கலையைக் கற்றேன். இதனால், துன்பத்துக்குக் காரணமான பிறவி மீண்டும் வாராவண்ணம் கோபித்தேன். தேனிலுமினிய தேவரீர் கீர்த்திகளை உலகறியச் செய்தேன். சிலசமயம் உலகோர்க்கு தேவரீர் திருவடியை அடைய புருஷகாரமாகவும் வாய்ப்பேன் – என்றவாறு.

35. பட்டேன் பருவரல் பல்லூழிக் காலமெல்லாம்
தொட்டேன் பாடியன்தன் தூமலர்த்தாள் – தொட்டதுமே
முன்னவினை பின்னவினை ஆரத்த முன்றொழிந்த
என்னை நிகர்வாரே? யினி!

கீழ்க்கழிந்த நாட்களிலெல்லாம் பிறப்பிறப்புப் பிணியால் படாத பாடுபட்டேன். காதாசித்கமாக பாஷ்யமாசாரிய ஸ்வாமிகளின் திருவடியைத் தொட்டேன்; தொட்டதுமே இப்பிறப்புக்கு முற்பட்ட பிறவிகளில் செய்தவினைகள், பிற்பட்ட வினைகள் இவையனைத்தும் தீயினில் தூசாகி கழிந்தொழிந்தன. இனி, வினையற்றவர்களில் எனக்கு நிகராக யவருமில்லை – என்றவாறு.

36. இனியோர் குறையுண்டோ? பூதூரில் வள்ளல்
பனிமலர்த் தாளிணையே பற்றா – நனிவிழைவும்
சிங்களில் பாடியன்தன் செங்கமலத் தாளிணையே
துங்கமா தூய்மௌளிக் கொண்டு.

ஸ்ரீபெரும்புதூர் யதிராசருடைய குளிர்ந்த தாமரை மலர் போன்ற திருவடியினையே பற்றாக மிகவிரும்பி, ஆறும் பேறுமாகப் பற்றிய பாஷ்யமாசாரியருடைய திருவடித் தாமரையையே அடியேன் உத்துங்கமான முடியாகக் கொண்ட பிறகு, இனியும் ஒரு குறையுள்ளதோ? எனக்கு.

37. கொண்டான் வரமுநி கோயில் உகந்தபித்தை
கொண்டான் நலமந்தம் இல்லதா – கொண்டோம்
உலகளந்தான் பொன்னடியோம் பாடியன்போல் யாரும்
நிலமளந்தான் சொம்மாபி னோம்.

மணவாளமாமுநிகள் திருவயீந்திரபுரத்தையே தமக்குகந்த கோயிலாகக் கொண்டார். அதையறிந்த பாஷ்யமாசாரியரும் நலமந்தமில்லாததான அந்தக் கோயிலையே தமக்கேற்ற வாச ஸ்தலமாகக் கொண்டார். இவர் அபிமாநித்த சிஷ்யர்களாகிய யாமும் உலகளந்தான் பொன்னடியார் ஆதலால் நிலமளந்தவனுடைய சொத்தாக ஆயினோம்.

(இன்னிசை வெண்பா)

38. நேமிசங்கம் கண்கைகால் வாய்முகம் நாபியணி
தாமரைகள் தாங்கி கருணைக் கண்ணோட்டம்
அயிந்தையில் ஈருருவும் ஆறுபயன் ஆவதே!
நயந்தெரிந்து நானடைந்தேன் நன்கு.

அடைந்தாரைக் காப்பாற்ற வேண்டி பஞ்சஸம்ஸ்காரார்த்த மாகத்தரித்த திருவாழித் திருச்சங்கமும், தன்னை அடைந்தாரை நோக்கும் மலர்ந்த திருக்கண்களும், பிறவி போக்கும் திருவடிகளும், அஞ்சலென்ற திருக்கைகளும், உபதேசம் செய்யும் திருமுகமும், எம்பெருமான் திருமேனிக்குப் போலியுருவான திருநாபிக் கமலமும் ஆகிய இவைகளைத் தாங்கி கருணைக் கண்ணோட்டங் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமந் மணவாள மாமுனிகளும் அவரின் நிழல் என்னலாம்படியான பாஷ்யமாசாரியரும் இவர்கள் இருவரும் ஈருருவோ? என்று நினைக்கலாம்படியிருக்கும் இருப்பை நினைத்து அவர்களையே தஞ்சமடைந்தேன்.

39. நன்றென் றுளதேயோ? பொய்யறியா நானறிந்த
என்றென்றும் யாண்டும் இலதன்றே – குன்றாக்
கருணைக் கடலேதான் பாடியன் வேறன்
றிருனிலத்தில் பேரொளியே யின்று.

பொய்யென்ப தறியாத அடியேன் அறிந்ததொன்றைச் சொல்லுகின்றேன். இருள்தருமா ஞாலத்தில் பேரொளிப் பிழம்பாகத் திகழும் திருவயீந்திரபுரம் பாஷ்யமாசாரிய ஸ்வாமிகளே ஆவர். கருணைக்கடலான அவரைப் போல் நன்றான ஒரு பொருள் இன்று எவ்விடத்திலாகிலும் உளதோ? இல்லையென்றபடி.

**40. இன்றன்றே? என்றென்றும் ஈடிணை யென்பதில்லை**
**பொன்றாப் புகழோன் சடகோபன் – பொன்றாத**
**பேரறிஞன் நாதமுநி யாமுநன் பேராளன்**
**நேராவ ரென்பதிலை நேர்.**

இன்றும் முற்காலத்திலும் மேல்வரும் காலத்திலும் என்றும் அழியாத புகழையுடைய நம்மாழ்வாருக்கு ஒப்பானவர் எவருமில்லை எனலாம். அவரை அடிபணிந்த குறைவற்ற பேரறிஞரான ஸ்ரீமந் நாத முநிகள், அங்ஙனமே யாமுநமுனிகள், திக்கெட்டும் புகழ்பரவும் பேராளரான ராமாநுஜர் முதலான இவர்களுக்கும் ஒப்பாகக் கூடியவர் ஒருவரும் இலர் எனலாம். நன்மையொன்றுமில்லாத அடியேனை அங்கீகரித்தமையால் பாஷ்யமாசாரியரை வேண்டுமானால் அந்த பூர்வாசாரியர்களுக்கும் ஒப்புச் சொல்லலாம் – என்றவாறு.

**41. நேராவார் யாரே? கருணை நிரம்பியதில்**
**நேரார் நிகரில் புகழொன்றில் – நேராவார்**
**உண்டேயோ? பாடியற்குப் பெம்மானும் உள்ளதேல்?**
**புண்டரீகம் வான்பூத்த போல்.**

கருணை நிரப்பத்திலும் வாத்சல்யாதி குணங்களிலும் பாஷ்யகாரருக்கு நிகர் ஒருவருண்டோ? எல்லா நற்பண்புகளால் நிறைந்தவனான எம்பெருமானும் அவருக்கு நிகராக மாட்டான். உளர் என்பீரேல்! ஆகாயத்தில் பூத்தத் தாமரைப் போலாகும் என்பேன்.

**42. போலா மதுரகவி மாறன்தன் பொன்னருளே**
**ஏலாரே? சான்றோ ரெனக்கொண்டு – மேலாத்**
**தகவுடைய தாய்தந்தை என்றுநின்ற அஃதே**
**மிகவிரும்பும் பாடியனே மெய்.**

மதுரகவியார், தன்புன்மையைக் கண்டால் சான்றோர் தன்னை ஏற்கமாட்டார் என்று கருதியே அழகிய அருளையுடைய ஸ்வாமி நம்மாழ்வாரையே தகவுடைய தாய், தந்தையான எல்லாவுறவுமாய்க் கொண்டு தஞ்சமடைந்தார். ஆழ்வாரும் அவரை ஏற்றார். அதைப்போலவே புன்மையுடைய அடியேனை பாஷ்யமா–சாரியர் ஏற்றுக் கடைக்கணித்ததும் மெய்யே யாகும்.

43. பொய்யிலாத் திருவயிந்தை பாடியன் மேன்னாளில்
செம்மையுறச் செய்யா திருப்பனேல் – அம்மே!
நலன்துறந்து நாண்துறந்து பாழ்படுவன் அன்றே
இலையிலி வந்திருப்ப னின்று.

பொய்யில்லா மணவாளமாமுநிகள் திருவயீந்திரபுரத்தில் கோயில் கொண்டதனால் அத்தலம் இன்று மெய்த்தல மாயிற்று. அத்தலத்தையே தனக்கு இருப்பிடமாகக் கொண்டு ஸ்ரீமத் பாஷ்யமாசாரியர் முன்காலத்தில் அடியேனை செம்மைப்படுத்தா திருப்பாரானால், அம்மம்மே! அடியேன் எல்லா நலன்களையும் துறந்து லஜ்ஜையும் துறந்து அசத்தாகிப் பாழ்பட்டிருப்பேன் இன்று – என்றவாறு.

44. இன்றன்றே மாறன் சடகோபன் என்றென்று
நன்றானேன் உள்நாட்டுத் தேசிதனை – நன்றாக
குடியடியான் கோவிந்தன் மாதவன் அன்பர்
மடிவைத்து கந்தருள்வான் மால்.

பாஷ்யமாசாரிய ஸ்வாமிகளால் அடியேன் செம்மைப் பெற்றமையால், இன்று மாறன் என்றும், சடகோபனென்றும் உலகவர் இயம்புகின்றதால், அடியான் தொண்டன் என்ற உள்நாட்டுத் தேஜஸ்ஸைத் தரும் பேர்பெற்றவனானேன்; கோவிந்தன் குடியடியானென்றும், மாதவன் தமரென்றும் சொல்லத் தரமுடையவனானேன். இதனால் ஸ்ரீவைகுண்டத்தில் தேவிமாரோடு எழுந்தருளியிருக்கும் பரவாசுதேவன், 'இவனால் அலங்கிருதம் பெற்றோம்' என்று உச்சிமுகந்தருள் செய்யும் பாக்கியம் பெற்றேன் – என்றவாறு.

45. மாலே படைத்துக் கடைக்கணித்தான் மற்றுள்ள
ஏனை திருத்தான் அன்றோ! – தோலாப்
புகழயிந்தைப் பாடியன் பூதூர் முனிபோல்
மிகப்பரிந்தாட் கொண்டான் விழைந்து.

எம்பெருமான் பிரளயகாலத்தில் இறகொடிந்த பக்ஷிகளைப் போலான ஜீவாத்மாக்களைக் கடைக்கணித்து, கைகால் உறுப்புக்களோடுக் கூடிய சரீரத்தைக் கொடுத்து, அறிவைக் கொடுத்துவிட்டு விட்டான். அயிந்தைப் பாடியனோ ஸ்ரீபெரும்புதூர் இராமாநுஜரைப் போல் ஜீவர்கள் விஷயத்தில் ஐயோ! ஐயோ! என்று மிகப் பரிந்து அவர்களை விரும்பி அடிமை கொண்டான்.

46. விழைமொழி யாதாயின் வெந்துயரே வீவில்
விழைவுளதேல் பாடியன்பால் இன்பம் – கழியும்?
விதிசூழ்ந் திலனென்று வீறுசால் தானே
பதிந்தான்தன் பாலாம்பே ரன்பு

உலகியலில் இருக்கும் ஆசையை ஒருவன் விடவில்லை யென்றால், அவன் பிறவித் துன்பத்தில் ஆழ்ந்து கிடக்க வேண்டியதே. ஆனால், உத்தாரக ஆசாரியரான பாஷ்யமாசாரிய ஸ்வாமிகள் திறத்து பேரன்பு உளதேல், அந்தமில் பேரின்பம் நீங்குமோ? நீங்காது. எம்பெருமான் கருணை ஜீவர்களிடம் ஏறிப் பாயவில்லை என்று நினைத்து பாஷ்யமாசாரியர் ஜீவர்கள் தன்பால் கொள்ள வேண்டிய பேரன்பை தாமே பதியும்படி செய்தார்.

47. அன்பின் நிகரில்லா னாங்கே கருணையின்
இன்பி னிணையில்லான் தோற்றத்தால் – பொன்பிறங்கும்
மேருமிசைப் பூத்தசெந் தாமரையே ஒருருத்தாள்
கண்கை முகம்வாய் மதி

ஸ்ரீ பாஷ்யமாசாரியர், எம்பெருமான் திறத்தும், தன்னை தஞ்சமென்றடைந்த சீடர் திறத்தும் அளவிலா அன்புடைமையின் இன்புறுவதிலும் இணையில்லாதவரே. இவர் தோற்றத்தில் பொன்னிறத்தால் அழகிய திருமேனி, திருவடிகள், திருக்கண்கள், திருக்கைகள், திருப்பவளம், திருமுகம் இவையனைத்தும் அப்போதலர்ந்த செந்தாமரையொத்து பொன்மலையான மேருமலையில் பூத்தபல செந்தாமரைப்போல் காட்சியளிக்குமென்பதாம்.

**48. மதியொன்றில் மான்குறள்நேர் மாயை கடிவில்**
**எதிசட கோப னிவனே – கதியில்லான்**
**என்போலும் ஏழையைக் கண்போலும் காப்பவன்**
**விண்போகும் சீர்பாடி யன்.**

செயல் செய்யச் சிந்திப்பதில் வாமந மூர்த்தி போலும், மாயயைக் கோபித்துப் போக்குவதில் முற்றுந்துறந்த சடகோபனே யாவான். தன் பாலீடுபாடு இல்லாத என்னைப் போல் அறிவிலியைக் கண்போலும் சிறப்புறச் செய்து காத்தருள்வார் வானளாவியகீர்த்தி வாய்ந்த பாஷ்யமாசார்ய ஸ்வாமிகள்–என்பதாம்.

**49. பாடியனோ சானகியோ போல்வீர்நன் குத்தமரில்**
**விடில்சீர் ஆழ்வான் தனையடைந்தார் – கோடல்**
**பதிபரவும் பாங்கில் கலியனோ டொப்பீர்**
**மதிநலத்தால் மாறனே நீர்.**

தான் நரகமடைந்தாலும் பரவாயில்லை. ஆனால், ஆசையுடையோர் இழக்கலாகாது என்று எண்ணி ஆசாரியன் ஆணையை மீறி திருமந்திரத்தை ஆசையுள்ள எல்லோருக்கும் தூளிதானம் செய்த எம்பெருமானாரைப் போலவும், தேவ மாதரை மீட்கத் தான் சிறையிருந்த சீதாபிராட்டியைப் போலவும், தரிசனத்தைக் காக்க தன் கண்ணையிழந்த கூரத்தாழ்வானைப் போலவும், தன்னை அடைந்தாரைக் கைக்கொண்டு திவ்விய தேசங்களை வாழ்த்திய திருமங்கை யாழ்வாரைப் போலவும், மயர்வற மதிலம் அருளப் பெற்றவர்களில் தலைவரான நம்மாழ்வாரைப் போலத் திகழும் பாஷ்யமாசாரிய ஸ்வாமிகளே! இவர்களில் நீவீர் எவரோடு ஒப்பாவீர்?

**50. நீரே சயமே யடிமைத் தலைநின்றீர்**
**நீரே அடிமையில் நீக்கமிலீர் – நீர்தாமே**
**கோதிலடி யாருங் குணந்திகழ் கொண்டலும்**
**நீதிநெறி வித்தகரும் நீர்.**

*பாஷ்யமாசாரியரே! பயனாகிற அடிமையில் தலைநின்றவர் நீரே;* எம்பெருமானுக் காற்றும் தொண்டில் பிரிவதில்லாதவரும் நீரே; குற்றம் யாதுமில்லாது அடிமையில் தலைநின்றதோடல்லாமல் அடைந்தாரைக் கைக்கொண்டு குணந்திகழ் மேகத்தோடு ஒத்தவரும் ஆவீர். ஆத்ம பரமாத்மாக்களின் நீதியை முற்றும் அறிந்தவரும் நீரே ஆவீர்.

**51. நீரே நிகரற்ற நீசனெனை கைக்கொண்டீர்**
**பாருடன் நீரும் பரிவுமிகு – ஊரவரும்**
**எக்காலத் தெவ்வெவரும் ஏற்பதொண் றுண்டேயோ?**
**மிக்கபுகழ் தத்துவ மே.**

நிகரற்ற நீசனான என்னை நீரே உகந்துக் கைக்கொண்டீர். நிலத்தேவரும் ஸ்வேதத் தீபவாசிகளும், மங்களாசாஸனமே யாத்திரையாயுள்ள நித்திய விபூதியிலுள்ளாரும் முதலாக எக்காலத்திலும் எவ்வுலகிலுள்ளாரும் ஏற்பது என்பது இல்லை யேயாம். மேலாம் புகழே வடிவான தத்துவமே இதுவாகும். தேவரீருடைய வாத்சல்யகுணம்.

**52. மேதினியில் ஐம்புல வாஞ்சை மிகவுடையன்**
**காதுங் கடுநெஞ்சன் தீச்செயல்கள் – யாதும்**
**எனையன்றே அண்டி நிலைபெறுவ யாண்டும்**
**வினையமென்ப தொன்றும் மிகை.**

பாருலகில் ஐம்புலன் நுகரும் விஷய விருப்பம் மிக உடையவன்; கொலைசெய்ததற்குரிய கடுமை மிக்க நெஞ்சினையுடையவன்; கொடிய செய்கைகளை யுடைய இப்படிப்பட்ட யாவும் என்னைச் சேர்ந்தே நிலைபெறுவனவாம். எம்பெருமான் விஷயமாக அன்பின் அடிப்படையிலான அடக்கமென்பதே யில்லாதவனடியேன்.

**53. மிகையனே மெய்யடியார் கூட்டத்து யானோ**
**தகையிலன் சாதுகோட்டி தம்மில் – நகையிலன்**
**நள்ளருட்கண் இங்கலம்போல் நானொருவன்உள்ளேன்பால்**
**உள்ளதெல்லாம் தீய துள.**

மெய்யடியார் கூட்டத்து அதிகப் படுவேன் யானொருவன் என்பதாகும். சாதுகோட்டிக்குரிய பண்பற்றவன்; பகவதநுபவ மில்லாதவன்; குதூகலமில்லாதவன்; நடுநிசியில் அடுப்புக்கரிபோல் ஒளியற்றவன்; இலனென்பாரில் நானொருவன் உளன்; என்னிடம் உள்ளதெல்லாம் தீயதே உள்ளதாம்.

**54. உளதேயோ? நீர்செய் செயலின் தரந்தான்**
**உளதேயோ? எம்பெருமான் செய்த – உளதே?**
**இருவீரும் செய்தசெயற் கொப்பறிவார் உண்டோ?**
**பெருமைமிகு பாடியனே! பேசு.**

தேவரீர் அடியேன் திறத்துச் செய்த செயலின் தரமறிதலுண்டோ? தேவரீரை அடியேற்குத் தந்த எம்பெருமான் செய்த செயலுக்கு ஈடுண்டோ? தேவரீர்களிருவரும் செய்த நல்லுதவிக் கொப்புண்டோ? ஒப்பறிவாரிங்குளரோ? இவற்றை பெருமைமிகு பாஷ்யமாசாரியரே! நீரே அருளிச் செய்ய வேணும்.

**55. பேசுதல் வல்லீரே? நீர்செய்த பேருதவி**
**பேசுந் தரமுடைத் தல்லவே – நீசனேனைக்**
**கைக்கொண்ட காரியமே எற்கறி வித்ததால்**
**இக்குறிப்பே கொண்டுரைத்தேன் இங்கு.**

ஆசாரிய ஸ்வாமிகளே! அடியேன் திறத்து தேவரிர் செய்த பேருதவியானது, தேவரீரே அருளிச் செய்யும் தரமற்றது. ஆதலினால் பேசுதல் வல்லீராக மாட்டீர். 'உனக்கெப்படித் தெரியும்' என்று கேட்பீரானால், அடியேனோ நிகரற்ற நீசனானவனெனக் கொண்டு செம்மைபடுத்திய செயலே, அடியேற்கறிவித்தாகுமிதைக் கொண்டே நிகரற்ற செயலென்கிறேனாகும்.

**56. இங்கறிந்தேன் இன்றாக எம்பெருமான் செய்தநன்றி**
**துங்கமிகு பாடியனைத் தோற்றுவித்தல் – இங்கிலதேல்**
**தொல்லூழிக் காலந் தொலைந்தகீழ் மேல்நாளும்**
**பல்லூழிக் காலம் பழுது.**

றந்தாதி

எம்பெருமான் அடியேனை உய்விக்க வேண்டியே பாஷ்யமாசாரிய ஸ்வாமிகளைத் தோற்றுவித்தான் என்பதனை இன்றாக அறிந்தேன். அப்படி அவரைத் தோற்றுவிக்க வில்லையானால், அடியேற்கு கீழ்கழிந்தகாலமும் இனிமேல் வருங்காலமும் பழுதாய் முடிந்திருக்கு மன்றோ?

**57. பழுதாகா வண்ணம் பாடியன்தன் சீலம்**
**விழுமிதென் றுள்ளில் விரித்தான் – கழிபேர்**
**கருணையான் அவ்வளவே வேறன்று கொண்டு**
**சரணடைந்தேன் பாடியன்தா ளின்று.**

ஆசாரிய ஸ்வாமிகள், பிறர் நலமே பேணும் மிக்கப் பெருங்கருணையால் தன்னைச் சார்ந்தாரை உய்வுபெறுத்தலில் மிகவும் ஊற்றமுடையவர் ஆவார் என்பதனை அடியேன் உள்ளத்தில் மிகவிரியக் காட்டியருளினார். இவ்வளவிலேயே அடியேன் நிர்ணயித்து, இவர் திருவடிகளில் தஞ்சமென்றடைந்தேன். இதனால், அடியேன் வாழ்நாளைப் பழுதாகாவண்ணம் மேற்கொண்டேன் இன்றென்பாதாம்.

**58. இன்றயிதை மாமுநிதன் தாளில் இருந்துதொண்டு**
**நன்றியற்றும் பாடியன்தன் நாண்மலர்த்தாள் – குன்றாத**
**ஆறுடன் பேறாக வானில் அரியபயன்**
**வீறுடன் பெற்றேன் விரைந்து.**

இன்றாக திருவயிந்திரபுரத்தில் கோயில் கொண்டுள்ள மணவாளமாமுநிகள் திருவடிகளில் செய்யும் தொண்டு நிலை நின்ற பேறென்றறிந்து தொண்டு செய்யும், ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளுடைய அன்று பூத்த தாமரை போன்ற அழகிய திருவடிகளையே அழிவற்ற ஆறுடன் பேறாக வானில் பெறும் பயனின் பெறுதற்கரிய பயனாக சிறப்புற்ற வகையில் விரைந்து பெற்றேன் என்பதாம்.

**59. விரைந்து திருமலை யாழ்வார் விரும்பி**
**வரமுநியை சீடராகக் கொண்டார் – வரமுநியும்**
**கோயில் அயிந்தைகொடு பாடியற் கொண்டார்**
**ஆய்விலடி யேற்கொண்டான் ஆர்ந்து.**

திருமலையாழ்வார், தீவிரமாக மிக விரும்பி மணவாள மாமுனிகளை உபயாத்திரையும் தமதாகக் கொண்டு சிறப்பித்தார். மணவாள மாமுனிகள் திருவயிந்திபுரம் விரும்பி கோயில் கொண்டு ஸ்ரீமத் பாஷ்யமாசார்யஸ்வாமிகளை உய்யும்படியே பெற்றார். பாஷ்யமாசார்ய சுவாமிகளடியேனை அளவிடற்கரிய பேரன்பினில் கைக்கொண்டார்.

**60. ஆர்ந்தபுகழ் அச்சுதனே வந்தான் உலகார்யன்**
**தேர்ந்தறிய வல்லமே? தன்பெருமை – தேர்ந்தறிவ**
**தென்ப தொருபொருள் நாடுறைவர் யாரறிவார்?**
**பண்பனே பாடியற்குக் காப்பு.**

நிரம்பிய புகழுடைய அடைந்தாரைக் கைவிடாத எம்பெருமான் பிள்ளையுலகாசார்யராய் வந்துதித்தருளுகையால் இவர் பெருமை நாமறியோமென்பதொரு பொருளல்ல, உலகிலுள்ளார் எவருமே அறிய முடியாத பெருமையாகக் கருதக்கூடிய பண்புடையரான உலகா சாரியரே ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளுக்குக் காப்பாவர்.

**61. காப்பு வடக்குதிரு வீதிபிள்ளை காத்திலரேல்**
**காப்பெவர் வாய்மொழி ஈட்டுரைக்கு – காப்பன்றி**
**நுண்பொருள் முற்றவும் நோக்குவித்தான் பாடியற்கு**
**பண்பினெற் கீந்தான் பயன்.**

வடக்குத் திருவீதிப்பிள்ளை நம்பிள்ளை சொன்ன திருவாய்மொழி ஈட்டின் உரையைக் காத்து எழுதவில்லையானால், காப்பாவார் யார்? இந்த வடக்குத் திருவீதிப்பிள்ளை ஸ்ரீவைஷ்ணவத்தை காப்பது மட்டுமல்லாமல் ஸ்ரீமத் பாஷ்யமாசாரியருக்கு ஈட்டுரையை தன்னருளால் இவரிடம் வந்து சேரும்படி நோக்குவித்தார். இந்நோக்கை பாஷியமாசாரியர் தம்பரம கருணையாலே அடியேன் திறத்தில் பயனுறும்படி செய்தார்.

**62. பயனாநம் பிள்ளையின்றேல் ஆழ்வார்கள் பாக்கள்**
**பயனோயோ? உம்பர் திவத்தொப்பாம் – பயனுடைத்தே**
**ஈடினில மில்லார் இறையின்பம் மில்லாதார்**
**பாடியனே பெற்றான்தன் சீர்.**

றந்தாதி

உலகுக்குப் பெரும் பயனாக உயர்வற உயர்நலமுடையவனால் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்களாழ்வார்கள் பதின்மரும், இப்படி இவர்களால் இறையனுபவம் கரைந்து வழிந்தவாறே அருளிச் செயல்கள் தொண்டர்க்கமுத மாயமைந்தன அருளிச்செயல்கள். நம்பிள்ளை என்ற ஸ்வாமிகள் அவதரிக்கவில்லையானால் இந்த அருளிச்செயல் பயனுடையதாகாது. இதன்றி தாழ்த்திக்கு முடிந்த நிலமான இருள்தருமா ஞாலம் உம்பர் திவத்தொப்பாம் பயனுடைத் தாயிற்று. இத்தகு அனுபவம் நம்பிள்ளைகளால் ஸ்ரீமத் பாஷ்யமாச் சார்ய சுவாமிகளுக்கு அருளப்பெற்ற அவ்வனுபவம் தம்பரம கருணையால் எமக்குக் கொடுத்தார்.

**63. தஞ்சீரை ஞானியர்கள் தாம்புகழும் வேதாந்தி**
**நஞ்சீயர் தாம்பட்டர் நல்லருளால் – எஞ்சாத**
**ஆர்வமுடன் மாறன் மறைப்பொருள் நூறுரு**
**ஆர்ந்தெற்கீந் தான்பா டியன்.**

தம் கீர்த்தியை மெய்ஞானியர்கள் கொண்டாடும் தரமுடைய நஞ்சீயர் என்றும் வேதாந்தி என்றும் பெயருடையார், பட்டர் திருவருளால் மாறன் மறையாகிய திருவாய்மொழியின் நுண் பொருள்கள் முற்றும் தம்மைச் சார்ந்தார் தமக்கு நூறுருவமையைக் கொடுத்ததை, ஸ்ரீமத் பாஷ்யமாச்சார்ய சுவாமிகள் மேற்படியார் அருள்களால் தாம் பெற்று தன்பேரருளால் அடியார்க்கருளினார்.

**64. அன்பின் அலைகடல் ஆயிரம்பேர்க் காழ்பொருள்**
**இன்பின் இளங்குமரன் எம்பிராற் – கின்புருவன்**
**எட்டெழுத் தெட்டுகாதை பண்ணின் தனிச்சுவையன்**
**பட்டர்திருத் தாள்பா டியன்.**

எம்பெருமானார்திறத்தும் மெய்யடியார்திறத்தும் அலைகடலை– யொத்த அன்புடையாரும், இன்பமளிக்கும் இளங்குமரனும், பிறவித் துயரொழிய வேண்டுவார்க்கு துன்பமொழித்து எம்பிரான்பால் சேர்த்து இன்பமளிக்கும் எட்டெழுத்துக்கு அஷ்டச்லோகி என்ற நூலருளியவரும் பண்ணின் தனிக்கலைஞரும் ஆயிரநாமத்துக்கு ஆழ்பொருளெல்லாம் அருளிச் செய்தவருமாகிய ஸ்ரீமத் பட்டருடைய திருத்தாளை தஞ்சமடைந்த ஸ்ரீமத் பாஷ்யமாச்சார்ய சுவாமிகளின் திருவடிகளே அடியேற்குத் தஞ்சமாகும்.

**65. பாடியன் எம்பார் பதந்சேர்ந் திதந்தெரிவான்**
**ஈடில் சுவையன் தமிழ்மறையின் – நாடுபுகழ்**
**நாலா யிரம்பாவில் எம்பெருமா னார்தாள்சேர்த்**
**தோலாத் துணைச்சீட ளாம்.**

ஸ்ரீபாஷ்யமருளிச் செய்த எம்பெருமானார் திருத்தாளினைச் சேர்ந்து உய்யும் இதந்தெரிந்தவரும், தமிழ் வேதமாகிய நாலாயிரம் பாசுரங்களில் ஈடிணையில்லாச்சுவையுடைய பண்ணின் தணிக்கலைஞருமாகியவரும் உலகெல்லாம் புகழும்படியான எம்பார், சிஷ்யாச்சார்ய முறையில் சிறிதும் மாறுபடாதவராய் எம்பெருமானாருக்கு துணைமிக்க சீடனுமாவார். இவர் திருவடிகளைப் பற்றின ஸ்ரீமத் பாஷ்யமாசார்யா் அடியேனை ஏற்ற குருவாகும்.

**66. சீடன் பெரியநம்பி சேர்ந்தசீடர் ஐவர்**
**சேடனிரா மாநுசனா சீர்தரும் – பாடியற்கும்**
**எம்பெருமா னுட்பட இந்நிலத் தேவர்க்கும்**
**இம்பர் நலமந்த மில்.**

அர்ச்சாவதார மூர்த்திகளாய் கோயில் கொண்டுள்ள எம்பெருமான்களுட்பட ஸ்ரீமத் பாஷ்யமாச்சார்ய ஸ்வாமிகளோடு நிலத்தேவரான ஸ்ரீ வைஷ்ணவர்களோடு வாசியற அனைவர்க்கும் இவ்வுலகிலுள்ளவர் கட்கும் இங்குண்டான ஆநந்தம் நிலைத்திருப்பதற்குக் காரணம், ஐவர்களான பெரிய நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, பெரிய திருமலை நம்பி, திருமலையாண்டான், திருவரங்கப் பெருமாளரையார் இவர்களுக்கு சிஷ்யராய் திருவனந்தாழ்வான் அம்சமாய் இராமாநுசராய் வந்தவதரித்ததாலாகும்.

**67. இலரேல் இருநா றகவைகளும் ஈங்கே**
**நலமொன் றுளதேயோ? நாட்டில் – பலவென்?**
**பரமன் படைப்போடு பாடியன் எற்கோடல்**
**தரமன்று சத்திய மீது.**

றந்தாதி

எம்பெருமானாரும் அவருடைய மறுஅவதாரமான மணவாள மாமுனிகளும் இருநூறு ஆண்டுகள் இந்த நிலத்தின்கண் எழுந்தருளியிருக்கவில்லையே யானால் இந்த நானிலத்தில் ஆனந்தமென்பதொன்றும் உண்டோ? இல்லையேயாம். நிற்க. பல பேசி என்? பரமன்படைத்த படைப்பும் ஸ்ரீமத்பாஷ்யமாசார்ய ஸ்வாமிகள் அடியேனைக் கைக்கோடலும் முதலானவை பயனற்றுப் போயிருக்கும் இது சத்தியம்.

68. இதுவொப்ப தின்பமில்லை யாமுநர்த் தாள்கள்
கதிபெற்றார் யாமுநர்த் தாதை – கதிபெற்றேன்
இவ்விருவர் தாங்களே ஆறுடன்பே றென்றடியேன்
செவ்வியுறச் சேர்ந்துய்ந்த னன்.

ஸ்ரீமத்ஆளவந்தார் திருவடிகளையே ஸ்ரீமத்பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளும், இவர் திருக்குமாரரான யாமுநாசார்யஸ்வாமிகளும் தமக்குக் கதி என்று பெற்றிருந்த இந்த இரண்டு ஸ்வாமிகளுடைய திருவடிகளையே கதியென்றும் ஆறும் பேறுமா செவ்வியுறச் சேர்ந்துய்ந்தே னென்பதில் இதுயொப்பதின் இல்லையாம்.

69. சேர்ந்துய்ந்தோன் சீராமன் பங்கயக்கண் ணான்தாள்கள்
ஆர்ந்தபுகழ்ப் பாடிய னம்பொனடிச் – சேர்ந்துய்ந்தேன்
இவ்வளவே பேற்றினுக் கேய்ந்தயாவும் பெற்றனன்
கவ்வை யென்பால் காட்டா தலை.

அடியேன் நிரம்பிய புகழாளரான ஸ்ரீமத்பாஷ்யமாசார்ய ஸ்வாமிகள், மணக்கால் நம்பி, உய்யக்கொண்டார் இவ்விருவருடைய திருவடிகள் அடைந்து உய்ந்தவர். இந்த ஸ்வாமிகளின் திருவடிகளே கதியென்று சேர்ந்த இவ்வளவே பேறுபெறுதற்குரியயாவும் பொருந்திவிட்டன. ஆதலால் துர்விஷயங்கள் என்பால் தலை காட்டாது.

70. தலைகாட்டாத் தண்ணென்ற ஞானவொழுக் கங்கள்
தலைக்காட்டாத் தண்ணென்ற மூக்கும் – நிலைநாட்டும்
வாள்நேர் உயர்கதியும் வள்ளலெனும் பாடியன்தன்
தாள்தர முந்தும் தகவு.

மிகத் தாழ்ந்தான பொய்யறியும் தீயொழுக்கம் அழுக்குடம்பும் என்பாலும் தலைக்காட்டாதவைகள். ஒளிபொருந்திய நித்திய விபூதியாம் உயர்கதி வள்ளலெனும் ஸ்ரீமத்பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளுடைய தயையால் தானே முந்தும்.

71. தகவில் உலகின் தகவுடையீர் நீரே
தகவென்னும் தத்துவம் வேட்கும் – தகையீர்
தகுதியில் தத்துவம் நாயேனைக் கொண்டு
தகுங்கூட்டம் தந்தளித்தீர் நீர்.

பெருமையென்பதறியாத உலகில் பெருமைமிக உடையீர் நீர். தயையென்ற தத்துவம்தானே விரும்பும் தயையுடையீர் நீர். தகுதி என்பது இல்லாத அடியேனான கீழோனைக் கைக்கொண்டு நிலத்தேவர் கூடத்திலடியேனை இருத்தினீர். இவ்வற்றையெல்லாம் அடியேனைக் கைக்கொண்டவாற்றானே அறிந்தேன்.

72. நீர்தந்த சேமம் நிமலனாம் நாதமுநி
பார்நிரம்பும் பல்புகழ்ப் பாவினத்தை – சீருநவே
மீள்வித்த விஞ்சுசுவைப் பண்ணமர்நா லாலிரத்தால்
ஆள்வித்த பாடியனன றோ.

மிக்க சுவையுடையதும் பண்ணமைந்ததும் உலகம் நிறைந்த புகழுடையதுமான நாலாயிரத்திவ்யப்ரபந்த பாசுரங்களைக் குற்றமன்றிக்குணம் மிக்கவரான ஸ்ரீமந்நாதமுநிகள், மறைந்து போனதை மீள்வித்ததைக் கொண்டு அடியேனை ஆள்வித்தீர். ஆதலால், இத்தகைய பாஷ்யமாசார்யரான நீர், அடியேற்கு எல்லாச் சேமமும் நீரன்றோ?

73. அன்றே குருகூர்ச் சடகோபன் தாளிணையும்
பொன்றாப் புகழ்நிரம்பும் வாய்மொழியும் – நன்றுதவி
இந்நிலத்தில் பொன்னிலத்தில் மன்னுபுகழ்ப் பாடியன்
என்னைநிகர் யானென்ற னன்.

றந்தாதி

திருக்குருகூரிலவதரித்த நம்மாழ்வருடைய இரண்டு திருவடிகளையும், அழிவற்ற இவரருளிச் செயலாம் திருவாய்மொழியும் அடியேற்குய்யும் வண்ணம் உதவி, இருள்தருமாஞாலமாகிய இவ்வுலகிலும் தெளிவிசும்பு திருநாடான பரமபதத்திலும் நிரம்பப் பொருந்தியுள்ள புகழாளரான ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகள் 'உனக்கு நிகர் நீதா'னென்றார்.

**74. என்றறிவேன் என்னாயன் செய்தநன்றி முற்றவும்**
**இன்றறிந்தேன் ஓரளவே சேனையர்கோன் – தன்திறத்தில்**
**அன்பின் அளவில்யான் அங்ஙனமே என்பாலும்**
**அன்பின் அளவில்லான் என்று.**

அடியேற்கு வகுத்த ஸ்வாமியான ஸ்ரீமத்பாஷ்யமாசார்ய ஸ்வாமிகள் அடியேனை உய்வித்தல் பொருட்டு, அடியேன்திறத்தில் செய்த நலம் முற்றவும் என்றும் அறியப்போகாது. ஆயினும் இன்றாக ஓரளவே அறிந்து கொண்டேன். ஸ்ரீவைஷ்ணவ சமயாசார்யர்களில் முதல்வரான ஸ்ரீமத்விஷ்வக்சேனரிடத்தில் தாமுய்யும் பொருட்டும் பிறரை உய்வித்தல் பொருட்டும் அளவிறந்த அன்புடையாரானார். அதே நிலையில் அடியேனை உய்வித்தல் பொருட்டு அளவு கடந்த அன்புடையரானார்.

**75. என்றும் மறவேன் மறந்தேன் இனியுணர்ந்தேன்**
**குன்றேய்க் குணக்கொண்டல் பாடியனை – நின்றபுகழ்**
**கேள்வன்பொன் னாகத்து நீங்காத்தாய் தாள்கட்கு**
**ஆளென்று புக்கான் தனை.**

குன்றுபோல் மிக்க குணங்களால் நிறைவாளனும், கொண்டல்மேகம் போல்வானும் குறையேதுமின்றி நற்குணக்கடலாக நின்ற புகழாளனான இறைவன் திருமார்பை இறையும் அகலாத உலகமாதாவான திருமகள் திருவடிகளைத் தஞ்சமென்று பற்றும் ஸ்ரீமத்பாஷ்யமாசார்யஸ்வாமிகளை உணராமையால் மறந்தேன்; அடியேன் உணர்ந்தேன்; இனி மறவேன்.

**76. கேள்வனாகம் நீங்காத்தாய் தாள்கள் சிரங்கொண்டு**
**கேள்வனையே தஞ்சமென்று கொள்ளும் – மீள்வில்சீர்**
**பாடியன்தன் ஆர்ந்தபுகழ் எக்காலும் பண்தொடுத்துப்**
**பாடுதற் குற்றதொரு பற்று.**

உலகநாயகன்தன் திருமார்பை இறையும் அகலாத உலகமாதாவின் திருவடிகளைச் சிரத்திற் கணியாகக் கொண்டு இவளைப் புருஷகாரமாக, எம்பிரான் தன் திருவடிகளையே தமக்குத் தஞ்சமென்று கொள்ளும், பழுதின்றி குணங்களால் நிறைந்த புகழாளரான ஸ்ரீமத்பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளுடைய கௌரவம் மிக்க புகழை எக்காலத்தும் பண்ணின் இசையோட தொடுத்துப் பாடுதற்குரிய தொரு உபாதானமாகும்.

**77. பற்றோ சிறிதில் பரன்சீர்க் கடல்மூழ்கி**
**நற்றமிழ்நூல் நான்களித்த இன்பமாரிப்— பெற்றியன்**
**வண்குருகை வந்தருளும் மாறன் மலரடியே**
**பண்புமிகும் பாடியருக் கின்பு.**

உலகியலில் பற்று சிறிதுமின்றி பரனாம் பெருமானுடைய குணக்கடலில் மூழ்கி அந்த குணங்களையே உபாதாநமாகக் கொண்டு, திருவாய்மொழி திருவிருத்தம், பெரிய திருவந்தாதி, திருவாசிரியம் என்கிற நான்குப் பிரபந்தங்களளித்த வளமிக்க குருகூரில் வந்தவதரித்த நற்குணக்கடலாகிய சடகோபருடைய திருவடிகளே ஸ்ரீமத்பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளுக்கு என்றும் இன்பமேயாம்.

**78. இன்புருவன் பொய்கை எழிலியகல் வார்கடல்நெய்**
**மின்சுடரா வேங்கடவற் காட்டுமவன் – பொன்னடிகள்**
**வன்சரணா வாழும் அயிந்தைவரும் பாடியன்தாள்**
**உன்சரணா நெஞ்சமே யுள்.**

பகவதநுபவ இன்பமே வடிவான பொய்கையாழ்வார், ஸ்ரீபூமியையே அகலாக, நிறைகடலை நெய்யாக விளக்கேற்றி இந்த ஒளிமிக்க விளக்கால் திருவேங்கடத்தெம்பெருமானை உலகங்காணக் காட்டும் அவர் திருவடிகளையே தமக்கு வாழ்வாக அவதரித்த, ஸ்ரீமத் பாஷ்யமாசார்யஸ்வாமிகள் திருவடிகளையே நெஞ்சமே! உனக்குத் தஞ்சமாக நினைவில் கொள்ளுவாயாக.

**79. உள்ளிருள் நீக்கும் ஒளிவிளக் கேற்றுதற்கு**
**தெள்ளுதமிழ் தேர்ந்து துணைக்கோடும் – விள்ளரிய**
**கீர்த்தியார் பூதத்தார் தாளினையே பாடியற்கு**
**சீர்த்தபயன் எற்கிவனே வாழ்வு.**

உலகவருடைய அகவிருளைப் போக்குதற்கு உள்ளத்தி—லுண்டான கோணலைப் போக்கும் தெளிந்த தமிழ்பாசுரமே நம் செயலுக்கேற்ற துணை என்று தேர்ந்து துணையாகக் கொண்ட, எவராலும் புகழ்ந்து சொல்லுதற்கரிய சிறப்பு வாய்ந்த பூதத்தாழ்வார் திருவடிகளையே, தமக்குற்ற பயனாகக் கொண்ட ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளே, அடியேற்கேற்ற பேரின்ப வாழ்வாகும் என்பதாம்.

**80. வாழ்வான் வலிய வழிகண்டேம் நன்மைமிக்காள்**
**கேழில்திருக் கண்டபொன் னாழிகண்ட – கீழ்வில்**
**தமிழ்த்தலைவன் பொன்னடியே தன்சரண் கொண்டான்**
**எமைக்காக்கும் ஏற்ற வழி.**

நலமந்தமில்லதொரு நாட்டில் போய் வாழ்ச்சி பெற, சிறப்புற்ற மார்க்கமொன்று நாம் கண்டு கொண்டோம். எல்லா நலன்களாலும் மிக்காளரான திருக்கண்டதோடு பொன்னாழி கண்டேன் என்று பாடிய எக்குறையுமற்ற பேயாழ்வாராகிய தமிழ்த் தலைவன் அழகிய திருவடிகளே தன் சரனென்று கொள்ளும், ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகள் எம்மைக் காப்பதற்கு ஏற்ற வழியாகுமென்பதாம்.

**81. வழியல் வழியனைத்தும் வாள்கொண்டு வெட்டி**
**கழியமிகு நல்வழியே காட்டும் – பழுதில்புகழ்**
**பத்திசாரன் தாளிணையே பாடியற்காம் பரிசு**
**இத்தகையோன் ஏற்ற பரிசு.**

தேவதாந்தர சாதனாந்தர ப்ரயோஜநாந்தர முதலான வழியில்லா அல்வழிகள் பலவும், தம் நாவென்னும் வாளால் அறத்தொலைத்து எம்பெருமான் நாரணனே ஆறும் பேறும் என்பது முதலா மிக மிக நல்ல வழிகளனைத்தும் தெளியக்காட்டி உலகவரை உய்வித்த திருமழிசைப் பிரான்திருடியிணைகளே, ஏற்ற பயனாகக் கொண்ட ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளே எமக்குரிய எல்லாப் பயனுமாவாரென்பதாம்.

**82. பரிசறிவார் பல்லோர் பரிசறிவார் ஈடே?**
**குருகைவரு வண்சட கோபன் – திருவடியே**
**பாடியற் கேற்றநிதி பாடியன்சேர் பாடியனே**
**ஈடிணையில் எந்தம் நிதி**

உலகில் உற்ற பயனறிவார் தாம் கண்டதுவே பயனென்பார் பல்லோர், ஆனால் பாஷியமாசாரியர் கண்ட பரிசே அனைவர்க்கும் ஏற்ற பயனாகையால் பயனறிவார் இவர்க்கீடில்லை. திருக்குருகூரில் அவதரித்த சடகோபன் திருவடிகளே நிதி போன்ற கதியாகும் என்றருளியவர் ஸ்வாமி ராமாநுஜர். இந்த ராமாநுஜர் திருவடியைச் சாரும் ஸ்ரீமத் பாஷ்யமாசார்யஸ்வாமி ஈடும் எடுப்புமில்லா நிதியாகும் எந்தமக்கு.

**83. நிதிகண் டுரைசெய்தோன் நீள்குன்றத் தியாவும்**
**நிதியா அடியா ரடித்தூள் – நிதியாக**
**இன்பப் பெருங்குழுசேர் சேரலர் கோனின்பம்**
**பாடியற் கின்பமெற் கு.**

திருவேங்கட மலையின் தொடர்பே நிதி என்றும், மெய்யடியார் திருவடித்துகளே நிதியாகவும், எம்பெருமானை நினைந்தின்புறும் பெருங்குழுவே பேரின்பமாகச் சேரும் குலசேகரப் பெருமானே ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளுக்கு இன்பம். இந்த ஸ்வாமிகளே அடியேனுக்கு ஏற்ற இன்பமென்பது.

**84. எமக்குக் கதியாவார் பாடியரென் போல்வார்**
**தமக்குங் கதியாவர் தாமே – குமைக்கும்**
**உலகென்று பல்லாண்டோ தும்விட்ணு சித்தர்**
**உலகிய லென்றுபல்லாண் டோதிய பட்டர்பிரான்.**

இவ்வுலகின் தன்மையால் எம்பெருமான் திருமேனிக்குக் கண்ணேறு வரும் என்று பல்லாண்டு பாடிய பட்டர்பிரான் ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளுக்கும் உற்ற காப்பாவார். இத்தகு ஸ்வாமி எமக்குக் கதியாவதன்றி, என்போல்வார் கீழோர் பலர்க்குங்கதி தாமே யாவாரென்பதாம்.

**85. உற்றுநோக்கில் தேவியர் மூவர் உயர்ந்தோர்யார்?**
**பற்றிப் பரன்தாள் உலகுய்ய – முற்றுணர்வை**
**ஓதியருள் கோதை உயர்கதிகொள் பாடியன்தாள்**
**மாதுயர் மாய்க்கும் மருந்து.**

எம்பெருமானுடைய தேவியார் மூவராகும். இவர்களில் உலகவர்களுக்கு உபசரிப்பதில் உயர்ந்தோர் யாவரென உற்று நோக்கில் உலகோர் பரன்தாள் பற்றி உய்வடைய இன்றியமையாச் சாதனமான மெய்யுணர்வை இரண்டு ப்ரபந்தங்களில் தெள்ளத் தெளிய ஓதியருளிய கோதை நாச்சியரே என்பது தேறும். இத்தகு நாச்சியார் திருவடிகளையே உயர்ந்த கதியாகப் பற்றிய ஸ்ரீமத் பாஷ்யமாசார்யஸ்வாமிகள் திருவடிகளே பிறவித்துயர் ஒழிக்கும் மருந்தாகுமென்பதாம்.

**86. மருந்தாய தொண்டர்தாள் தொண்டர்தாள் தூளே**
**பெருவடிவாப் பேணிக்கொள் பெம்மான் – திருவடிசேர்**
**பாடியன்தன் தாளிணையே ஒப்பில் பரகதிக்கு**
**ஈடில்லா நம்நல் தவம்.**

பிறவி நோய் மாத்திரமன்று, அனைத்து நோய்க்கும் மருந்தாவது தொண்டரடித்தூளேயாகும். இத்தகுத் தொண்டரடிப் பொடியே தமக்கு மேம்பட்ட திருமேனியாக விரும்பிக் கொண்டதையே நிரூபகமாக உடையவர் தொண்டரடிப் பொடியாழ்வாராகும். இந்தப் பெருமையுடைய இவ்வாழ்வார் திருவடிகளையே தமக்குத் தஞ்சமாகச் சேர்ந்த ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளுடைய திருவடி–யிணையே ஒப்பற்ற நலமந்தமில்லதோர் நாட்டிற்குப் போவான் ஈடிணையில்லா நம்முடைய நல்லதவமாகும் என்பதாம்.

**87. நற்றவம் மொன்றுமிலேன் நாரணன் தாள்பணியேன்**
**உற்ற உறவறியேன் ஊழ்வினையேன் – பற்றிநின்**
**தாள்பணியேன் தண்கழலே பொய்யன் புறந்திரிவேன்**
**ஆள்கொண்டாய் கொண்டதுவே மெய்.**

நலமந்தமில்லாதோர் நாடுபுகுவான் பொருட்டு உலகவர் செய்வதாகிய நல்ல தவங்களொன்றும் செய்திலேன். இதைத் தருவானான நாராயணன் திருவடிகளைப் பணிவதும் செய்திலேன். இவைகளின் காரணமாக ஊழ்வினைவயத்தவனாய், மெய்யுணர்வு மறைக்கப் பெற்றவனாய் பரனுக்கும் எனக்கும் உள்ள உறவுகளை ஒன்றும் அறியேன். இந்தக் குறைகளெல்லாம் தீர்த்து தெளிய பரமகாருணிகரான தேவரீர் திருவடிகளைத் தஞ்சமென்று பற்றி பணியேன். இன்னும் பொய்யனாய் தேவரீரையும், எம்பெருமானையும் விட்டுப் புறந்திரியுமவனான அடியேனை மேல் விழுந்து அடிமை கொண்டதுமன்றி, மெய்யாம் வகையில் மேல் செய்வனவற்றைச் செய்தீர்.

88. மெய்யார் திகிரியையும் மேவார் செருக்களத்தில்
உய்யா வகைமுழுங்கும் ஒண்ணைந்தும் – மெய்யாரும்
எட்டெழுத்தும் புண்டரமும் இன்னருளே நாமமும்நின்
பட்டமுந்தும் பங்கயமீந் தாய்.

ஒளிப்பிழம்பாகத் திகழும் திருமேனியையுடைய சுதரிசனாழ்வானையும், விரோதிகள் நிறைந்துள்ள யுத்தக்களத்தில் புகுந்து, விரோதிகள் குடல் குழம்பும்படி முழுங்கும் பாஞ்ச சந்நியாழ்வானையும் முறையே வலது தோளிலும் இடது தோளிலும் பொறித்து உண்மையறிவினை விளைப்பதற்கு இன்றியமையாத திருவஷ்டாக்ஷர மந்திர முதலானவற்றையும் திருமண்காப்பையும் திருவாராதன தெய்வமான தேவரீருடைய திருவடி நிலையும் ஈந்தருளினீர்.

ஈந்த,

89. அருளே அருள்தந்த அன்னே சுரக்கும்
பொருளே இணையடிகள் பொன்னே – மருவார்கள்
அங்கம் அடரும் அயிந்தைவாழ் அண்ணலே
இங்கிறைவ! ஆள்கவத் தா.

இவையெல்லாம் தந்த, அருளே ஒருவடி வென்னலாம்படியான ஸ்வாமிகளே! அடியேன் கடைத்தேற அருளைத்தந்த இறைவன் போன்றவரே! மிகவும் சுரந்து மிக உண்டான செல்வமே! பொன்போலுமழகிய இணைந்த திருவடிகளையுடையீரே! விரோதிகளைப் பறிப்பது போல் ஒழிக்கும் திருவயிந்தையில் கோயில் கொண்டுள்ள உற்ற ஸ்வாமியே! மேன்மேலும் இங்ஙனமே ஆள்வீராக!

**90. அத்தாநீ செய்த அடியேன் அறிந்திலனே**
**பித்தாம் உறவின்கண் பேதுற்று – சித்தம்**
**கலங்கி இருமையின்பம் கைவிட்டேன் மீட்டு**
**நலங்கொள் மனத்திரங்கி நல்கு.**

ஆசார்யராகிய ஸ்வாமிகளே! தேவரீர் அடியேன் விஷயத்தில் செய்த உதவியை அறியாமல் ஆபாசபந்துக்கள் பக்கல் பற்றுடையனாகி தேவரீர் அருளிய இருமையின் பத்தையிழந்தேன் ஆனந்தாவஹமான திருவுளத்தில் இரக்கங்கொண்டு மீட்டு அடியேற்குத் தந்தருளும்படி ப்ரார்த்திக்கிறேன்.

**91. நல்குங் கமலநேர் நாண்மலர்த் தாள்தொடங்கி**
**பல்சுவைய மேனி பரியந்தம் – பல்சுவையில்**
**பாடிப் பரவிய பாணன்சேர் பாடியனே**
**ஈடில் கதியாம் எமக்கு.**

நலமனைத்தும் நல்குந்திருமகள் தோற்றத்துக்கேதுவாகிய அன்று பூத்த தாமரைப் போன்ற திருவடி மலர் தொடங்கி, மிக்க பேரழகுக்குக் கொள்கலமாகிய திருமேனி பரியந்தமாக பலவிதமான பாட்டுச் சுவையுண்டாம்படி பாடிப்பரவிய திருப்பானாழ்வாரைத் தஞ்சமடைந்த ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளே! நீரே எந்தமக்கு ஒப்பற்ற கதியாகுமென்பதாம்.

**92. எமக்குங் கதியுண்டே? எண்பதி னாறுதலம்**
**தமைவாழ்த் தியதே தகும்பே – றமைக்கும்**
**பரகாலன் தாளிணையே தஞ்சம்கொள் பண்பன்**
**அரவிந்த மன்னதிருத் தாள்.**

திருமங்கையாழ்வார் எண்பத்தியாறு திவ்வியதேசங்களை வாழ்த்தி, அதுவே பெறும் பயனான நலமந்தமில்லாதொரு நாடென்றமைக்கும் இவர் திருவடிகளே தஞ்சமென்று கொள்ளும் ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளுடைய தாமரைப்போன்ற திருவடிகளே ஏதிலனான அடியேற்குகதியாகு மென்பதாம்.

**93. தாளிணைகள் தானவர் தேவர் தொழுதிறைஞ்ச**
**நாள்தொறும் மாமுனி வாழ்த்துரைக்க – நாள்தொறும்**
**பாவியேனைக் கைக்கொண்ட பாடியன் நாவழுத்த**
**தேவனாதன் சேரயிந் தை.**

திருவயீந்த்ர புரமானது தினந்தோறும் தானவர்களும் தேவர்களும் வந்து வந்து தொழுதிறைஞ்சவும், ஸ்ரீமன் மணவாளமாமுனிகள் நாள்தொறும் வாழ்த்துரைக்கவும், பாவியேனான அடியேனையும் கைக்கொண்ட ஸ்ரீமத் பாஷ்யமாசாரிய ஸ்வாமிகள் நாவினால் நாள்தொறும் நவின்று வழுத்தவும் தேவனாதன் கோயில் கொண்ட தலமாகும்.

**94. அயிந்தையில் பாடிய யாதறியா நாயேன்**
**கயவனெனைக் கண்டுகந் தன்பின் – நயந்தழைத்து**
**நன்மைமுற்றும் ஊட்டினையே! நாண்மூன்றில் அன்றின்றும்**
**நன்மைமிகும் பேறனைத்தும் நல்கு.**

திருவயீந்திரபுரத்தில் நித்திய வாசம் செய்யும் ஸ்ரீமத் பாஷ்யாசார்ய ஸ்வாமிகள், உண்மை உணர்வில் ஒன்றும் அறியாத கீழோனானக் கயவனாகிற என்னைக் கண்டு சௌசீல்யத்தால் உகந்தருகில் அழைத்து நன்மையென்பதனைத்திலும் மேம்பட்ட நன்மையை முற்றூட்டாக மூன்று நாளில் அக்காலத்து ஊட்டியருளினீர்கள். அதுபோல் நன்மை மிகும் பேறனைத்தும் இன்று நல்குவீராக!

**95. நல்கும் நலமிக்க ஆசார்யர்க் கெல்லைநீர்!**
**பல்புகழில் மிக்கபுகழ்ப் பாடியர்நீர் – அல்வழியில்**
**செல்வேன் சிரத்தில் அடிசூட்டிச் சீடர்களில்**
**எல்லையிவ லென்னும் பேர்.**

பல புகழில் மிக்க புகழாளராம் ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகள் நீராகும். அதே நிலையில் ஆசார்யரென்பவரில் முடிவில் உயர்ந்தவரெனத் தக்கவர் நீரே. அடியேனோ நன்மைக்கு மாறான அல்வழியிலேயே செல்பவன். இத்தகு அடியேனுக்கு சிரோ பூஷணமாக தேவரீர் திருவடித்தாமரைகளைச் சூட்டி அலங்கரித்தருளி சிஷ்யவர்க்கத்தில் இவன் முடிவானவனென்னும் பேர் நல்குவீராக!

றந்தாதி

**96. பேர்பிதற்றிப் பெற்றேன் பெறும்பரி சங்ஙனமே**
**சீர்பாடிப் பெற்றேன் சிறப்பெல்லாம் – காரேய்**
**கருணைதனைக் கண்டு கலக்கங்கள் தீர்ந்தேன்**
**இருணிலத்தில் பாடியன்தாள் ஏய்ந்து.**

ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளின் திருநாமத்தைக் கண்டவாறு பிதற்றியும் மெய்யடியார் கூட்டத்துப் பெற வேண்டிய பகவதனுபவ பயனைப் பெற்றேன். அவ்வாறே அவர் சீர்களைப் பாடி உய்வு பேற்றுக்குரிய சிறப்பெல்லாம் பெற்றேன். கைம்மாறுகருதாத கொண்டல் முகில் போல் இந்த இருள்தருமாஞாலத்தில் அவர் தம் கருணைப் பெருக்கத்தைக் கண்டு உய்வகையில் குறையுண்டாக்கும் கலக்கங்கள் தீரப்பெற்றேன். இவ்வளவும் இவர் தம் திருவடிகளைப் பொருந்தியதலாகும்.

**97. ஏய்ந்த கருணைவடி வானோன் இவனன்றே**
**வாய்ந்த ஒழுக்கநிலை நின்றோனே – மாய்ந்து**
**அறிவின்மை முற்றறிவின் பாடியன் மிக்கோன்**
**பிறிது பெறுவ தெவன்?**

ஒழுக்கத்திற் காணுமிடத்து மிகப்பொருந்திய கருணையே வடிவானவர்களாகிய ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய சாமிகளே யாவர். இந்த கருணைக்கேற்ற ஒழுக்கமிக்காரும் ஸ்ரீமத் பாஷ்யமாசார்யரே தான். அறிவின்மை தொலைந்து முழுமெய்யுணர்வின் மிக்கவரென்பதில் குறையேதுமில்லாதவர். இத்தகு பண்புகளிருக்க இதில் மிக்க பிரிதொரு பண்பு பெறுவதெது?

**98. எவன்தான்? அயிந்தையில் ஈடிணை யில்லான்**
**எவன்தான்? மதுரகவி நிட்டை – எவன்தான்?**
**வரயோகித் தாள்சேர்ந்த தேவநாதன் சேயாம்**
**பரனாம் இவனெங் கதி.**

திருவயிந்திரபுரத்தில் ஈடிணையில்லா ஆசார்யவரே? மதுரகவி நிட்டையை மேற்கொண்டிருந்தவர் யாவரே? ஸ்ரீமன் மணவாள மாமுனிகளையே கதியென்று பற்றிய தேவனாதாசார்யர் திருக்குமாரரென்ற சிறப்புற்றவர்யாவரே? இத் தன்மைகளால் மேன்மையுள்ளவராகிய ஸ்ரீமத் பாஷ்யமாசார்யஸ்வாமிகள் ஆகிய நீரே எங்களுக்குக் கதியாவீர்.

**99. கதியொன் றிலதென்போல் காசினியில் யாது?**
**மதிதான் இலதில் உலகில் – எதுவொன்**
**றிதுவேயோ? பாடியற்குப் பற்றுதற் கேது**
**இதுபோல்வார் யாரே? இனி.**

யாரும் பற்றத்தகாத கதியற்றவன் என்போல்வாருலகில் யாவர்? அறிவின்மையில் இந்நில உலகில் என்போல்வார்யாரே? இனி இத்தகு நிராதீன நிலைகளே ஸ்ரீமத்பாஷ்யமாசார்யர் தனக்குத் தஞ்சமெனக் கருதி கைக்கொள்வதற்குங் காரணமாயினவாம். இதனால் ஸ்ரீமத்பாஷ்யமாசார்ய சுவாமிகளுக்கு உலகில் நிகரில்லை யென்பதாம்.

**100. இனிமறவேன் செம்பவள வாய்க்கொண் டிசைத்து**
**வினவி முறுவல் மிகப்பூத்து – நனிமகிழ்ந்து**
**செந்தா மரைக்கண் கடைக்கணித்த சீர்மைதனை**
**அந்தோயான் உய்வழியீ தென்று.**

அடியேனை ஒரு பொருளாக மதித்து எதிரிலமரச் செய்து சிவந்த பவளம் போன்ற செவ்வாய்க் கொண்டு மந்திரார்த்தங்களைச் சொல்லி வினாவுதல் செய்து, தக்க விடையளிக்க வெண்முறுவல் மலரச் சிறு நகைபுரிந்து மிக்கபேருவகை கொண்டு செந்தாமரை யொத்த திருக்கண்கள் கொண்டு கடைக்கணித்து உகந்த, இந்த கௌரவச் செயலை அந்தோ! அந்தோ! இவைகளே அடியேற்கு உய்யும் மார்க்கமென்று எக்காலும் நினைவிற்கொண்டு இனி எக்காலும் மறவேன் என்பதாம்.

**101. என்றும்நின் தாளிணைக்கண் சென்னி யிலக்காகும்**
**என்றும் அருண்மொழியுள் ளெஞ்சாது – நின்றருளும்**
**சேமத் திருமேனி செவ்விக்கண் ணின்றிலகும்**
**யாமிழைத்த தென்ன தவம்?**

ஸ்ரீமத் பாஷ்யமாச்சார்ய ஸ்வாமிகளே! தேவரீருடைய திருவடித் தாமரைகளே அடியேன் சென்னிக்கு இலக்காக அமைந்துள்ளன. தேவரீர் கருணை கொண்டு அருளிச் செய்த அருள்மொழிகளே உள்ளத்தில் குறைவற்று என்றும் நின்று பிரகாசிக்கும். தேவரீர் திவ்யமங்கள விக்ரஹமே அழகிய கண்களில் விளங்கிக் கொண்டிருக்கும். இத்தகு, சீரிய பயன்களைக் கொண்டிருக்க யாம் எத்தகைய தவமியற்றினேனோ? தெரியாது.

றந்தாதி

**102. தவமிழைத்தோர் யாரே? துமியன்போல் கல்லா**
**தெவையெனைத்தும் கேட்டுத் தெளிந்தார்? — யவரேயோ?**
**பாடியன்தன் னின்னருளே யிங்கன் பகர்வித்த**
**ஈடில்லா நீசனெனை ஏற்று.**

தனித்து கதியற்று நிற்பவன் யான். இத்தகையன் பெருந்தவம் செய்த அடியனைப் போல் யாரே? இனி முறையாகக் கல்லாமலே சீரிய நூல்களைக் கேட்டுத் தெளிந்தோர் யார்? ஐயந்திரிபுகளாகிற குற்றங்களைந்து தெரியக்கற்பிக்கும் ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளருள் ஈடில்லா நீசெனனை ஏற்று இவ்வண்ணம் சொல்லும்படி செய்தது.

**103. ஏற்றேன் பிராட்டி திருவருளால் எம்பிரானை**
**ஏற்ற னிவனருளால் பாடியனை — ஏற்பதும்**
**ஏலாத தென்பதிலை பாடியன்தன் இன்னருளால்**
**ஏலாவை குந்தமுத லேற்பு.**

கருணை வடிவாயமைந்த பிராட்டி கடாக்ஷத்தால் எம்பிரானை கதியாக ஏற்றேன். இவன் தன்னின்னருளால் ஸ்ரீமத் பாஷ்யமாசாரியனை கதியாக ஏற்கப் பெற்றேன். இவனருளால் பேறு பெருவதெவையுளதோ அவைகளில் இன்னது ஏற்கமுடியும் இன்னது ஏலாதது என்பதில்லை. ஏற்றரும் வைகுந்த முதலாக வுள்ளதனைத்தும் ஏற்கும் வாய்ப்பினைப் பெற்றோம் என்பதாம்.

**104. ஏற்பதேநின் தாளின்றி என்சிரத்தால் வேறொன்றை**
**ஏற்றறேல்நின் சார்பன் றயலொன்றை — ஏற்பதே?**
**தாளருமை கண்டேன் குருகூர்ச் சடகோபன்**
**ஆளுடையான் கண்ட வாறு.**

ஆசாரிய ஸ்வாமிகளே! அடியேன் தேவரீர் திருவடிகளின் அருமைப்பாட்டை அறிந்தவன். எவ்வாறறிந்தேனென்னில்? திருக்குருகூரில் அவதரித்த சடகோபனாம் நம்மாழ்வாரை எம்பெருமான் நோக்கி, 'நீர் விலக்ஷணமான மோக்ஷமென்று அடிக்கடி சொல்வீரே அந்த மோக்ஷம் தந்தோமென' 'அந்தமோக்ஷம் வேண்டா, தேவரீர் திருவடிகளை சிரசிலணிவித்தருள வேண்டு'மென்றார். அதைப்போல் தேவரீர் திருவடிகள் சார்பன்றி வேறொன்றை ஏற்கமாட்டேன் என்பதாம்.

105. ஆறும்பே றென்றறியார் ஆசிரியர் இந்நிலையில்
மாறில் மறைமுற்றும் ஐயமின்றித் – தேறியநீர்
ஏதிலன் என்னை இருயென்று முற்றுணர்த்தும்
கோதிலருள் உந்தங் குணம்.

உலகில் ஆசாரியனென்று தம்மைச் சொல்லிக் கொள்ளுமவர்கள் இன்னது சாதனம், பயன் இன்னது என்று வேறுபடுத்தி அறியமாட்டார்கள். இந்த நிலையில் தேவரீர் வேதங்களும் இவைகளின் சாரமான மந்திரங்கள். இவைகளில் பொருள்களை ஐயந்திரிபற நன்குணர்ந்தவர் நீரே. இத் தகுதியுடைய நீர் ,அடியேனோ மூடர்களில் முதல்வன். இத்தகைய அடியேனை எதிரிலிரு என்று இருத்தி அனைத்தும் ஐயம் திரிபற உணர்த்தினீர். இதனால் உந்தம் குணம் யாதுங் குறைவில்லா அருளொன்றேயாக அறிகிறேன்.

106. குணந்திகழ்சீர்க் கொண்டலே பாடியனே தூயோய்
மணமலிந்த தாமரைத் தாளோய்! – குணமலிந்த
சீநிவாசன் தாளிணையோய்! தேவநாதன் சுதனேயோ!
கோபாலன் சொல்லமுதக் கூட்டு.

குணங்களால் கைம்மாறு கருதாது பெய்யும் கொண்டல் மேகம் போன்ற ஸ்வாமிகளே! ஸ்ரீமத் பாஷ்யமாசார்யர் என்ற திருநாமமுடையவரே! மணமே உபாதாநமான தாமரையே போலுந் திருவடிகளையுடையீரே! அடைந்தாரை உய்விக்கும் நற்பண்புகளே திருமேனியான ஸ்ரீநிவாச ஆசார்யஸ்வாமிகளின் திருவடிகளாகவே இருப்பவரே! ஸ்ரீமத் தேவநாதசார்ய ஸ்வாமிகளின் திருக்குமாரரே! ஸ்ரீமத் கோபாலாசார்ய ஸ்வாமிகளின் சொல்லமுதமே திருமேனியாக–வுடைய ஸ்வாமிகளே என்றவாறு.

107. கூட்டமு துள்ள தினிமையொருங் கேக்கூட்டி
நாட்டும் தெளியுணர்வை ஐயமின்றி – நாட்டிச்
சிரத்தில் பரன்தாளும் பாடியன்தாள் சேர்க்கும்
வரமிக்க வைகுந்த வான்.

முன்தோன்றல்களான ஆழ்வாராசார்யர்களாகிய சான்றோர்களுடைய சொல்லமுதக் கூட்டமுதின் இனிமையை அடியேனுள்ளத் தொருங்கே கூட்டி இதன் பயனான மெய்யுணர்வை ஐயந்திரிபின்றி நிலைநிறுத்தியும்,

றந்தாதி

இதன் பயனாக திருமகள் கேள்வன் திருவடித்தாமரைகளையும், ஸ்ரீமத்பாஷ்ய மாசார்ய ஸ்வாமிகளின் திருவடித்தாமரைகளையும் அடியேன் சிரோ பூஷணமாக சேர்த்தது யாதோ எனின்? ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளின் அபிமானம் பெற்ற, இவனுக்கு நாம் முற்பட்டோமாக வேண்டுமென்று சிறப்புக்களனைத்தும் ஒருங்கேயுடைய வைகுந்தமென்கிற பரமபதமானது, 'சிரோபூஷணத் தோடுகூடிய இவனை நம்மிடத்தில் நிறுத்திக் கொள்ள வேண்டு' மென்ற அவாவோடு இருத்திக் கொண்டது என்பதாம்.

**108. வானாளும் சீர்சீநி வாசன் மலரடியைத்**
**தான்சேர் தகவுடைய பாடியன்தன் – தேன்பெருகு**
**செந்தா மரையிணையே சிந்திப்ப தென்பேறா**
**அந்தோ! அவனருளும் சீர்.**

வைகுந்தவானாட்டில் ஆட்சி செலுத்தும் சிறப்புகளனைத்தும் ஒருங்கே பொருந்திய ஸ்ரீமத் ஸ்ரீநிவாசாசார்ய ஸ்வாமிகள் தாமரை போன்ற திருவடிகளைச் சேர்ந்த கருணையே வடிவான ஸ்ரீமத் பாஷ்யமாசார்ய ஸ்வாமிகளுடைய செந்தாமரையொத்த திருவடியிணையையே சிந்திப்பதையே அடியேனுடைய பரமபிரயோஜனமாக உடைய அடியேனை, ஆசார்யஸ்வாமிகள் தம் கருணையால் 'ஐயோ!' என்றிரங்கியருளும் அருளையே அடியேன் சிறப்பாக உடையவனாவேன் – என்பதாம்.

## நூற் பயன்

**இருள்தருமா ஞாலத் தியங்கும் உயிர்கள்**
**அருந்துயரில் ஆழ்ந்தழுந்தல் உண்மை –அருந்துயர்தீர்ந்(து)**
**அந்தமில்பே ரின்புமுற ஆசார்ய னைத்துதிநூற்**
**றந்தாதி யன்றோ கதி.**

இருள்தருமாஞாலமாகிய லீலாவிபூதியில் நிரந்தரமாக இயங்கிக் கொண்டிருக்கும் ஆத்மாவானது, எய்தற்கரிய நிரம்பிய துன்பத்தில் அழுந்துதலென்பது உண்மை விஷயமாகும். இந்த துன்பத்தில் மீண்டு எல்லையில்லா இன்பமேயான பேரின்பமெய்த ஆசார்யனிடத்து தான் பெற்றபேற்றினைஎண்ணித் துதிப்பதேயாகும். அதற்கு வழி ஆசார்ய நூற்றந்தாதியை இடைவிடாமல் அநுசந்திப்பதே ஏற்றகதியாகும்.

**சுபமஸ்து.**

ஶ்ரீ:
ஶ்ரீமதே ராமாநுஜாய நம:

## கச்சிக் கிடாம்பி சின்ன ஸ்வாமிகள் வாழித்திருநாமங்கள்
## க.கி. யாமுநாசார்ய ஸ்வாமிகள்

"ஆத்ரேய ராமாவரஜ குரோர் புத்ரம் ததாஸ்ரயம்
வேதாந்த த்வய ஸம்பந்நம் யாமுநம் ப்ரணமாம்யகம்"

மடஞ்சால் மநனே வல்வினைகள் சிந்தும்
உடைந்தோடும் ஊழ்வினைசால் சென்மம்—தடஞ்சூழ்ந்த
பூதூர்மன் தன்னருளும் பொன்னருளும் நின்வயமாம்
யாதானும் யாமுநனென் றேத்து.

சீராரும் திருவயிந்தை திகழவந்தோன் வாழியே
சேயாய்ய டியர்க்கவன்தன் தாளடைந்தோன் வாழியே
நீராரைப் பசிஉத்தி ராடத்தோன் வாழியே
நீள்சரணா எதிபதிதன் னிணையடியோன் வாழியே
பார்புகழும் பூருவர்தாள் பற்றுமவன் வாழியே
பதின்மர் அருள்மொழிகோதை பரவுமவன் வாழியே
ஏரார் உலகாரியன் நூலுரைப்போன் வாழியே
எஞ்ஞான்றும் யாமுனன்தாள் எம்கதியா வாழியே

வாழி திருப்பாடி யன்தன்சீர் மல்கிய மாதகவால்
வாழும் சீரியா முநனென் நிறைகுரவன் – வாழியவன்
மாறன் பிறைப்பொருளும் ஆகமத்தின் மான்பொருளும்
தேறும் படியுரைக்கும் சீர்.

சேவிப்போர் பிறப்பறுக்கும் திருவடிகள் வாழியே
செம்பொன் செய்மலை வெயிலேய் செம்பட்டும் வாழியே
பூவியலும் நாபியொடு புரிநூலும் வாழியே
பொருவரிய தோளிணையும் புரிகண்டம் வாழியே
பாவியரும் உய்யப்பணிக்கும் பவளவாய் வாழியே
பாண்மதிரய் திருமுகமும் கருணைவிழி வாழியே
நீவியெனும் குரவருண் மொழிஉளத்தோன் வாழியே
நீள்புகழ்யா முநன்தாள் நினைப்போரும் வாழியே

அடியார்கள் வாழ அரங்கம் முதல்வாழ
சடகோபன் தண்டமிழ்நூல் வாழ—படியிலிரு
மன்னும் மறைப்பயிற்றும் யாமுனனென் தேசிகனே!
இன்னுமொரு நூற்றாண் டிரும்.

கச்சிக் கிடாம்பி யாமுநாசார்ய ஸ்வாமிகள் திருவடிகளே சரணம்

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## கச்சி;ககிடாம்பி பெரிய ஸ்வாமிகள் வாழித்திருநாமங்கள்
## க.கி. பாஷ்யமாச்சார்ய ஸ்வாமிகள்

ஆத்ரேய ஸ்ரீநிவா சார்ய
பதபங்கே ருஹா ஸ்ரயம்
தேவநாத குரோர் ஸூநும்
ராமாநுஜ குரும்பஜே.

ஏங்கும் மடநெஞ்சே! எம்பெருமான் ஈந்தநிதி
ஓங்குபுகழ் பாடியன்தன் ஒண்மலர்த்தாள்—தேங்கியநீர்க்
கண்டா மரையிணைகள் கைத்தா மரையிணைகள்
உண்டாய காலமெல்லாம் உள்.

### தமிழ்த் தனியன்

அநவரதம் தெளிசிங்கர் அடிதொழுவோன் வாழியே
அருள்ஸ்ரீ னிவாசார்யன் அடைந்துய்ந்தோன் வாழியே
அநகன்தேவ நாதார்யன் அருஞ்சேயோன் வாழியே
ஆதிரைநாள் புரட்டாசி அவதரித்தோன் வாழியே
அனைத்தறிந்த கோபாலர் அடைந்தறிந்தோன் வாழியே
அரங்கம்முதல் உகந்தருள் மாநிலத்தன்பன் வாழியே
அநர்த்தமிலா(து) உலகார்யன் நூலுரைப்போன் வாழியே
அயிந்தைவர முனிதாள்சேர் பாடியன்தாள் வாழியே

எதிபதிதன் இணையடியே கதியுடையோன் வாழியே
ஈடில்லா ஈடுதனை எடுத்துரைப்போன் வாழியே
பதின்மருடன் கோதைமொழி பரிந்துகற்றோன் வாழியே
பார்புகழும் பூருவர்தாள் பற்றுமவன் வாழியே

மதுரகவி நிட்டையையே நிட்டை கொள்வோன் வாழியே
வன்முடும்மை இருகுரவர் மலரடியோன் வாழியே
மதிமிகுந்த வரமுனிதாள் வாழ்த்துமவன் வாழியே
பாடிய ராமாநு சாரியன்தாள் வாழியே

வாழிசிரீ நிவாசார்யன் கோபாலன் மாதகவால்
வாழும்சீ பாடிய மாசார்யன் – வாழியவன்.
மாறன் மறைப்பொருளும் பாடியத்தின் மான்பொருளும்
தேறும் படியுரைக்கும் சீர்.

சென்மம் தவிர்த்தருளும் சேவடிகள் வாழியே
சேமஞ்செய் பொன்னாடைத் திருநாபி வாழியே
தன்மம் விரிந்தனைய திருமார்பும் வாழியே
தரணிதனில் அஞ்சலெனும் கரதலமும் வாழியே
நன்மருந்து பொழிமதிபோல் திருமுகமும் வாழியே
நளினஞ்செய் கருணைமொழி கண்ணிணையும் வாழியே
மென்மை குவிந்தனைய திருமேனி வாழியே
மெய்மைஇரா மாநுசன்தாள் மேன்மேலும் வாழியே

ததியர்கள் வாழ தலநூற்(று) எண்வாழ
மதிநலஞ்சால் மாறன் மறைவாழ – பதியார்ந்த
மண்ணுலகும் வாழசிரீ பாடியமா தேசிகனே
இன்னுமொரு நூற்றாண்டி டிரும்.

கச்சிக் கிடாம்பி பாஷ்யமாசார்ய ஸ்வாமிகள் திருவடிகளே சரணம்.

## ஸ்ரீமத் இராமாநுஜர்



யோ நித்யமச்சுத பதாம் புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணி த்ருணாயமேநே,
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ: